# மரக் கலப்பைகட்டி உழுத இடத்திலே டிராக்டர்

ஆம். கூடவே வேறு பல கருவிகள்- உயரிய உரங்கள், விதைகள். உழவருக்கு இன்று இவையனைத்தும் வேண்டும்: வேளாண்மையை நவீன மயமாக்கி, பொருளாதாரத்தின் பிற துறைகளுக்கு ஈடாக முன்னேற வைப்பதற்காக அவை வேண்டும்.

கிளைபரவியிருக்கும் அலுவலகங்கள் மூலம் ஸ்டேட் பாங்க்... விவசாய வளர்ச்சி, நில அபிவிருத்தி, நீர்ப் பாசன, எந்திர சாதன வசதிகளை வழங்கல் ஆகியவற்றுக்கு நிதி உதவியளித்து வருகிறது. தவிர, தோட்டக்கலை, விதைப் பண்ணைகள் கால்நடைப் பராமரிப்பு, பால் பண்ணை, கோழிப் பண்ணை, மீன் பண்ணை, தோட்டப் பண்ணைகள் ஆகியவற்றுக்கும் நிதி வழங்கி வருகிறது ஸ்டேட் பாங்க்.

## சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்



S, 349 TM

# கல்கி
## பொருளடக்கம்

பிலவங்க, தை, 28 ✻ பிப்ரவரி, 11





பட விளக்கம் பக்கம் 4



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 27 ☐ இதழ் 28

# வன்முறைக்கு இடமில்லை

உள்நாட்டில் நடக்கும் தப்பிதங்களைத் தீர்ப்பதற்காக வன்முறை நடவடிக்கைகளும் நியாயமானவை என்று கூறுபவர்கள் அராஜகத்தை ஆதரிப்பவர்களாகவே இருக்க முடியும். ஒரு மக்கள் தொகையோ அதன் குறிப்பிடத்தக்க பகுதியோ வன்செயல்களில் ஈடுபடுவாராயின் தாங்கள் ஜனநாயகத்துக்குத் தகுதி பெற்றவரல்லர் என அவர்கள் நிரூபித்துக் கொண்டதாகவே ஆகும். சர்க்கார் என்ற அமைப்புக்குப் பின்னுள்ள பௌதிக பலம் வேறு; சர்க்காரை எப்படி நிருவாகம் நடத்தச் செய்ய வேண்டும் என்பதற்காக மக்கள் வன்முறை மேற்கொள்வது வேறு. முந்தையது தண்டநீதியினால் ஏற்பட்ட தேவை. பிந்தையதோ சர்க்காரின் பலம் கொண்டு அடக்க வேண்டிய ஒரு ஜனநாயக விரோதச் சின்னம்.

வெள்ளம் வேறு; பாசனத்துக்காக நீர் விடுவது வேறல்லவா? யமுனையோ காவிரியோ கரை மீறிப் பெருகி நாட்டை வெள்ளக் காடாக்குவது போல் இப்போது இந்தியாவின் பல பகுதிகளில் சட்ட விரோதமான கிளர்ச்சிகளைப் பார்க்கிறோம். தேச சேவைக்காகக் கட்டுப்படுத்தி வைத்து உபயோகத்துக்குக் கொண்டு வர வேண்டிய சக்தியே இன்று கட்டவிழ்த்துக் கொண்டு சேவைக்குப் பதிலாக நாசத்தில் இறங்கியுள்ளது.

மக்கள் ஊமையராக, ஜடமாக இருக்க வேண்டுமென நாம் சொல்லவில்லை. ஆனால் நமக்கு ஜனநாயகம் வேண்டும் என்பதை மறக்காமலிருப்போம். ஜனநாயகத்தில் வன்முறைக்கு இடமேயில்லை என்பதையும் நினைவில் கொள்வோம். கௌஹாட்டியிலும், பாட்னாவிலும் நாம் கேள்விப்பட்ட வன்செயல்கள் தப்பைத் திருத்தும் நோக்கத்திலேயே தோன்றியிருக்கலாம். வாதத்தாலும், அமைதியான வற்புறுத்தலாலும் திருத்த முடியாத சர்க்கார் வன்முறைக்கே அசைந்து கொடுக்கிறது என்ற பழைய அநுபவத்தின் மீது இந்தக் கலவரங்கள் நிகழ்ந்திருக்கலாம். ஆனால் ஜனநாயக விரோதமான முறையில் பரிகாரம் காண்பதென்கிற வழக்கமே பரிகாரம் காண வேண்டிய ஒரு பெரிய நோயாகும். ஒரு தீமையை விலக்க வன்முறையைப் பரிகாரமாகக் கொள்கிறார்கள். உடனடியாக, தாற்காலிகமாகப் பரிகாரமும் கிட்டலாம். ஆனால் எந்தத் தீமை விலக்கப்பட்டதோ அதைவிடப் பெருந்தீமையாக வன்முறை என்கிற ஆயுதம் நிலைபெற்று விடும்.

இச்சமயத்தில் மகத்தான முறையில் ஏற்பாடு செய்யப்படும் காந்திஜியின் நூற்றாண்டு பற்றிக் குறிப்பிடுவது பொருத்தம். காந்திஜியுடைய வாழ்க்கையின் — காந்திஜியுடைய வாழ்க்கைப் பணியின்—ஆதாரசுருதியான அகிம்சை என்பதை வைத்து நெய்யப்பட்ட நம்பிக்கைகளைத் துயரமான முறையில் தகர்ப்பனவே இப்போது பெருகிவரும் வன்முறை அலைகள். நவீன உலகத்தில் இந்தியா முன்னேற முடியாது என்று கருதிய நாடுகளுக்கு இது ஒரு வேடிக்கைக் காட்சியாக இருக்கும். ஆனால் காந்திஜியின் தேகத்துடன் அவரது வாழ்வுப் பணியும் தகனமாகிவிடாது என்று நம்பிய நட்பு நாடுகளுக்கு இன்றைய இந்தியாவின் போக்குப் பெருத்த விசனமளிக்கும். இந்தப் போக்கு நிறுத்தப்பட்டால் தான் இந்தியாவுக்கும் நல்லது; ஜனநாயக உலகு முழுவதற்கும் நல்லது. வன்முறையைக் கண்டிப்புடன் அடக்க வேண்டும். ஜனநாயக அரசாங்கங்களில் தவறுகள் நேரலாம். ஆனால் அதைத் திருத்துவதற்கு வன்செயல்கள் அநுமதிக்கப்படுவதற்கில்லை. இவ்வாறு மக்களை ஓர் எல்லைக்குட்படுத்துவதால், பொறுக்கவொண்ணாத அளவுக்கு அரசாங்கத்தின் தவறு நீடித்துவிடலாம். இருப்பினும்கூட வன்முறைக்கு அநுமதி தராதிருப்பதே ஜனநாயகத்தின் சாரம்.

இங்குதான் நமது தேசிய துவஜ வாசகமாகிய வேதவாக்கு உரக்கக்

கோஷிக்கிறது: ஸத்யமேவ ஜயதே — உண்மையே வெல்லும். வன்முறை வெல்லாது. இறுதியில் நியாயமே வெற்றி பெறும். செய்வதறியாது கலவரமடைந்து வன்முறையை மேற்கொண்டால் தவற்றைத் திருத்துவதற்குப் பதில் இரட்டிப்பாக்கியதாகும். சக்தி வாய்ந்த முறையில் வாதமிட்டுப் பொறுமையுடனும் தியாகத்துடனும் தவற்றை எதிர்ப்பதே ஜனநாயக வழி.

வன்முறைக்கு அடுத்தபடியாகச் சொல்ல வேண்டியது, பிரிவினையைப் பற்றிப் பதற்றத்துடன் பேசுவதாகும். இந்தியா துண்டு துண்டுகளாயின் வாழ முடியாது. இன்று இந்தியாவின் எந்தப் பகுதியுமே மற்றவற்றினின்று பிரிந்தால் வாழ முடியாது. பழைய காலத்தில் ஐம்பதுக்கு மேற்பட்ட சுதந்திர ராஜ்யங்கள் இருந்த போதிலும் சமய உணர்வும், நாகரிகமும் நாட்டை ஒன்றாக்கி ஓர் உபகண்டமாக்கியிருந்தன. நவீன உலகில் இது சாத்தியமல்ல. நாம் தனித்தனியே பிரிந்தால் வல்லரசுகளுக்கு விருந்தாவோம்.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)**

# என்ன சேதி?

### சுபசூசகம்

சுதந்திரமான தொழிற்சங்கங்களின் சர்வதேச அமைப்பு ஒன்று உள்ளது. இதன் ஆசியப் பகுதி அண்மையில் புதுதில்லியில் ஒரு பொருளாதார மகாநாடு நடத்தியது. இம் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தவர் இலங்கை உழைப்பாளர் காங்கிரஸ் தலைவர் திரு தொண்டைமான். ஆசிய நாட்டின்



சுதந்திரமான தொழிற் சங்கங்கள், ஆசிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை மனத்தில் கொண்டு இத்தகைய ஒரு மகாநாடு நடத்துவது எதை உணர்த்துகிறது? தொழிற் சங்கங்கள் தொழிலாளர்களின் நலனை மட்டும் பாதுகாக்கும் அமைப்புக்கள் அல்ல, அவை நாட்டின் பொருளாதாரத்தையேகூடக் கவனித்து அதனை உயர்த்தும் விதத்தில் செயல்பட வேண்டியவை என்பதைத்தான்.

தமது தலைமை உரையில் திரு தொண்டைமான் இந்த நல்ல கருத்தை வலியுறுத்தினார். தொழிற்சங்கங்களின் நோக்கத்திலும் மக்கள் அவற்றைப் பற்றிக் கொண்டிருந்த அபிப்பிராயத்திலும் இந்த அடிப்படையில் மாறுதல் ஏற்படுவது வரவேற்கப்பட வேண்டிய சுபசூசகம் என்றார் திரு தொண்டைமான். படத்தில் இடமிருந்து வலமாக: திரு தொண்டைமான், திரு வி. எஸ். மாதுர், திரு மொரார்ஜி தேசாய், திரு மாரிஸ் பலாடினோ.

### மாறன் செந்தமிழ் மாநாடு

'வேதம் தமிழ் செய்த மாறன்' எனப்படும் நம்மாழ்வாரின் அவதார ஸ்தலமாகிய ஆழ்வார்திருநகரியில் இம்மாதம் 17, 18 தேதிகளில் மாறன் செந்தமிழ் மகாநாடு நடைபெறுகிறது. திவ்யப் பிரபந்தங்களின் வீதிவலம், சிறப்பு மலர் வெளியீடு, கலை நிகழ்ச்சிகள் ஆகியன மகாநாட்டின் அம்சங்கள். பெரியோர்கள் ஸ்ரீ வைஷ்ணவப் பிரசாரத்துக்கான வழிமுறைகளை வகுப்பார்கள். ஸ்ரீ ராமானுஜ மிஷனின் ஆதரவில் திரு கே. வேங்கடசாமி நாயுடு அவர்களைத் தலைவராகவும், பேராசிரியர் திரு அ. சீநிவாச ராகவன் அவர்களை வரவேற்புக் குழுத் தலைவராகவும் கொண்டு மகாநாட்டுக்கான ஏற்பாடுகள் நடந்துவருகின்றன. தமிழிடமும், ஆழ்வாரிடமும், ஆண்டவனிடமும் பற்றுக் கொண்டவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்குப் பொருள் அனுப்பி வைக்கலாம். ஸ்ரீ பெரியநம்பி, ரங்காசாரியார், பொருளாளர், மாறன் செந்தமிழ் மகாநாடு, வடக்கு ரதவீதி, ஆழ்வார் திருநகரி, நெல்லை மாவட்டம்.



சென்ற இதழ் அட்டைப்பட விளக்கத்தில் கல்லூரியில் படிக்கும் மாணவரைப் பார்த்து, 'தென்னை மரத்தில் ஏறத் தெரியுமா?' என்று ரசிகமணி டி. கே. சி. கேட்டதாக எழுதியிருந்தோம்.

'ஏன் தென்னை மரத்திலிருந்து குதிக்கக்கூடத் தெரியுமே' என்று பதிலளிப்பதுபோல் ஒரு புகைப்படத்தை எடுத்துப் பொருளடக்கப் பகுதிக்கென அனுப்பியுள்ளார், திரு கே. ராமச்சந்திர பாபு.

'குதித்துக் காலை ஒடித்துக்கொள்ளவும் முடியும்!' என்பதை ஞாபகப்படுத்துகிறார் நமது ஓவியர்.



# அண்ணாவுக்கு.....

*(26–1–1968 ''விடுதலை''யில் திரு ஈ. வெ. ராமசாமிப் பெரியார் எழுதியது)*

23–1–68ந் தேதி சென்னை சட்ட சபைத் தீர்மானம் நல்ல அளவுக்கு மிகவும் பொருத்தமானதும் அவசியமானதுமான தீர்மானமாகும். அதுபற்றி மிக மிகப் பாராட்டுகிறேன்.

ஆனால் காலேஜுகளில் ஆங்கிலத்தில் படிப்பிப்பதை மாற்றித் தமிழில் போதிக்க வேண்டும்; அதாவது தமிழைப் போதனா முறை மொழியாகக் கொள்ள வேண்டும் என்று முதலமைச்சர் கருத்தறிவித்திருப்பதை என்னால் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லை என்பதை மிக்க வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படி நான் சொல்லுவதற்கு முன்னேற்றக் கழகத்தார் என்னை மன்னிக்க வேண்டும். இன்றைய ஆட்சியைப் பாதுகாப்பதில் கழகத் தோழர்களைவிட நான் அதிக அக்கறை கொண்டவன். எனக்கு இது விஷயத்தில் நடிக்க வேண்டும் என்கிற அவசியம் ஒன்றுமே இல்லை.

இந்தக் கருத்து நமது சந்ததியின் எதிரிகள் தெரிவித்திருக்க வேண்டிய கருத்தாகும்.

### அறிவும் உத்தியோகத்தில் விகித உரிமையும் நமது ஜீவநாடியாகும்.

நமக்கு ஜீவநாடி அறிவு. இரண்டாவது, ஆட்சியில் பதவிகள் பெற நல்ல பங்குபெற வேண்டியதாகும். எந்தக் காரணம் கொண்டும் இவ்விரண்டும் புறக்கணிக்கக் கூடியதல்ல. ஆங்கிலம் பிள்ளைகளுக்குப் போதனாமொழியாக இருக்கக்கூடாது என்பதற்கும் பிள்ளைகளை ஆங்கிலம் படிக்கக் கூடாது என்பதற்கும் என்ன பெரிய பேதம் இருக்கிறது?

மொழியில் நமது அந்தஸ்து என்ன, எந்த அளவுக்கு மொழியை ஏணியாய் வைத்து நாம் இன்றைய உலகில் முன்னேறத் தகுதி உடையவர்களாக இருக்கிறோம் என்பதை முதலில் நினைத்து முடிவு கட்டிக் கொண்டுதான் மொழியினால் செய்து கொள்ள வேண்டிய காரியங்களைச் சிந்திக்க வேண்டும்.

### கல்லூரிகள் மொழி கற்பதற்கல்ல; அறிவுப் பெருக்கத்துக்கே.

கல்லூரிகள் என்பவை நமது நாட்டில் வெறும் எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ளுவதற்கு மாத்திரமல்ல. நாடும் சமுதாயமும், அறிவிலும், அரசியலிலும் சமுதாயத்திலும், பொருளாதாரத்திலும், தொழில் துறையிலும், விஞ்ஞானத்திலும்முன்னேற்றமடைவதற்கேயாகும்.

### இங்கிலீஷ் மூலமே தொழில் நிபுணர்கள் உண்டாயினர்

இன்று நாட்டில் உள்ள எல்லாத் தொழில் நிபுணர்களும் மற்ற எல்லா இலாகாத் தலைவர்களும் ஆங்கிலத்தில் கற்றதனால்தான் நிபுணர்கள், தகுதி உள்ளவர்கள் ஆனார்களே அல்லாமல் ''தாய் மொழி'' என்கிற பாசத்தால் தமிழ் கற்றுத் தகுதியடைந்தவர்களோ நாட்டுக்குப் பயன்படுபவர்களோ ஆனவர்கள் அல்ல.

முதலாவது நாம் கலாசாலை, கல்லூரி மூலம் தொழில் நிபுணர், யந்திர நிபுணர், விஞ்ஞான நிபுணர்களாக ஆக வேண்டியவர்களாக இருக்கிறோம்.

### அறிவியல், விஞ்ஞானம், தொழில் துறைகளுக்குத் தமிழ் மொழி பெயர்ப்பு நூல்களை முதலில் உண்டாக்கிக் கொள்ளுங்கள்.

மேல்கண்ட மூன்று துறைகளுக்கும் தமிழ் மொழிபெயர்ப்பு நூல்களை முதலில் உண்டாக்கிக் கொள்ளுங்கள். அவை சரிதானா என்று நிபுணர் கருத்தை

அறியுங்கள். கொஞ்சம் கொஞ்சமாக இரண்டையும் படிக்கச் செய்து இவற்றிற்கு ஆங்கிலத்தில் ஏற்படும் அசல் ஒரிஜினல் கருத்தைத் தமிழில் உதயமாகும்படி பழகுங்கள். பிறகு ஒவ்வொரு துறையாக நாளாவட்டத்தில் தமிழில் புகுத்த முயற்சியுங்கள்.

**நமது பின் சந்ததியினர் கேடுற விடுவதா?**

தமிழின் பற்று, பெருமை நம் சந்ததியைக் கொலை செய்யப் பயன்படுத்த விடக்கூடாது.

இந்தியா என்பது தமிழ் நாடு மட்டுமல்ல; உலகம் என்பது இந்தியா மட்டுமல்ல. எதிர்காலம் தமிழ் நாடே பெரிய உலகமாகக் காத்திருக்கிறது. உலக சம்பந்தம் எவ்வளவு நெருக்கத்தில் இருக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு எதையும் சிந்திக்க வேண்டும்.

மற்றவர்கள் சொல்லி யிருந்தால் இந்தப்படி எழுதத் துணிய மாட்டேன். அண்ணா சொன்னதால் உரிமையோடு துணிவாக எழுதுகிறேன்.

# மாவட்ட சபைக்கு முட்டுக்கட்டை

கொழும்பு, ஜனவரி 23உ

இலங்கை இப்பொழுது பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வோர் அரசாங்க ஏஜண்டின் நிர்வாகத்தின் கீழ் இருந்து வருகிறது. இந்த அரசாங்க ஏஜண்டுகள் இந்திய கலெக்டர்களைப் போன்றவர்கள். அவர்கள் அரசாங்கத்துக்கே நேரடியாகப் பதில் சொல்ல வேண்டியவர்கள். இவர்களுக்குப் பதிலாக மாவட்டங்கள் தோறும் தெரிவு செய்யப்பட்ட மாவட்ட சபைகளை ஏற்படுத்த] வேண்டும் என்பது தமிழரசுக் கட்சியின் பல கோரிக்கைகளில் ஒன்று. கடந்த பொதுத் தேர்தலுக்குப் பின்னர் தமிழரசுக் கட்சி தேசிய அரசாங்கத்தில்) சேர அந்தக் கட்சிக்கும் ஐக்கிய தேசியக் கட்சிக்கும் இடையில் ஏற்பட்ட உடன்பாட்டில் அரசாங்கம் மாவட்ட சபைகளை விரைவில் நிறுவ வேண்டும் என்பதும் ஒன்று. இந்தக் கோரிக்கையைச் சீக்கிரமே நிறைவேற்றி வைக்க வேண்டுமெனத் தமிழரசுக் கட்சி அரசாங்கத்தை வற்புறுத்தி வருகிறது. காரணம் அக்கட்சியில் உள்ள இளைஞர்கள் மாவட்ட சபை விரைவில் நிறுவப்படாதபட்சத்தில் தமிழரசுக் கட்சி அரசாங்கத்தி லிருந்து விலகிவிட வேண்டும் என்பதை விடாப்பிடியாக வற்புறுத்தி வருவதேயாகும்.

தமிழரசுக் கட்சி ஆரம்பத்தில் கேட்ட மாவட்ட சபை வேறு. அரசாங்கம் நிறுவ விரும்பும் மாவட்ட சபையின் அமைப்புவேறு. கூடிய அளவு சுய நிர்ணய அதிகாரமுள்ளவைகளாக இச்சபைகள் விளங்க வேண்டுமென்பதுதான் தமிழரசுக் கட்சியின் ஆரம்ப காலக் கோரிக்கை. அதாவது தமிழ்ப் பகுதிகளில் தமிழிலேயே நிர்வாகத்தை நடத்திக் கொள்ளவும் தரிசு நிலங்களைத் தமிழர்களுக்கு விநியோகித்து விவசாயம் நடத்தவும் கல்வி முறையில் தமிழுக்கு விசேஷ இடமளிக்கவும் தமிழ்க் கலாசாரப் பண்பாடுகளுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கவும் பெருமளவு சுய நிர்ணய அதிகாரமுள்ள மாவட்ட சபைகள் உதவுமென்ற காரணத்தினாலேயே அச் சபைகள் வேண்டுமெனத் தமிழரசுக் கட்சி வலியுறுத்தியது. ஆனால் அரசாங்கமோ மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கு முற்றிலும் உட்பட்டதான, அதாவது சுவாதீனமற்ற மாவட்ட சபைகளை நிறுவவே திட்டமிட்டு வருகிறது. இப்படி அதிகாரம் வரையறுக்கப்பட்ட சபைகளை நிறுவ அரசாங்கம் விரும்பியும்கூட விருப்பம்போல் அரசாங்கத்தினால் செய்ய முடியவில்லை. காரணம், தமிழர்களின் கட்சிகளிலேயே ஒன்றும் திரு ஜி. ஜி. பொன்னம்பலத்தின் தலைமையில் உள்ளதுமான அகில இலங்கை தமிழ்க் காங்கிரஸ், மாவட்டசபைகள் நிறுவப் படுவதைப் பலமாக ஆட்சேபிக்கிறது. முஸ்லிம் மக்களும் அதைப் பலமாக ஆட்சேபிக்கிறார்கள். மாவட்ட சபைகள் ஏற்பட்டால் தமிழ் மக்களுக்கு ஏதோ ஒரு பெரிய சலுகை கிடைத்து விடும் என்று எண்ணித் தீவிர சிங்களவாதிகளும் இதைக் கடுமையாக எதிர்க்கிறார்கள். எத்தனையோ அவசரமான தேசியப் பிரச்னைகள் இருக்கும்போது மாவட்ட சபைகளுக்கு இப்பொழுது என்ன அவசரம் என்று ஒரு பத்திரிகை கேட்டிருக்கிறது. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் அரசாங்கத்தின் உத்தேசத்தில் உள்ள மாதிரியான மாவட்ட சபைகளினால் தமிழ் மக்களுக்குப் பிரமாதமான நன்மைகள் ஏதும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. முஸ்லீம்களுக்கோ அல்லது சிங்களவர்களுக்கோ பிரமாதமான தீமைகளும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. அப்படியிருந்தும் தமிழரசுக் கட்சி மாவட்டசபைகளைக் கோருகிறதென்பதற்காக இதைத் தீவிர சிங்களவாதிகள் எதிர்க்கிறார்கள். தங்களுடைய கோரிக்கைகளின்படி மாவட்டசபை என்று ஏதாவது கிடைத்தால் போதும் என்ற நிலைமையில் தமிழரசுக் கட்சி இருக்கிறது. காரணம் இன்று நாட்டில் உருவாகியுள்ள தேசிய ஒற்றுமையைத் தமிழரசுக் கட்சி குலைக்க விரும்பவில்லை. அதே சமயம் வாக்காளர்களுக்கும் அவர்கள் பதில் சொல்லியாக வேண்டியவர்களாக இருக்கிறார்கள். இதன் முடிவு என்னவாகப் போகிறதென்பது அடுத்த சிலதினங்களில் தெரிந்துவிடும். -ரஜனி.

# பெரிய யானையைப் பற்றி...

உண்மைக் கதைகள்

## யானைக் கதை –1

இது ! ஆப்பிரிக்காவில் நடந்தது. ஒரு யானைக் கூட்டம் ஒரு காட்டில் வாழ்ந்து வந்தது. தீனிக்குத் தேவையான செடிகொடிகள் அங்கே நிறைய இருந்தன. ஆனாலும் அங்கே ஓடிய சிற்றோடையில் போதிய அளவு நீர் இல்லை. யானை குளிக்கவும் குடிக்கவும் நிறைய நீர் தேவை. ஓடை நீர் போதவில்லை. என்ன செய்வது? வேறு ஒரு காட்டுக்குக் குடியேறுவதா? யானைகள் எல்லாமாகச் சேர்ந்து ஓடையின் குறுக்கே ஒரு பெரிய அணை கட்டி விட்டன. ஓடி வரும் நீர் எல்லாம் அங்கேயே தங்கி விட்டது. யானைகள் அமிழ்ந்து குளிக்க வசதியான நீர்நிலை ஏற்பட்டுவிட்டது.

## யானைக் கதை - 2

யானையைப் பிடிக்கச் சாதாரணமாக வேடர்கள் ஒரு தந்திரம் செய்வார்கள். யானைக் கூட்டம் வரும் வழியில் தரையில் பெரும் பள்ளம் தோண்டுவார்கள். பிறகு மூங்கில் கழிகளால் மூடி அதன் மேல் மண்ணைத் தூவி அங்கு பள்ளம் இருப்பது தெரியாத படி செய்து விடுவார்கள். அவ்வழியே வரும் யானை பள்ளம் இருப்பது தெரியாமல் காலை வைக்கும்; பளு தாளாமல் கழி முறியும்; யானை பள்ளத்தில் சிறைப்படும்.

இவ்வாறு ஒரு காட்டில் வேடர்கள் வெட்டிய பள்ளம் ஒன்று இருந்தது. அவ்வழியே யானைக் கூட்டம் வந்தது. அனுபவம் மிக்க பெரிய யானைகள் பள்ளத்தில் விழாமல் தப்பின. ஒரு குட்டி யானை மட்டும் தெரியாத்தனமாய்ப் பள்ளத்தில் விழுந்து விட்டது.

உடனே யானைக் கூட்டம் பள்ளத்தைச் சூழ்ந்து கொண்டது. குட்டி யானையை விடுவிக்க என்ன வழி என்று யோசித்தன. பிறகு எல்லாமாகச் சேர்ந்து பள்ளத்துக்குள்ளே மண்ணைச் சரித்தன. பள்ளத்தில் மண் சேரச் சேரக் குட்டி யானை மேலே மேலே வந்தது. பிறகு எல்லா யானைகளும் தம் துதிக்கையால் யானைக் குட்டியை உயரத் தூக்கி விட்டன.

அன்று யானைக்குட்டி ஒரு கண்டத்திலிருந்து பிழைத்தது.

அண்மையில் மைசூரில் யானைகள் பிடிக்கும் முயற்சி (கெட்டா) நல்ல பலன் அளித்துள்ளது நமக்குத் தெரியும். ஆனால் யானைகளுக்குத் தலைவன் கிடையாது: தலைவிதான் உண்டு என்ற உண்மை தெரியுமோ?

ஃ நிலத்தில் வாழும் மிருகங்களில் பெரியது யானை.

ஃ உலகிலுள்ள யானைகளை ஆப்பிரிக்க யானை, இந்திய யானை என்று இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். இந்தியா, பர்மா, இலங்கை, சயாம், இந்தோசீனா, மலேயா, சுமத்ராவில் உள்ளவை எல்லாம் ''இந்திய'' யானைகள்.

ஃ காட்டு யானைகள் இருபது முப்பதாகக் குடும்பமாகவே சேர்ந்து வாழும்.

ஃ மற்ற மிருக இனங்களைப் போல் இல்லாமல் யானைக் குடும்பங்களில் தலைவர், ''தலைவி'' தான்—தாய் யானைதான்.

ஃ யானை நின்றுகொண்டே தூங்கும்.

ஃ யானை நிறையத் தண்ணீர் குடிக்கும்.

ஃ யானையின் முக்கிய உறுப்பு அதன் துதிக்கையே. மூச்சு விடவும் முகரவும் உணவை வாயில் திணிக்கவும், குடிக்கவும், துதிக்கை பயன்படுகிறது. துதிக்கையில் பலமாக அடிபட்டால் யானை இறந்துவிடும்.

ஃ யானை தன் துதிக்கையால் பெரிய மரங்களையும் தூக்கும்; சின்னஞ் சிறிய புல்லையும் தனியாகப் பறிக்கும்.

ஃ தன் துதிக்கையை உயரத் தூக்கி, காற்றை முகர்ந்தே யானை தனக்கு நேரப்போகும் ஆபத்தை உணர்ந்து விடும். யானையை வேட்டையாடுவோர் எதிர் காற்றில் யானையை நோக்கிச் செல்வார்கள். மனித வாசனையை அப்போதுதான் அது உணராது.

ஃ ஆப்பிரிக்க யானைக்குச் சாதாரணமாக ஆறு அடி தந்தம் இருக்கும்.

ஃ தேவை நேரிடின் யானை மணிக்குப் பதினைந்து மைல் வேகத்தில் ஓடும்.

ஃ யானை நடக்கும்போது அதன் அடியோசை கேளாது.

ஃ யானை நன்றாக நீந்தும். சில சமயம் தலைக்கு மேல் முழு ஆழம் நீர் இருந்தா



...அரிய விஷயங்கள்

ளும் பொருட்படுத்தாமல் நதியில் இறங்கி நடக்கும். துதிக்கை நுனியை மட்டும் நீருக்கு வெளியே நீட்டி மூச்சு விடும்.

- இரண்டு மூன்று வருடங்களுக்கு ஒருமுறை தாய் யானை குட்டி போடும். சில சமயம் இரட்டைக் குட்டியாகப் பிறக்கும்.
- யானைக் குட்டி கழுதையை விடச் சிறியதா யிருக்கும்.
- இருபதாவது வயதில்தான் யானை பூரண வளர்ச்சி அடையும். அதன் ஆயுள் சுமார் அறுபது வருஷங்கள்.
- தன் சொல்லைக் கேளாத குட்டியைத் தாய் யானை துதிக்கையால் அடிக்கும். சந்தோஷத்தில் தடவியும் கொடுக்கும்.
- தாய் யானை இறந்து விட்டால் அதன் குட்டியை வேறு ஒரு பெண் யானை எடுத்து வளர்ப்பதும் உண்டு.
- ஆப்பிரிக்க யானை உயரமானது; இந்திய யானை பருமனானது. ஆனால் சிறியது.
- நம் ஊர் யானைகளுக்கு முன் தலையிலுள்ள இரண்டு முண்டுகள் ஆப்பிரிக்க யானைகளுக்குக் கிடையாது.
- புல்லும் இலையும் தழையும் மூங்கில் இலையும் யானையின் உணவு. வாழை அதற்குப் பிடித்த தின்பண்டம்.
- இந்தியப் பெண் யானைக்குத் தந்தம் இருப்பதில்லை.
- ஆண் யானையைக் கண்டால் புலிக்குப் பயம். யானைக்குட்டியை அது தந்திரமாகக் கொன்று விடும்.
- வேலைக்குப் பழக்கினால் யானை வெகு விரைவில் கற்றுக் கொண்டு விடும்; விசுவாசமாக இருக்கும்.
- யானை ஓயாமல் அசைந்து கொண்டே இருக்கும். அதன் கழுத்தில் மணி கட்டியிருந்தால் எப்போதும் ஒலித்துக்கொண்டிருக்கும். 'யானை வரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே' என்பது பழமொழி.
- தேக்கு மரக் காடுகளில் நிறைய யானைகள் வேலை செய்கின்றன. அரண்மனையிலும் கோயில்களிலும் யானை வைத்திருக்கிறார்கள். புலி வேட்டையாடவும் சிலர் யானையைப் பழக்கி யிருக்கிறார்கள்.

**— தம்பி சீனிவாசன்**

# முந்தையர் தந்த தனம்!

இல. வாசுகிநாதன்



மெல்லிய நல்லுருவம் - தவம்
மேவிய தொல்லுருவம்
சொல்லிய வேதமெலாம் - உணர்
சுந்தரத் தேவுருவம்

அன்பு குடியிருக்கும் - உயர்
ஆற்றல் நிறையிருக்கும்
இன்பம் செழித்திருக்கும் - பணி
யாவும் முடித்திருக்கும்

தெய்வ நலங்கொழிக்கும் - வரு
தீமைப் பகையழிக்கும்
உய்யும் நெறியுரைக்கும் - ஞான
உள்ளொளி தான்சுரக்கும்

ஏடு படித்தஉளம் - புகழ்
எய்தி நிலைத்த களம்
நாடு துதிக்கும்அறம் - தமிழ்
நாட்டுப் பெருமைத்திறம்

பற்றை விடுத்தமனம் - உயர்
பண்பை வளர்க்கும்தினம்
முற்றும் துறந்த இனம் - நம்
முந்தையர் தந்த தனம்

அன்புறு நெஞ்சினிலே - அருள்
ஆறெனப் பாய்ந்திடவே
நன்று மிகப்புரியும் - எழில்
நாயக நல்வடிவம்

வாய்மை இருப்பிடமாய் - இவண்
வந்த குருபீடம்
சேய்மை மதத்தினரும் - இனம்
சேவிக்கும் இன்னுருவம்

காஞ்சி நகர்ப்பீடம் - வரும்
காமகோடிப் பீடம்
வாஞ்சை யுடன்வணங்கும் - சங்கர
வல்லவ நற்போதம்.






சந்திர மௌளீச்வர பூஜை அனைவருக்கும் நன்மை உண்டாக்கும் பொருட்டுச் செய்யப் படுவது. வேதமார்க்கத்தின் வழியிற்கிடந்த முட்களைப் பிடுங்கிச் சுத்தம் செய்து, தேசத்தை யெல்லாம் ஒரு குடும்பமாக்கி வைத்து, அந்தக் குடும்பத்துக்கு உரிய ஒரு பூஜையாக இதை ஸ்ரீ சங்கர பாதாசாரியர்கள் வைத்தார்கள். சந்திர மௌளீச்வர பூஜை எல்லாருக்கும் சொந்தமானது.

— ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

# அன்பின் ஆட்சியில் இன்னுமோர் ஆண்டு

பூமிக்கடியே புதைந்து கிடக்கும் நிலக்கரி, அழுந்தி அழுந்தி அந்த அழுத்தத்திலேயே கரி வைரமாகிறது. ஒளிக்கு நேர் எதிரான இருண்ட பொருளே இறுகும்போது ஒளி சிந்தும் வைர மணியாகிறது. இயற்கையின் இவ்வியல்பை ஒட்டி கலியின் இருண்ட கோரப் போக்குக்கு மேன்மேலும் அழுத்தம் ஏற்படுமாயின் இவ்வாறே அந்த இறுக்கத்தில் ஓர் அருள் மணி உண்டாவதும் சாத்தியமே. அப்படித் தோன்றிய வைரமணியாக நம்மிடை வாழும் ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு அவர்கள் பீடாரோஹணம் செய்த நன்னாளின் வைர விழாவைக் கடந்த ஓர் ஆண்டாகக் கொண்டாடி வருகிறோம். இந்த பிப்ரவரி 13ந் தேதியன்று ஸ்ரீ ஆசாரியரவர்கள் ஞான ஸிம்மாதனம் ஏறி அறுபத்தோராண்டுகள் நிறைகின்றன.

வைரமணி ஏழு வண்ணங்களை அள்ளித் தெறிப்பது போல் கருணை, ஞானம், எளிமை, ஒழுக்கம், தவம், பக்தி, கர்மயோகம் என்ற ஏழு சம்பத்துக்களையும் பாபம் மலிந்த இவ்வுலகில் பரவச் செய்து பாவனம் செய்து வருகிறார் நம் ஆசாரியரவர்கள். ஆயின் ஏழு வண்ணங்களும் சேர்ந்தால் எந்த வண்ணமும் அற்ற வெண்மையாகிவிடும். அதுபோல் குண சம்பத்துக்களின் குவியலான ஆசாரியர்களும் உண்மையில் குணம் கடந்த வஸ்து. அவர்களை இன்னார் என்று புரிந்து கொள்வது இயலாத காரியம். புரிந்து கொண்ட சிறிய அளவுக்குக்கூட மொழி கொடுத்து வெளியிடுவதென்பது அதனினும் கடினமான காரியம். வைரம் கொண்டுதான் நவரத்தினத்தை அகழ்ந்து அதனுள் பரிசீலனை செய்ய முடியும் என்பார்கள். குருமணியாகிய வைரத்தின் அகச் சிறப்பைப் பரீட்சிக்கவும் அவரை ஒத்த அநுபூதிமான்களால்தாம் முடியும். நாம் வெளியில் காண்கிற ஆசாரியர்களது பூஜையும், உரைகளும், சஞ்சாரமும், தருமத் திருப்பணிகளும், மாந்தர் துயர் தீர்க்கும் அருட்செயல்களும் - இவை யாவுமே மகா சமுத்திரமென விரிந்த அவரது உள்ளார்ந்த பிரபாவத்தின் சின்னஞ்சிறு குமிழிகள்தாம். ஆயினும், இந்தக் குமிழியே சாதாரண மானுடரான நமக்குப் போதும். ஏனெனில், இந்த உலக வாழ்க்கையே இறுதியில் ஒரு குமிழிதானே ?

ஆனாலும் இறுதியில் ஒரு குமிழி என்பதால் உலகைத் துச்சமாக ஒதுக்காமல் அந்தக் குமிழியையே பூரண சமுத்திரமாக்குவதற்குத்தான் இறைவன் அவதாரங்கள் எடுக்கிறான்; மகாபுருஷர்கள் மண்மிசை தோன்றுகிறார்கள். வாழ்க்கையை எப்படி நடத்தினால் முழுமை எய்த முடியும் என்பதை அவர்கள் உபதேசிக்கிறார்கள். உபதேசத்துக்கு மேலாக, அந்த உபதேசத்துக்கு உருவமாக, உரையாக, பொருளாகத் தாங்களே வாழ்ந்தும் காட்டுகின்றனர். அப்படிப்பட்ட உன்னதமான, பரம பவித்திரமான உதாரண புருஷர்களில் ஒருவர் நமது காஞ்சி ஜகத்குரு அவர்கள். அவரது அருளாட்சியின் அறுபதாண்டுகள் சாதித்திருப்பவை அனந்தம். இப்படியோர் அதிசய வியக்தி தோன்றியிராவிடில் இன்று நம் நாட்டில் ஆஸ்திகமும், ஆன்மீகமும், ஆசாரங்களும் இருந்த இடமே தெரியாமல் போயிருந்திருக்கும். பகட்டும் படாடோபமுமின்றி, அடக்கத்துடன் சின்னஞ்சிறு எளிய திட்டங்களை அமைத்து நமது நாட்டில் சநாதன தருமத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்வுக்கு உயிரூட்டி வருகிறார் ஸ்ரீ ஆசாரியர்கள். இன்று வேத ஒலி ஒருபுறமும் நாட்டுக் கலைகள் மறுபுறமும் புனர்ஜீவனம் பெற்றுள்ளனவெனில், அதற்குக் காரணம் ஆசாரிய ஸ்வாமிகளே. இடிந்த கோயில்கள் பல மீண்டும் எழும்பியிருப்பதற்குக் காரணகர்த்தர் அவரே. சிதிலமடைந்த பல சீரிய சம்பிரதாயங்கள் மீண்டும் வழக்குக்கு வந்திருப்பதற்கு அடிவாரம் அவர் அமைத்துத் தந்ததே. மகாதேவன் பணியோடு மக்கள் பணியைக் குழைத்து, நோயாளிகளுக்குப் பிரசாதம் வழங்குதல், அநாதையாக மரித்தவர்களுக்கு இறுதிக் கடன் செலுத்தல், எளியோருக்குப் பிடி அரிசிப் பிரசாதம் அளித்தல் போன்ற கைங்கரியங்களில் மக்களை ஈடுபடுத்தி வருகிறார் ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகள். அவரது ஆட்சியில் நமக்குக் கிடைத்த மிகப் பெரும் அருட் பிரசாதம் கற்பக விருட்சத்துக்குக் கீழ்க் கன்று தோன்றினாற்போல் உதித்துள்ள இளைய ஸ்வாமிகளாகிய ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி அவர்களே.

சாமான்ய மானுடச் சக்தியினால் நமது குருநாதன் செய்துள்ளவற்றைச் சாதித்துவிட முடியாது. எல்லையற்ற அன்பின் சக்தியினாலேயே செய்யக்கூடிய சாதனை இது. ஆசாரியர்களுடைய அன்பின் தரத்தை அளவிட முடியாது. அன்புக்கு இரண்டு கோடிகள் உண்டு. அது பரமனின்பால் செலுத்தப்படுகையில் பக்தி எனப்படுகிறது. மக்களின்பால் செலுத்தப்படுகையில் அதே அன்பு அருள் எனப்படுகிறது. ஸ்ரீ காமகோடி ஆசாரியர்கள் அன்பின் இவ்விரு கோடிகளும் சம்பூர்ணமாகக் கைவரப் பெற்றவர். அந்த அன்பு என்றென்றும் வாழ்ந்து நம்மைப் பாலிப்பதற்கு ஸ்ரீ சந்திரமௌளீச்வர சக்தியாகிய ஸ்ரீ காமகோடி யன்னையைப் பிரார்த்திப்போம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

காங்கிரஸல்லாத கூட்டணி சர்க்கார் ஒன்று விழுந்து விட்டால் உடனே மறுபடியும் பொதுத் தேர்தல் நடத்துவது பற்றி ஒவ்வொருவரும் எண்ணத் தொடங்குகின்றனர். இதிலிருந்து, காங்கிரஸல்லாத மற்ற எந்தக் கட்சியும் ஒரு பொதுத் தேர்தலுக்கான செலவை ஏற்கும் நிலையில் இல்லை என்பதை யாருமே உணரவில்லை என்று தோன்றுகிறது. லஞ்ச நடவடிக்கைகள் இல்லாமல், நேர்மையாகப் பொதுத் தேர்தல் நடத்துவதற்கே தேவைப்படும் திரவிய வசதி காங்கிரஸல்லாத மற்றக் கட்சிகளால் தாங்கவொண்ணாத பெரிய அளவினதாகும். பெர்மிட்-லைசென்ஸ் கேந்திரத்திலுள்ள அதிகாரத்தைக் கொண்டு காங்கிரஸ் வேண்டிய அளவு நிதி திரட்ட முடியும். மற்றக் கட்சிகளால் இது முடியாது.

இந்தியாவில் ஜனநாயகத்தைக் காப்பதற்கு ஆதாரமாகப் பொதுத் தேர்தல்களின் செலவைக் குறைத்தாக வேண்டும். தேவைப்படுகிற செலவின் பெரும் பகுதியையும் சர்க்காரே செலவழிக்குமாறு செய்து, எல்லாக் கட்சிகளுக்கும் சம வாய்ப்பை உண்டாக்க வேண்டும். வாக்காளருக்கு அடையாளச் சீட்டு வழங்கும் பொறுப்பையும் செலவையும் சர்க்காரே ஏற்க வேண்டும், லாரிகளையே வோட்டுச் சாவடியாக்கி வீடுதோறும் சென்று வாக்குகளைச் சேகரிக்க வேண்டும் என்றெல்லாம் நானும் வேறு சிலரும் கூறும் யோசனைகளை நடைமுறையாக்குவதில் சிரமங்களும் சந்தேகங்களும் இருக்கலாம். ஆயினும் இரண்டு தீமைகள் எதிரிடும் போது அவற்றில் சிறியதை ஏற்று, இந்தியாவுக்கு உகந்த ஒரு முறையை முயன்று பார்க்க வேண்டும். இவ்வாறு செய்யாதவரையில் ஏழை வேட்பாளர்கள் சுதந்திரமாக நிற்க முடியாது; தேர்தல்கள் நேர்மையாகவும் உண்மையான ஜனநாயக முறையிலும் நடைபெறா. மத்திய காங்கிரஸ் சர்க்கார் தனது கோணத்தில் மிகவும் சாதகமான ஒரு சந்தர்ப்பத்தில் கம்பெனிகள் அரசியல் கட்சிகளுக்குத் தரும் நன்கொடையைத் தடை செய்ய முடிவு செய்திருக்கிறது. இது காங்கிரஸைவிட மற்றக் கட்சிகளையே பலமாகத் தாக்கும். விளைவாக, நிகர லாபம் காங்கிரஸுக்குக் கிடைக்கும்.

⁂

இவ்விஷயமாக நான் முன்பே எழுதியிருக்கிறேன். என்றாலும், திரும்பச் சொல்வது வியர்த்தமில்லை என்பதால் சொல்கிறேன்: பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பிரதேச மொழிகளை நாம் போதனமொழியாக ஏற்ற பின்பும், விஞ்ஞான — தொழில் நுட்பப் பாடங்களிலுள்ள சர்வதேசச் சொற்றொடர்களையும், சங்கேதங்களையும், சூத்திரங்களையுமே தொடர்ந்து உபயோகிக்க வேண்டும். இதனால் தேசம் முழுவதிலும் கல்வியில் பெருமளவுக்கு ஐக்கியம் இருக்கும். போதனையில் தாய்மொழியே பயனுள்ள போதிலும், ஒரு பிரதேசத்தில் படிப்பவர் இன்னொரு பிரதேசத்துக்குச் சென்று படிப்பைத் தொடரப் பெருமளவில் சௌகரியம் இருக்கும். பல்லாண்டுகளுக்கு முன்பு, 1958லேயே இவ்விஷயத்தில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு கவனம் செலுத்தினார். 1958 ஜனவரி 13ந் தேதி கௌஹாட்டியிலிருந்து அவர் எனக்கு எழுதிய கடிதத்தில் கூறுவார்:

> விஞ்ஞான — தொழில் நுட்பச் சொற்றொடர்கள் சர்வ தேசத்தில் வழங்குவனவற்றிலிருந்தும், நமது மொழிகளுக்கிடையே ஏறக்குறைய ஒரே போன்று இருப்பனவற்றிலிருந்தும் கையாளப்பட வேண்டும் என்று ஸப்ஜெக்ட் கமிட்டி முடிவு செய்திருப்பதை அதன் தீர்மானத்திலிருந்து தாங்கள் கவனிக்கலாம். இதற்குப் பொருள் என்னவெனில், இச்சொற்றொடர்கள் குறித்து நமக்கு ஆங்கிலத்தோடு பொதுவானதோர் அடிப்படை இருக்கும்.

⁂

என் பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் உரியவரான ஸ்ரீ எம். எஸ். ஆனே அவர்கள் நம்மைப் பிரிந்து, இவ்வுலகை விட்டு இதை விட உத்தமமான உலகை அடைந்துவிட்டார். ஒவ்வோர் ஆண்டும் முடிந்து புதிய ஆண்டு தொடங்குகையில் அவர் எனக்குத் தவறாமல்



சம்ஸ்கிருதச் சுலோகம் ஒன்றின் மூலம் ஆசி கூறி வந்தார். லோகமான்ய திலகரவர்களின் சகா ஸ்ரீ ஆனே. திலகரின் மரணத்துக்குப்பின் அவர் சுதந்திரப் போராட்டத்தில் சேர்ந்தார். குடியரசு தினத்தன்று அவருக்கு விருது வழங்கும் கௌரவம் சர்க்காருக்குக் கிடைத்தது. ஆனால் அதே தினத்தன்று அவர் பம்பாயில் காலமானார்.

⁂

விஞ்ஞானச் சொற்களுக்குத் தமிழ் வார்த்தைகள் கண்டுபிடிப்பதில் 1912லிருந்து

## காமகோடியின் கருணைமொழி



இப்பொழுது பெரியோர்களிடந்தான் நமது தர்மம் கொஞ்சம் இருந்து வருகிறது. நாம் சமையல் பண்ண வேண்டியிருந்தால் அடுப்பில் செத்தை, புல் முதலியவைகளைப் போட்டு மூட்டுகிறோம். மழை நாளாக இருக்கிறது. நெருப்பு அணைந்துவிடும் போலிருக்கிறது. கொஞ்சம் நெருப்புப் பொறிகள் மாத்திரம் பாக்கி இருக்கின்றன. அவைகளால் என்ன பண்ணுவோம் என்று நாம் விட்டுவிட மாட்டோம். விசிறி, சிரமப்பட்டு முயற்சி செய்து மறுபடியும் பற்றவிடப் பார்ப்போம் அல்லவா? அதைப் போல் நம் முதியோர்களிடம் இருக்கும் ஆசாரத்தையும், தர்மத்தையும் எல்லோரிடத்திலும் பரவச் செய்யலாம் என்பதே எனது ஆசை.

---

பல ஆண்டுகள் தீவிரமான கவனம் செலுத்தி வந்தேன். அப்போது இதுவிஷயமாகப் பாரதியாரைக் கேட்டுக் கொண்டதின் பேரிலேயே அவர் நாட்டுக் கல்வி குறித்த தமது பாடலை இயற்றினர். இது விஷயமாகத் தமிழ்ப் பேரறிஞர் திரு டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்களுக்கும் எனக்குமிடையே கருத்து வேறுபாடு இருந்து வந்தது. தனித் தமிழ்தான் வேண்டும் என்றில்லாமல் சர்வ தேசச் சொற்களை உபயோகிக்க வேண்டும் என்று டி. கே. சி. திட்டவட்டமாகக் கூறி வந்தார். இப்போது நானும் அதே முடிவுக்குத்தான் வந்திருக்கிறேன். பிரதேச மொழியில் போதனை நடக்க வேண்டும் என்று விரும்பும் அபிமானிகளுக்கும் இம்முடிவை வலியுறுத்திச் சொல்கிறேன். பொதுமக்களுக்கான ஸயன்ஸ் தொழில் நுட்பங்கள் எழுதுகையில், நமது மொழிகளை வளம் செய்யும் வகையில் ஜாக்கிரதையுடன் தாய் மொழிப் பதங்களை உபயோகிக்கும்போதே இந்திய ஐக்கியத்துக்குப் பங்கம் ஏற்படாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஃஃஃ

அந்நிய மொழியின் இடத்தை ஓர் இந்திய மொழியே ஏற்க வேண்டும் என்பது சிலரின் உண்மையான உணர்ச்சியாக இருக்கலாம். இருப்பினும் உணர்ச்சியின் வேகம், உண்மை நிலவரம், புத்திசாலித்தனம், ஐக்கியம் இவற்றின் வேகத்தை முறியடிக்க விடக்கூடாது. ஹிந்தியை ஆட்சிமொழியாக்கினால், சர்க்காரின் மொழியும் மக்களின் மொழியும் ஒன்றாகிவிடும் என்கிற அரசியல் வாதம், தென்னிந்தியாவில் உள்ள பெரும் மக்கட் தொகை விஷயத்தில் செல்லத்தக்கதல்ல. இதனால் ஹிந்தி பேசுவோருக்கும் பேசாதோருக்குமிடையே தாரதம்மிய இடைவெளி அதிகரிக்கும். தென்னக மக்கள் சக்களத்தி பிள்ளை போன்ற பிரஜையாவர். சர்க்காரின் மொழியைப் பேசுவதால் ஹிந்தியர் மற்ற அநுகூலங்கள் பெறுவதோடு, தாமே உரிமையிருந்த பிள்ளைகளைப் போன்ற 'ஔரஸ புத்திர'ப் பிரஜைகளாகி உயர் அந்தஸ்துப் பெறுவர்.

ராஜ்ய அரசாங்கங்களின் மொழி பிரதேச மொழியாக இருப்பதால், இயற்கையான, நியாயமான முறையில் மக்களுக்கும் அரசாங்கத்துக்குமிடையே ஐக்கியம் உண்டாகிறது.

பங்குதாரர்கள் போல் ஹிந்தியும் ஆங்கிலமும் இடம் பெறும் இருமொழித் திட்டம் தேசத்தை இரண்டாக்கும். நாளுக்கு நாள் விரிசல் வலுவடையும். பிரிவினைக்கான சண்டை ஏதுமின்றியே தேசம் இருகூறுகளாகும். சண்டையில்லாமல் அமைதியாக நடப்பதாலேயே இப்பிரிவினை பூரணமாக நடந்துவிடும். இருமொழி ஏற்பாட்டினால் ஆங்காங்கு ஏற்படும் ஒழுங்கீனத்திலும் சதியிலும் சூழ்ச்சியிலும் மத்திய நிர்வாகம் முற்றிலும் திறன் குன்றும்.

ஃஃஃ

ஹிந்தி பேசாதோர் ஹிந்தி பேசுவோர் இருவரிடையும் சமமாகப் பளு இருக்க வேண்டும் என்பதற்காக, மத்திய சர்க்கார் உத்தியோகத்துக்குச் செல்லும் அனைவருக்கும் ஆங்கிலம் ஹிந்தி ஆகிய இரு மொழிகளிலும் நல்ல ஞானம் இருக்க வேண்டும் என்று ஒரு புது சூத்திரம் பேசப்பட்டு வருகிறது. ஹிந்தி பேசுபவருக்கு இவ்விரண்டில் ஹிந்திமொழியறிவு பெறுவதென்பது தண்ணீர் அருந்துவது போல் மிக எளிதான காரியம். ஆனால் ஹிந்தி பேசாதோர் மீது — குறிப்பாகத் தென்னாட்டின் மீது — இது ஆங்கிலம் ஹிந்தி என்ற இரண்டு சுமைகளை ஏற்றுகிறது. ஹிந்தி என்பது தனியாகவோ அல்லது ஆங்கிலத்தின் கூட்டாளியாகவோ இருக்க வேண்டும் என்று கருதி ஹிந்தியைப் பிடித்துக் கொண்டிருக்கும் வரையில் நீதி என்கிற புதிரை விடுவிக்க முடியாது. மொழிப் பிரச்னையில் நம் புத்திக்குச் சற்று ஓய்வு தந்து, அதன் மூலம் தெளிவாகச் சிந்திக்கும் திறம் பெறுவோமாக.

ஃ ஃ ஃ

அறிஞர்கள் கூடி ஆட்சி மொழி, போதனை மொழி பற்றிச் சர்ச்சை செய்து பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும் என்று நம்பிக்கையுடன் பேசப்படுகிறது. ஆனால் இன்றையச் சூழ்நிலையில் இத்தகைய கூட்டம் நடந்தால் பலன் இராது என்றே அஞ்சுகிறேன். கூட்டத்

தினரில் விவேகம் மிகுந்த பகுதி சுயேச்சையாகச் செயல்பட விட மாட்டார்கள். உணர்ச்சி வேகம் தணியவும், மாயப் பிரமைகள் தெளியவும் சிறிது காலம் ஆக வேண்டும். இந்தச் சுத்திகரிப்புப் பணிக்கு இசைவாக இடைக் காலத்தில் மற்ற பிரச்னைகளில் தலைவர்களும் மக்களும் ஈடுபட வேண்டும். அவசர முயற்சிகள் நிலவரத்தை மேலும் மோசமாக்கும். 'மொழிப் பிரச்னை சிறிது காலத்துக்குப் பின் பட்சபாதமின்றிக் கவனிக்கப்படும்; அதுவரை இவ்விஷயத்துக்கு ஓய்வு தரப்படும்' என்று பிரதமரவர்கள் தைரியமாகப் பிரகடனம் செய்வதே இன்றையத் தேவை.

ஃஃஃ

நம் நாட்டில் ஆங்கிலம் வகிக்கும் ஸ்தானத்தைக் குளறுவது பற்றி ஒரு கவர்னரின் கருத்தை வெளியிடும் 'ஹிந்து' செய்தி வருமாறு :

ஹைதராபாத், ஜன 31

'' ஆங்கிலத்துக்கு இரண்டாம்பட்சமான ஸ்தானத்தை அளிக்க இந்தியாவால் இயலாது'' என்று உ. பி. கவர்னர் ஸ்ரீ கோபாலரெட்டி நேற்று மாலை இங்கு ஆங்கில மத்தியக் கழகத்தின் கூட்டத்தில் பேசுகையில் கூறினார்.

1947லிருந்து ஆங்கிலம் படிப்பதில் ஒருவிதக் குறைபாடும் ஏற்படவில்லை என்பதைச் சுட்டிக்காட்டிய ஸ்ரீ கோபால ரெட்டி, உத்தரப் பிரதேசத்திலும்கூட ஆங்கிலத்தை இஷ்ட பாடமாக்கியபின்னரும், ஆங்கிலத்தைப் போதனை மொழியாகக் கொண்ட தனியார் பாடசாலை, பொதுப் பாடசாலை, மேற்படிப்பு நிலையங்கள் ஆகியவற்றில் சேருவதற்கு நெரிசல் குறையவேயில்லை என்றார்.

ஆங்கில எதிர்ப்பு மிகவும் பலமாக இருப்பதாகக் கருதப்படும் உத்தரப் பிரதேசத்தின் கவர்னர் இவ்வாறு கூறுவதில் விசேஷ முக்கியத்துவம் உண்டு.

ஃஃஃ

நம் மக்களுக்கு ஜீவாதாரமான நன்செய் பயிர் செய்து உழைக்கும் விவசாயிகளைப் பாதிக்கும் 'கொள்முதல்' என்று சொல்லப்படும் சர்க்கார் உத்தரவைப் போல் அரசியல் சாஸனத்தின் ஜீவாதார உரிமைகளை வேறெந்த நடவடிக்கையும் அடியோடு புறக்கணிக்கவில்லை. மதுரையிலிருந்து வந்துள்ள 'ஹிந்து' செய்தி கீழே தரப்பட்டுள்ளது. நீதியில் கவனமின்றிக் கொள்முதல் செய்வதில் மட்டுமே அரிசி மில்காரர்கள் கவனம் காட்டுகிறார்கள். பொதுச் சந்தை விலைக்கு மிகவும் குறைந்த விலையில் பலவந்தக் கொள்முதல் செய்ய விரும்புகிறார்கள். கொடுங்கோன்மையை எங்கும் பரப்புவதற்கும், சர்க்காரிடம் மக்களின் ஆதரவைக் குறைக்கவும், கண்டுபிடிக்க முடியாத ஊழல்களுக்கு வாய்ப்புத் தருவதற்கும் சாதகமாக இதைவிட எந்தத் திட்டமும் இடையாது. 'ஹிந்து' செய்தி வருமாறு :

மதுரை, ஜன 31

மதுரையில் சில தாலுகாக்களில் அறுவடை முழுமூச்சுடன் நடந்த போதிலும், ரயத்துக்களிடமிருந்து தானியம் கொள்முதல் செய்ய அதிகாரபூர்வமாக அங்கீகரிக்கப்பட்ட மில்காரர்களால் கணிசமான அளவு கொள்முதல் செய்ய முடியவில்லை. காரணம் ஒரு மூட்டை நெல்லுக்குப் பொதுச் சந்தை விலையை விடச் சர்க்கார் தரும் விலை இருபது ரூபாய்க்கும் அதிகமாகக் குறைவாயிருப்பதே. இவ்வாறு மதுரை அரிசி மில் சொந்தக்காரர் சங்கக் காரியதரிசி தெரிவித்தார்.

65 கிலோ கொண்ட மூட்டைக்குச் சர்க்காரின் கொள்முதல் விலை: ரூ. 31-20 வெளிச் சந்தை விலை: ரூ. 53. எனவே, ரயத்துக்கள் மில்காரர்களிடம் தங்களது சரக்கை விற்கப் பிரியப்படவில்லை.

# சுகமாக ஓய்வு பெறுவீர்

*அன்பார்ந்த நண்பரே,*

தொழிலிலும் இல்லங்களிலும் யூ-ஃபோம் பலவாருக உபயோகப்படுவது தெரிந்த விஷயம். யூ-ஃபோம் சுலபமாக 'ஸ்டெரிலைஸ்' செய்யக் கூடியது. ஆதலால், இப்பொழுது மருத்துவ மனைகளில் ஆரோக்கியத்தைக் கருதி எண்ணற்ற முறையில் பயன்படுகிறது. 'ஸியெஸ்டா' மெத்தைகள், 'ட்ரீம்டைம்' தலையணைகள், தீப்புண்களுக்குச் சுற்றும் 'பர்ன் பாண்டேஜ்,' எக்ஸ்ரே அணைப்புகள், சுத்தம் செய்யும் 'ஸ்பான்ஜு'கள்', ரண சிகிச்சை மேஜை, ட்ராலி, பிரசவ படுக்கை இவைகளுக்கான விரிப்புகள் முதலிய பலவகைகளில் யூ-ஃபோம் மேலும் உதவுகிறது. ஆகவே முதன்மை ஸ்தானம் வகிக்கும் பல துறைகளில் யூ-ஃபோம் சிறந்த சேவை செய்து வருகின்றது.

*என்றும் தங்கள்,*

## யூ-ஃபோம்

பல்வேறு உபயோகமுள்ள அற்புத யூரிதேன் ஃபோம்

**U-FOAM**

யூ-ஃபோம் பிரைவேட் லிமிடெட்
ஸனத்நகர், ஹைதராபாத்-18.



பூரண விற்பனை ஏஜெண்டுகள்:
அஸோஸியேடட் ஸேல்ஸ் அண்டு அட்வர்டைஸிங் கம்பெனி
126, சரோஜினி தேவி ரோட், ஸிகந்தராபாத்-3 (A.P.)

FDSUF 886 TM

சென்னை மற்றும் கேரள ராஜ்யங்களுக்கு விநியோகஸ்தர்கள்:

ஸதர்ன் வேர்ஹவுஸ் கம்பெனி, 66, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-6. (போன்: 87441)
ஷோ-ரூம்: 163, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14 - (போன்: 81437)
கிளை ஆபீஸ்: 10/213, ஜெயில் ரோடு, கோயம்பத்தூர்-18

# நவக்கிரகம்

நவக்கிரகம் போன்று பல இயல்புள்ள பாத்திரங்களைப் படைத்து, நடிகர்களைக் கொண்டு நடிக்க வைத்து வெற்றி காண வேண்டிய கலைதான் நாடகக் கலை. பாத்திர மேற்று நடிப்பவர்களும், நவக்கிரகங்களின் இயல்பைக் கடைப்பிடித்து விட்டார்களானால் — நடிப்பில் வக்கரிப்பார்களானால் — நாடகம் கோணி விடும். அதற்கு இடம் கொடாமல், பழக்கப்பட்ட நடிகர்கள் அனைவருமே தங்கள் பொறுப்பை உணர்ந்து நவக்கிரகத்துக்கு 'நாடக உயிர்' ஊட்டுகிறார்கள். பல நாடகங்களைப் படைத்து மேடையேற்றிய திரு கே. பாலசந்தருக்கு இது ஒரு கைவந்த கலைதான்.

'நவக்கிரகம்', 'எதிர்நீச்சல்' போடுகிற தென்றாலும், டைரக்டர் பாலசந்தரின் திறமை காட்சிக்குக் காட்சி 'பளிச்'சிடாமலும் போகவில்லை. ஒன்றிரண்டு புதுச் சேர்க்கையோடு பழைய நடிகர்களே இடம் பெற்றிருக்கிறார்கள். எதிர் நீச்சலில் பல குடும்பங்களுக்கு எடுப்பார் கைப்பிள்ளையாக வந்த அதே நடிகர், பலரை எடுப்பார் கைப் பிள்ளையாக்கி இந்த நாடகத்தை நடத்தியிருக்கிறார். 'எதிர்நீச்சல்' பட்டு மாமிக்குச் சினிமாப் பைத்தியம் என்றால் 'நவக்கிரகம்' அகிலாண்டத்துக்குப் பாத்திர அடுக்குப் பைத்தியம். இப்படியாகச் சொல்லிக் கொண்டே போனால், கார ஸோமாஸ், திரிகோணம், வெஜிடபிள் பஃப் இவற்றுக் கிடையே உள்ள சுவை வேற்றுமையைத் தான் உணருவோம். வேற்றுமை விளங்கா விட்டாலும் சுவைத்து உண்ண யாரும் தயங்குவதில்லையே!

மனிதனுக்குள்ள விகாரமான சில இயல்புகளை நகைச்சுவையோடு வெளிப்படுத்துவதில் டைரக்டர் கே. பாலசந்தர் கைதேர்ந்தவர். மேல் மாடியில் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அகிலாண்டம் கீழே நடக்கும் சண்டையை ரசிக்கும் கட்டமும் குடும்பச் சண்டை கோர்ட்டுக்குப் போய் பேப்பரிலும் வந்துவிட்டதைப் பெருமையோடு சொல்லிக் கொண்டு மாப்பிள்ளை வீட்டுக்குள் நுழையும் கட்டமும் இதை உறுதிப்படுத்துகின்றன.

நவக்கிரகம் வக்கரித்துக் கொண்டாலும் சிரமம், சேர்ந்தாலும் சிரமம் என்பதைக் கலையழகோடு காட்டும் நாடகப் பண்புக்காகவே இதனைப் பார்த்து, 'நவக்கிரக'த்தை ஒரு சுற்றுச் சுற்றி வந்த மன நிறைவு பெறலாம்; முக்கியமாகப் பொழுதுபோக்கு நகைச்சுவை நாடகமொன்றைப் பார்த்து வந்த திருப்தியைப் பெறலாம்.





திரு கு. ராஜவேலு

# குயிலைப் பாடிய கவிஞன்



தமிழ்த் தாயின் தவப் புதல்வர்களில் ஒருவர் அமரர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி. அவர் எழுத்தால் தமிழ் எழுந்தது: தமிழன் எழுந்தான். — அமரர் கல்கியின் நினைவு சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆண்டு தோறும் மூன்று நாட்கள் முறையாகப் போற்றப்படுவதற்கு வழிவகுத்த 'கல்கி நினைவு நிதி'யார்க்குத் தமிழ்கூறும் நல்லுலகம் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளது. இதுவரை இச்சொற்பொழிவு வரிசையில் பேராசிரியர்கள் அ. சீநிவாசராகவன், கி. வா. ஜகந்நாதன், அ. மு. பரமசிவானந்தம், டாக்டர் மா. இராசமாணிக்கம், அ. ச. ஞானசம்பந்தம் ஆகியோர் கவிதை, நாவல்கள், உரைநடை, திரு வி. க. ஆகிய பொருள்கள் பற்றி ஆய்வுரை நிகழ்த்தியுள்ளார்கள். இவ்வாண்டோ சொற்பொழிவாளராகிய பேராசிரியர் திரு கு. இராஜவேலு பாரதி பற்றிப் பேசி ஒரு புரட்சி செய்தார். பாரதி பற்றிப் பல்கலைக் கழகத்தில் பேசுவதைப் புரட்சி என்று நினைக்கத்தக்க காலம் மறைந்துவிட்டது. நான் அதைச் சொல்ல வரவில்லை, 'புரட்சி' என்று.

பாரதியாரின் 'குயில் பாட்டு' ஒன்றை மட்டுமே சொற்பொழிவுக்குக் கருப்பொருளாகக் கொண்டு மூன்று நாட்கள் ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியதையே புரட்சி என்கிறேன். எழுதி வைத்திருந்த மூன்று நாள் சொற்பொழிவுகளை முழுதும் படிக்க முடியாமல் சிற்சில பகுதிகளை விட்டு விட்டுப் படித்துக் காட்டினார்! இலக்கிய — இசை— ஆராய்ச்சித் துறையில் சொற்பொழிவாளர் எவ்வளவு ஈடுபாடு கொண்டவர் என்பதை அவருடைய மூன்று நாள் சொற்பொழிவுகளும் (கருத்து — கவிதைப் பொழிவுகள் என்றும் கூறலாம்!) காட்டின. 19,20ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியங்களின் தனிச் சிறப்பை விளக்க அமைந்ததே 'கல்கி நினைவுச் சொற்பொழிவுகள்'. அந்த அமைவுக்கு அறிஞர் திரு இராஜவேலுவின் அரிய சொற்பொழிவுகள் பெரிய ஆக்கம் புரிந்தன.

கவியரசர் பாரதியாரின் 'குயி'லை ஞானக் குயிலாகவும், இசைக் குயிலாகவும், இலக்கியக் குயிலாகவும் அவர் கண்டு காட்டிய காட்சி செவி வழி சிந்தையை இலக்கிய ஆராய்ச்சி மொந்தை ஆக்கியது!

மூன்று நாள் சொற்பொழிவையும் கேட்டவர்கள் பாரதியை மட்டுமா அநுபவித்தார்கள்? கீட்ஸையும் ஷெல்லியையும் நுகர்ந்தார்கள்; தாகூரையும் துளசிதாஸரையும் ரசித்தார்கள்; பழந் தமிழ் இலக்கியங்கள் பலவற்றின் கருத்தாழத்தில் மூழ்கித் திளைத்தார்கள். குயிலைப் பாடிய கவிஞர்கள் பலப் பலரை மிகுந்த பிரயாசைப்பட்டுத் தேடிக் கண்டுபிடித்து நம்மெதிரே கொண்டு வந்து நிறுத்தினர் இராஜவேலு.

கவிஞர்களிடையே நிலவும் சில கருத்தொற்றுமைகளை உணர்த்திச் சிந்திக்க வைத்தார்; பாரதியின் கருத்து நயத்தை விளக்கிச் சிலிர்க்க வைத்தார்; அவரது நகைச்சுவையை எடுத்துரைத்துச் சிரிக்கவும் வைத்தார்.

"காரியாலய அலுவல்களிடையே அமைதியின்றி உழைப்பவன் நான். நகைச்சுவை உணர்ச்சி சற்றுக் குன்றியவன்தான். ஆகவே, பாரதியின் நகைச்சுவையை நான் எடுத்துரைக்கும் போது நீங்கள் சிரிக்கவில்லையானால் குற்றம் என்னுடையது. பாரதியின் குயில் பாட்டில் நகைச்சுவை இல்லை என்பதல்ல பொருள்!" என்று தொடக்கத்திலேயே சொல்லிக் கலகலப்பை ஏற்படுத்திவிட்டு நகைச்சுவை விளக்கத்தைத் தொடர்ந்தது நல்ல உத்தி.

ஃ ஃ ஃ

மூன்று நாட்களும் தலைமை தாங்கிய பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனர் நடுநிலை நாகரிகத்தோடு கூறிய முடிவுரை— பாராட்டுரை — 'பாரதியின் குயில்' பற்றிய சொற்பொழிவுகள் நூல் வடிவு பெறும்போது முன்னுரையாய் அமையத் தக்கது.

"ஒப்பிட்டு நோக்குவதில் தவறில்லை, ஒரு சில இடங்களில் நாம் காணும் கருத்தொற்றுமைகளுக்குக் காரணம் கடன் வாங்கியது தான் என்று தக்க ஆதாரமின்றிச் 'சட்' டென்று முடிவு கட்டிவிடுவதுதான் தவறு. இதில் ஆராய்ச்சியாளர்கள் மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும்" என்று மொழிந்தார் திரு மு. வ.

கவியரசர் பாரதியார் புகழ் நிலைபெறச் சொல்லாலும் கல்லாலும் கோயில் கட்டினர் பேராசிரியர் கல்கி. அத்திருப்பணியின் நினைவும் பயனும் நிலைக்க திரு கு. இராஜவேலு நிகழ்த்திய செந்தமிழ் ஆராய்ச்சித் தொண்டு அவருக்கும் பாரதிக்கும் கல்கிக்கும் புகழ் கூட்டும்.

— ந. சஞ்சீவி.



# மகாபாரதம்

## ராஜாஜி

### 7. யயாதி

பாண்டவர்களின் முன்னோர்களில் ஒருவன் யயாதி சக்கரவர்த்தி. தோல்வி என்பதையே அறியாத பராக்கிரம சாலி. எப்போதும் நியமம் காத்துப் பிரகிருதிகளையும் தேவர்களையும் மிகுந்த பக்தியுடன் பூஜை செய்து வந்தான். பிரஜைகளுக்கெல்லாம் நன்மை செய்து மிக்க கீர்த்தி பெற்றான்.

தருமம் தவறாமல் இவ்விதமாக ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்த யயாதி தன் மனைவி தேவயானிக்குச் செய்த தவற்றின் பயனாக மாமனார் சுக்ராசாரியார் இட்ட சாபத்தினால் திடீரென்று மூப்பைஅடைந்தான். ''ரூபத்தை அழிப்பதும் துன்பத்தைத் தருவதுமாகிய மூப்பை அடைந்தான்'' என்றார் பாரதம் பாடிய கவி. விருத்தாப்பியம் அடைந்த அனைவரும் அதிலுள்ள துக்கத்தை அறிவார்கள். அதிலும் நடு யௌவனத்திலிருக்கும் ஒருவன் திடீர் என்று மூப்பை அடைந்து விட்டால் சொல்ல வேண்டுமா?

இவ்வாறு இயற்கைக்கு மாறாகத் திடீர் என்று கிழத்தனம் அடைந்த யயாதிக்கு ஐந்து அழகிய குமாரர்கள் இருந்தனர். அவர்கள் எல்லோரும் க்ஷத்திரியக் கலைகளில் பயிற்சி பெற்ற நல்ல குணவான்கள். அவர்களை அழைத்து யயாதி ''உங்கள் பாட்டனார் சுக்ராசாரியார் இட்ட சாபத்தினால் இந்த மூப்பை நான் எதிர்பாராத வண்ணம் அடைந்து விட்டேன். புத்திரர்களே! இதுவரையில் நான் நியமங்களிலேயே என் காலமெல்லாம் கழித்து விட்டேன். நான் போகங்களைத் திருப்திப்பட அனுபவிக்கவில்லை. என் மூப்பைப் பெற்றுக் கொண்டு உங்களில் ஒருவன் தன் இளமைப் பருவத்தை எனக்குக் கொடுக்க வேண்டும். அவ்வாறு எவன் கிழத்தனமடைந்து என் சரீரத்தை எனக்காக ஒப்புக் கொள்ளுகிறானோ அவன் என் ராஜ்யத்தை ஆளக் கடவன். அவனுடைய இளம் சரீரத்துடன் நான் காம சுகங்களை அடைய விரும்புகிறேன்'' என்றான்.

முதலில் மூத்த குமாரனைக் கேட்டான். அவன், ''மகாராஜாவே! உம்முடைய கிழத்தனத்தை நான் பெற்றுக் கொண்டேனானால் ராஜ்யாதிகாரத்தில் என்ன சுகம் காண்பேன்? பெண்களும் வேலைக்காரர்களும் என்னைப் பார்த்துச் சிரிப்பார்களே! என்னால் முடியாது; என்னைக் காட்டிலும் உமக்குப் பிரியமான என் தம்பிகளைக் கேளும்'' என்றான்.

இரண்டாம் மகனைக் கேட்டதற்கு அவனும், ''தந்தையே! பலத்தையும் ரூபத்தையும் மட்டுமல்லாமல் அறிவையும் அழிப்பதான மூப்பைப் பெற்றுக் கொள்ளச் சொல்கிறீர். இதற்கு இசைய எனக்குப் போதிய தைரியம் இல்லை'' என்று மரியாதையாகமறுத்துவிட்டான்.

மூன்றாம் மகனும் ''கிழவனுக்கு யானை ஏற முடியாது; குதிரை ஓட்ட முடியாது. பேச்சும் தடுமாறும். அந்த நிலையில் நான் என்ன செய்ய முடியும்? அவ்வாறு ஒன்றும் செய்ய முடியாத நிலையில் உயிருடன் இருந்து என்ன பயன்? அவ்வாறு என்னால் ஒப்புக் கொள்ள முடியாது'' என்று சொல்லி விட்டான்.

இவ்வாறு மூவரும் மறுத்துவிடவே, அரசனுக்குக் கோபம் பொங்கிற்று. நான்காவது குமாரனைப் பார்த்து, ''நீ சில காலத்துக்கு என் மூப்பைப் பெற்றுக் கொள்ளக் கடவாய். சில காலத்துக்கு உன் இளமையை எனக்குத் தந்தாயானால், பிறகு உனக்குத் திருப்பிக் கொடுத்து விட்டு, எனக்குச் சாபமாக வந்த மூப்பை நானே எடுத்துக் கொண்டு விடுவேன்'' என்றான்.

இவ்வாறு பரிதவித்துக் கெஞ்சின அரசனைப் பார்த்து, ''அரசனே! மன்னிக்க வேண்டும். கிழவன் தட்டுத் தடுமாறி, உடல் அசுத்தம் நீக்கிக் கொள்வதற்குக் கூடப் பிறர் உதவியை நாட வேண்டியதாகும். நீர் சொல்வதை ஒப்புக் கொண்டால், நான் எல்லாக் காரியங்களிலும் சுதந்திரத்தை இழந்து வாழ்க்கையைத் துக்கத்துடன் நடத்த வேண்டியவனாவேன். இது எனக்குப் பிடிக்கவில்லை'' என்று நான்காவது மகனும் சொல்லி விட்டான்.

இவ்வாறு நான்கு புதல்வர்களாலும் நிராகரிக்கப்பட்ட யயாதி துயரத்தில் மூழ்கினான். கொஞ்சநேரம் கழித்து, தன் சொல்லை எப்போதும் தவறாத கடைசிக் குமாரனைப்பார்த்து, ''நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். இந்த மூப்பையும், கோரமான தோல் மடிப்புக்களையும், தள்ளாமையையும், நடையையும் சுக்ராசாரியாருடைய சாபத்தினால் பெற்றேன். இதை என்னால் பொறுக்க முடியவில்லை. இந்தத் துன்பத்தை நீ என்னிடமிருந்து பெற்றுக் கொண்டால் நான் சில காலம் போகங்களை அனுபவித்து விட்டுப் பிறகு உன் இளமையை உனக்குத் திருப்பிக் கொடுத்து விட்டு, மூப்பையும் துக்கத்தையும் வாங்கிக் கொள்வேன். உன் அண்ணன்மார்களைப் போல் நீயும் மறுத்து விட வேண்டாம்!'' என்று இறைஞ்சினான்.

கடைசி ராஜ குமாரனான புரு என்பவன் அன்பு மேலிட்டு, ''அப்பனே! உன் கட்டளையின்படி நான் சந்தோஷமாகச் செய்கிறேன். மூப்பையும் ராஜ்ய பாரத்தையும் எடுத்துக் கொள்கிறேன்'' என்று சொன்னவுடன் யயாதி அவனைக் கட்டி அணைத்துக் கொண்டான்.



வில்லை. யோகத்தில் இருந்த காலத்தில் குத்தப்பட்டபடியால் அந்த யோக சக்தியால் அப்படியே உயிருடன் இருந்து வந்தார். வனத்தில் அங்கங்கே இருந்த ரிஷிகள் அவரிடம் வந்து சேர்ந்தார்கள். ''ஓ! மாண்டவ்யரே! இந்தப் பயங்கரமான துயரத்தைத் தாங்கள் ஏன் அடைந்தீர்கள்?'' என்று தபோதனர்கள் கேட்டார்கள்.



''நான் யாரிடத்தில் குற்றம் சொல்வேன்? உலகத்தைக் காக்கும் அரசனுடைய சேவகர்கள் இவ்வாறு எனக்குச் சிட்சை கொடுத்திருக்கிறார்கள்'' என்று மாண்டவ்யர் சொன்னார்.

சூலத்தில் ஏற்றப்பட்ட ரிஷி அன்ன ஆகாரமின்றி உயிருடன் இருக்கிறார் என்றும், அவரைச் சுற்றி வனத்திலிருக்கும் மற்ற ரிஷிகள் வந்து கூடி யிருக்கிறார்கள் என்றும் அரசனுக்குச் சமாசாரம் எட்டியது. அரசன் வியப்பும் திகிலும் அடைந்து உடனே பரிவாரத்துடன் வனத்துக்குப் போனான். அரசன் ரிஷியினுடைய நிலையைப் பார்த்ததும் பிரமித்துப் போய் உடனே சூலத்திலிருந்து அவரை இறக்கிவிட உத்தரவிட்டு, அவர் காலில் விழுந்து நமஸ்கரித்து, ''அறியாமையால் நான் இந்த அபராதம் செய்து விட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்'' என்று கெஞ்சினான்.

மாண்டவ்யர் அரசன்மேல் கோபிக்கவில்லை. நேராகத் தர்ம தேவதையிடம் சென்றார். ஆசனத்தில் வீற்றிருந்த தர்ம தேவதையைக் கண்டு, ''இந்த உபத்திரவத்தை அனுபவிக்கும்படியான கருமம் நான் என்ன செய்தேன்? சொல்லக் கோருகிறேன்'' என்று கேட்டார்.

ரிஷியின் தவ வலிமையை அறிந்த தரும தேவன் பயந்து, பணிந்து, ''சுவாமி, நீர் பக்ஷிகளையும் வண்டுகளையும் இம்சித்தீர். சொற்பமாயிருந்தாலும் தானமும் பாவமும் மிகுந்த அளவில் நற்பயனையும் தீய பயனையும் தரும் என்பது உமக்குத் தெரியும் அல்லவா?'' என்று பதில் சொன்னார்.

தருமன் சொன்னதைக் கேட்ட மாண்டவ்யர் வியப்புற்று ''இந்த இம்சையை நான் எப்போது செய்தேன்?'' என்று கேட்டார்.

''நீர் குழந்தையாக இருந்த காலத்தில் செய்தீர்'' என்றார்.

''சிறு பையன் அறியாமல் செய்த குற்றத்துக்குப் பெரிய தண்டனை உன்னால் விதிக்கப்பட்டது. இதற்காக நீ பூலோகத்தில் மனுஷ்யனாகப் பிறப்பாய்'' என்று தரும தேவதையை மாண்டவ்ய ரிஷி சபித்தார்.

இவ்வாறு மாண்டவ்ய ரிஷியின் சாபத்தைப் பெற்ற தரும தேவதை விசித்திர வீரியனின் மனைவி அம்பாலிகையினுடைய வேலைக்காரியின் வயிற்றில் விதுரனாக அவதரித்தான்.

தரும தேவதையின் அவதாரமே விதுரன் என்பதற்கு இந்தக் கதை. விதுரன் தர்ம சாஸ்திரத்திலும் ராஜ நீதியிலும் ஒப்பற்ற தேர்ச்சியடைந்து ஆசையும் கோபமும் அற்ற மகாத்மாவென்று உலகத்தில் பெரியோரெல்லாராலும் கருதப்பட்டான். பால்ய பருவத்திலேயே திருதராஷ்டிர ராஜாவுக்குப் பிரதான மந்திரியாக விதுரனைப் பீஷ்மர் அமைத்தார்.

விதுரனுக்கு ஒப்பான தர்ம நிஷ்டனும் அவனைப் போல் சிறந்த அறிவு பெற்றவனும் மூவுலகங்களிலும் யாரும் இல்லை யென்று வியாசர் சொல்லுகிறார். திருதராஷ்டிரன் சூதாட்டத்துக்கு அனுமதி கொடுத்த காலத்தில் விதுரன் அவன் காலில் விழுந்து, ''அரசனே! பிரபுவே! இந்தக் காரியத்தை நான் ஒப்பவில்லை. இந்தச் சூதாட்டத்தின் காரணமாக உமது புத்திரர்களுக்குள் விரோதம் வரும். வேண்டாம்!'' என்று மிகவும் வற்புறுத்தித் தடுத்தான்.

திருதராஷ்டிரனும் ''சூதாட்டம் வேண்டாம். விதுரன் அங்கீகரிக்கவில்லை. மிகவும் சிறந்த புத்தியுள்ள விதுரன் நமக்கு எப்போதும் நன்மையே சொல்லுபவன். அவன் என்ன சொல்லுகிறானோ அதுவேதான் நமக்கு நன்மை தரும். நிகழ்ந்ததும் நிகழப் போவதும் அறிந்தவரான பிரகஸ்பதி எழுதிய சாஸ்திரமெல்லாம் விதுரன் அறிந்திருக்கிறான். வயதில் என்னை விடச் சிறியவனாயினும் சிறந்த புத்திசாலியான விதுரனே நம்முடைய குலத்துக்குத் தலைவனாகக் கருதப்படுகிறான். மகனே, சூதாட்டம் வேண்டாம். சூதாட்டத்தில் பெரிய விரோதம் வரும் என்று விதுரன் சொல்லுகிறான். நம்முடைய ராஜ்யத்தின் நாசத்தை அவன் இதில் காண்கிறான். இந்தச் சூதாட்ட யோசனையை விட்டுவிடு'' என்று பலவாறாகத் துஷ்ட புத்தி கொண்ட தன் மகனுக்குத் திருதராஷ்டிரன் சொல்லிப் பார்த்தான். ஆனால் அவன் கேட்கவில்லை. மகனிடத்தில் வைத்த அன்பினால் அவன் கோரிய படியே யுதிஷ்டிரனுக்குச் சூதாட்ட அழைப்பு அனுப்பி விட்டான். இந்த நிகழ்ச்சியைப் பற்றிப் பின்னால் வேறு அதிகாரத்தில் படிப்பீர்கள். **(தொடரும்)**





# காசிக்கும் வீசம் அதிகம்

**கா**ஞ்சீபுரமும் கும்பகோணமும் கோயில்கள் நிறைந்த ஊர்கள். சிவ விஷ்ணு ஆலயங்கள் இந்த இரண்டு தலங்களிலும் மிகுதியாக இருப்பது போல வேறு எங்கும் கிடையாது. கும்பகோணம் என்றதும் நமக்கு மகாமகம்தான் நினைவுக்கு வருகின்றது. சென்ற மகாமகம் 1956 ஆம் ஆண்டில் நடைபெற்றது. இந்த ஆண்டு மகாமகம் பிப்ரவரி 14ந் தேதி நடைபெறும். கங்கை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நருமதை, சிந்து, காவேரி, வேகவதி, மகாநதி முதலிய நதிகள் மகாமக தீர்த்தத்தில் கலப்பதால், அந்தக் குளத்தில் நீராடினால் பாபங்கள் அகலும் என்பது ஐதிஹ்யம்.

பிரளய காலம் வருவதை அறிந்த பிரமன் உலகத்தை மறுபடியும் சிருஷ்டிப்பதற்கு அருள் புரியுமாறு சிவபெருமானைத் தோத்திரம் செய்தான். சிவபெருமான் அமுதத்தையும் மண்ணையும் பிசைந்து, குடமாக்கி அதில் அமுதத்தை நிரப்பி நடுவில் சிருஷ்டி பீஜத்தை வைத்து பிரமனிடம் தந்தார். அக்குடத்தை மேரு மலையின் உச்சியில் வைத்தால் பிரளய வெள்ளம் வரும்போது குடம் தெற்கு நோக்கி மிதக்கும் என்றும், அப்பொழுது தாமே குடத்தை உடைத்து அமுதத்தைப் பல இக்கிலும் பாய்ச்சி சிருஷ்டியைத் தொடங்கப்போவதாகவும் சிவன சொன்னார். பிரமன் விடைபெற்றுச் சென்று ஊழிக் காலத்தை எதிர்பார்த்து நின்றான். ஊழிக் காலமும் வந்தது. சிவன் குடத்தைச் சிதைத்தார்.* குடம் சிதைந்ததும் மூக்கு வெகு தூரம் சென்று விழுந்தது. அவ்விடமே குடமூக்கு எனும் கும்பகோணம் ஆயிற்று. பின்பு அமுதத்தினால் நனைந்த வெண் மணலை லிங்க வடிவமாக்கிப் பூஜித்தனர். சிவபெருமான் அதனுள்

* இந்தக் கட்டுரையில் வரும் இந்தக் காட்சியையே அட்டைப்படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் வினு.



பொற்றாமரைக் குளமும் சாரங்கபாணி கோயிலும்.
ஆதிகும்பேசர் கோயில்.
தேர் விழா.
ஆதிகும்பேசர் வீதி உலா.
மகாமகம் - 1956.

புகைப்படங்கள் கட்டுரை ஆசிரியருடையவை.





சென்று மறைந்தார். கும்ப ஜலத்தைக் கொண்டு செய்யப்பட்டதால் கும்பேசர் என்ற பெயர் ஏற்பட்டது. சிவபெருமான் குடந்தையில் எழுந்தருளியதைக் கண்டு பார்வதி தேவி அவளது ஐம்பத்தொரு பீடங்களும் பிரளயத்தில் மிதந்து வந்து கும்ப கோணத்தில் ஒன்றுகூட அங்கு மங்கள நாயகி என்ற நாமத்துடன் பகவானை அடைந்தாள்.

கும்பகோணத்தில் மிகவும் முக்கியமான கோயில் ஆதி கும்பேசுவரர் கோவில். இது பாடல் பெற்ற தலம். சோழ அரசனால் திருப்பணி செய்யப்பட்டது. இங்கு நவ ராத்திரி மண்டப மேல் தளத்தில் 27 நட்சத் திரங்களும் 12 ராசிகளும் செதுக்கப்பட்டிருப் பது குறிப்பிடத் தக்கது. கலை அழகு நிரம் பிய இந்தக் கோயிலில் அழகான கல் நாயனம் ஒன்று உள்ளது.

கும்பகோணத்தில் உள்ள திருமால் கோயில்களில் சிறந்தது சாரங்கபாணிகோயில். பிருகு ரிஷியின் வேண்டுகோளின்படி அவர் மகளை மணந்து மருகராக இங்கு பெருமாள் தங்கினார். ஆராவமுதன் என்ற நாமமும் அவருக்கு உண்டு. நாச்சியார் கோமள வல்லி. சூரியனால் இக்ஷ்வாகுவுக்குக் கொடுக் கப்பட்ட விமானம், ராமனுக்குக் கிடைத் தது. ராமர் அதை விபீஷணனுக்குக் கொடுக்க அவன் அதை இலங்கை கொண்டு செல்லும் வழியில் காவேரி ஆற்றின் கரையில் அனுஷ் டானம் முடிக்க வைக்க, அது அங்கேயே நிலையாக அமைந்து விட்டது. விபீஷணன் வருந்தித் துதிக்க, இனி அதை அசைக்க முடியாது என்று பரமன் கூறி, தான் முனி வர்களின் வேண்டுகோளின்படி அங்கேயே கோவில் கொள்ளப் போவதாக அருளினார். விபீஷணன் ஆண்டுதோறும் வந்து தரிசிப்ப தாகப் புராணம் கூறுகின்றது.

சாரங்கபாணி கோவில் கோபுரம் மிகவும் உயரமானது. 146 அடி உயரமும் 11 மாடங்களும் கொண்டது. சில ஆண்டு களுக்கு முன் திருப்பணி செய்யப்பட்டது. இந்தக் கோயிலில் புராண வரலாற்றுச் சித் திரங்கள் உள்ளன. கல் ரதம் ஒன்று உளது. வைதிக விமானம் என்று பெயர். சிற்ப உருவங்களுள் நரசிம்மாவதாரம் சிறந்தது.

பொற்றாமரைக் குளம் அமுதம் வீழ்ந்த இடம். தெப்ப உற்சவம் பகலிலும் இரவி லும் சிறப்பாக நடைபெறும். நடுவே நீராழி மண்டபம்.

நாகேசுவரர்கோவில் நகரின் நடுவே அமைந் துள்ளது. ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதத்தில் 3 நாள் சூரிய ஒளி லிங்கத்தின் மீது படும்போது சூரிய பூஜை நடைபெறும்.

காசி விசுவநாதர் கோயில் மகா மகக் குளத்தின் வட கரையில் உள்ளது. நவ கன்னிகைகளும், நவ நதிகளும் பூஜித்த இடம் திருக்குடந்தை காரோணம் என்ற பெய ருடன் விளங்குகிறது.

ஸ்ரீ சக்ரபாணி கோவிலில் மகாவிஷ்ணு சுதர்சனம் என்னும் சக்கரத்துடன் சேவை



என்.ராமகிருஷ்ண



மேலே: ராமசாமி கோயில் சிற்பம்.

இங்கே: நாகேசுவரர் கோயில் கல் ரதம்.

சாதிக்கிறார். சக்ர தீர்த்தத்தில் பிரமன் சக்கரத்தைப் பூஜித்தார்.

எல்லாக் கோயில்களையும் விட சிற்பக் கலைக்குச் சிறந்த இடம் ராமசுவாமி கோயில். விதம் விதமான சிற்பங்களைச் செதுக்கியுள்ளார்கள். ராமாயணச் சிற்பங்கள் மிகவும் விசேஷம். ராமர், சீதை, லக்ஷ்மணர், பரதர் சத்ருக்னர் மூலஸ்தானத்தில் மிகப் பெரிய உருவங்களாக உள்ளனர். ஹனுமார் வீணையுடன் காட்சி யளிக்கின்றார். தூண்களில் ரதி, மன்மதன், விபீஷணன் பட்டாபிஷேகம், உலகளந்த பெருமாள் மற்றும் குதிரைத் தூண்கள், யாளித் தூண்கள், சாமரம் வீசும் பெண்கள் நம் சிந்தனையைக் கிளறி விடுகின்றனர்.

மகாமகக் குளம் தமிழ் நாட்டில் உள்ள அழகான குளங்களில் ஒன்று. கரைகளின் மீது 16 கோயில்கள் உள்ளன. சுமார் 10 ஏக்கர் விஸ்தீரணமுள்ளது. குளத்தைச் சுற்றி அழகான படிகள் கட்டப்பட்டுள்ளன. மகாமகத்துக்கு முன் இந்தக் குளத்திலுள்ள நீர் வெளியேற்றப்படும். கொஞ்சம் தண்ணீர் தான் விட்டு வைக்கப்படும். ஒன்பது கிணறுகள் உள்ளன. மகாமகத்தின்போது லட்சக்கணக்கான மக்கள் இதில் நீராடுவர். ஒன்பது கன்னியர்கள் இக்குளத்தில் நீராடித் தம் பாபத்தைப் போக்கிக் கொண்டனர் என்பது ஐதிஹ்யம்.

கும்பகோணத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரியார் சுவாமிகள் மடமும் மற்றும் பல மடங்களின் கிளை மடங்களும் உள்ளன. கும்பகோணம் பல சங்கீத மேதைகள் வாழ்ந்த இடம். கும்பகோணம் அரசினர் கல்லூரி நூறு ஆண்டுகளுக்கும் மேலாக இங்கு உள்ளது. கணித மேதை ஸ்ரீனிவாஸ ராமானுஜம் கல்வி கற்ற இடம் இதுவே. அறிஞர்களுக்குப் பெயரெடுத்தது கும்பகோணம்.

மகாமக காலத்தில் காசிக்கும் வீசம் அதிகமாகக் கருதப்படும் குடந்தை சென்று மகாமகக் குளத்தில் ஸ்நானம் செய்பவர்கள் பெரும் பாக்கியசாலிகள்.

# தர்மம் நிலைத்திடும்

சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன் ஒரு நாள் நண்பரொருவருடன் ஸ்ரீ அஹோபில மடத்தின் ஜீயரவர்களைக் கண்டு நமஸ்கரிக்கச் சென்றிருந்தேன்.

இரண்டு முறை நமஸ்கரிக்கும் போதே, "நாராயண — நாராயண !" என்று ஸ்ரீ ஸ்வாமிகள் சொல்லி (நமஸ்கரித்தது போதும் என அறிவித்து) எழுந்து நின்ற என்னிடம் முதல் கேள்வியாக......

"பெரியவர் சௌக்கியமா இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். யாரைப் பற்றிக் கேட்கிறார்கள் என்று முதலில் விளங்கவில்லை. ஆகவே, "உம், உம்!" என்று மழுப்பிக் கொண்டிருக்கும் போதே —

"ஒரு காலத்தில் (தாம் காஷாயம் ஏற்பதற்குமுன்) அவரோடு தீவிரமாகப் போர் புரிந்தேன். ஆலயப் பிரவேச விஷயமாகக் காஞ்சி கோயிலில் பிரவேசத்திற்காக ராஜாஜி செய்து வந்த முயற்சிகள் ஒவ்வொன்றையும் எதிர்த்துப் போராடி வந்தேன்....." என்று ராஜாஜி அவர்களின் பற்பல முயற்சிகளையும் அதற்குத் தாம் செய்த பற்பல எதிர்ப்புக்களையும் ஒவ்வொன்றாகச் சொல்லி, "இரண்டு ராஜாக்களின் யுத்தம் முடிவில்லாமல் நடந்து வந்தது" என்று சொன்னார்கள்.

இன்றைய ஜீயர் அவர்களுக்குப் பூர்வாசிரமத்தில் உ. வே. வித்வான் ராஜகோபாலாச்சார் என்றுதான் திருநாமம்.

"கடைசியாக 'ஆர்டினென்ஸ்'—அதைத் தொடர்ந்து சட்டம் என்று வந்தது. இனி இப்போராட்டம் வேறு துறையில் நடக்க வேண்டியது என்று ஏற்படவே அன்றைய எங்கள் போராட்டம் ஒருவிதமாக நின்றது.

"பிறகு தர்மத்தைப் பிரசாரம் செய்வதற்கென்றே தமது வாழ்நாளை அர்ப்பித்த (தம்மைப் போன்ற) வர்களின் திட்டத்தை ஏற்று வேறொரு துறையில் வேறொரு வகையில் ராஜாஜியும் தர்மத்தைத் தமது கட்டுரைகள் மூலம் பிரசாரம் செய்து வரலாயினர். பழைய மனஸ்தாபமும் என்னுள் மறைந்தது. இன்று ஸ்பக்ஷர்களாகியுள்ளோம்" என்று மிகுந்த பெருமையுடனும் பூரிப்புடனும் சொன்னார்கள்.

ஸ்ரீமத் ராமாயணத்தைச் சரணாகதி சாஸ்திரமென்றும், மகாபாரதத்தைத் தர்மசாஸ்திரம் என்றும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஏற்றுள்ளனர். ஸ்ரீ அஹோபில மடத்திய இன்றைய ஜீயரவர்கள் தமது பூர்வாசிரமத்தில் மிக மிகப் பிரசித்தி பெற்ற உபந்நியாஸகர்.... ஆஸ்திகபரமாக ஓயாது ஒழியாது கட்டுரைகளும் எழுதி வந்தார்கள். 'பண்டித ஸிம்ஹம்' 'பிரசார ஸிம்ஹம்' என்றெல்லாம் பூர்வாசிரமத்தில் பெயரும் புகழும் பெற்றிருந்தவர்கள் இன்று "அழகிய சிங்கர்" என்று அழைக்கப்படுபவர்கள். இவர்கள் ராஜாஜி அவர்களின் கட்டுரைகளைப் பற்றி மதிப்பீடு செய்ததுதான் மேற்கண்டவாறு.

மேலே குறிப்பிட்ட சமயத்திலேயே ஸ்ரீ ஜீயரவர்கள் வடமொழியில் யாத்த கூரத்தாழ்வாரின் ஒரு சுலோகத்தைச் சான்று கூறி, கலியில் தர்மத்தை நிலைநிறுத்த நான் கல்கியாக அவதரிக்கிறேன் என்று பகவான் அருளியதையும் சொல்லி — தர்மத்தைப் பிரசாரம் செய்யும் பத்திரிகைக்குக் 'கல்கி' என்ற பெயரும் எப்படியோ ஏற்பட்டுள்ளதில் ஓர் ஆச்சரியமான பொருத்தம் இருக்கிறது என்றும் விமரிசனபரமாக அருளினார்கள்.

ராஜாஜி அவர்களின் மகாபாரதம் கல்கியில் தொடர்ந்து பிரசுரமாகி வரும் இத்தருணத்தில் எனக்கு மேற்கூறிய நிகழ்ச்சி நினைவில் நிழலாடுகிறது.

— ஸ்ரீஹரி

## சுவையான சர்ச்சைகள்

# அழகுப்போட்டி ஆபாசமல்ல

''அழகைப் படைத்த ஆண்டவன் அதனை யாரும் கண்டு ரசிக்கக் கூடாது என்று கருதியிருப்பானா? வண்ண மலர்களையும் வான வில்லின் எழிலையும் மக்கள் கண்டு மகிழ்வ தில்லையா? அழகுள்ள எந்தப் பொருளைக் கண்ணுற்றாலும் மனத்துக்கு மகிழ்ச்சியும் உற்சாகமும் ஏற்படும். அழகான யுவதிகள் அழகுக்கு அழகு செய்வதே போன்று நாகரிக மாக உடையணிந்து வண்ண விளக்குகளின் ஒளியில் மேடையில் தோன்றும்போது பார்க் கப் பரவசமா யிருக்கும். பார்ப்போரின் உள்ளத்தில் உற்சாகம் பிறக்கும். மக்களின் மனத்தில் அழகுணர்ச்சியை வளர்க்க அழகுப் போட்டி உதவுகிறது'' என்கிறார் ஸ்ரீமதி லட்சுமி பிராணநாத்.

''அழகுப் போட்டி பாரதப் பண்புக்கு, கலாசாரத்துக்கு ஒவ்வாது என்று பொதுவாக ஒரு கருத்து நிலவுகின்றதே அதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டதற்கு அவர் கூறுவதாவது:

''அந்தக் காலத்தில் பெண்கள் வீட் டோடு அடைபட்டு இருந்தனர். படித்துப் பட்டம் பெற்ற பெண்கள் கூட வேலைக்குப் போவதில்லை. நாளடைவில் பெண்கள் அதிக அளவில் தொழில், அரசாங்க அலுவ லகங்களில் பணிபுரியத் தொடங்கினர். இப் போது அநேகமாக எல்லாத் துறைகளிலுமே மகளிர் பணியாற்றுகின்றனர். வெளியே செல்லும் பெண்கள் பகட்டாக உடையணிய விரும்புகின்றனர். கவர்ச்சியுடன் விளங்கத் தான் விரும்புவார்கள் பெண்கள் அனை வருமே. இதற்கு ஓரளவு உதவுகிறது அழகுப் போட்டி. புடவை உடுத்துவதையே எவ்வளவு நாகரிகமாக, கவர்ச்சியோடு அணியலாம் என்பது அழகுப் போட்டியைப் பார்த்தவர் களுக்குத் தெரிந்திருக்கும். அண்மையில் சென்னையில் நிகழ்ந்த அழகுப் போட்டியில் கலந்துகொண்ட பெண்கள் பலரும் காஞ்சி புரம், பனாரஸ் புடவைகளைத்தான் அணிந் திருந்தனர். அழகுப் போட்டியில் வெறுப்ப தற்கு என்ன இருக்கிறது? 'பெண்கள் முக மலர் திரையிட்டு மறைத்து வைத்தல்' என்ற கொடுமை மறைந்துவிட்ட நிலையில், நன்கு ஒப்பனை செய்து கொண்டு கவர்ச்சியுடன் விளங்குவதில் பெண்கள் ஆர்வம் காட்டு வதில் வியப்பில்லை. அண்மையில் சென்னை யில் நடந்த மிஸ் டெர்மாகேர் அழகுப்




போட்டியில் முதற் பரிசு பெற்ற யாஸ்மின் சினாய் (படம்) ஒரு முஸ்லிம் அழகி என் பதை நினைவுற வேண்டும். பழையன கழி தலும் புதியன புகுதலும் காலப் போக்கில் நிகழ்வதுதானே?''

''ஆனால், மரபு என்று ஒன்றிருக்கிறதே? நமது முன்னோர்கள், பெண்களின் கவர்ச்சி யைப் பலர் முன்னிலையில் விளம்பரப்படுத்து வதை விரும்புவதில்லையே?'' என்றேன்.

''ஆடைகளுக்கு விளம்பரம் செய்பவர்கள் கவர்ச்சியான பெண்களின் புகைப்படத்தைப் பல பத்திரிகைகளில் பிரசுரிக்கவில்லையா? திரைப்படங்களில் எவ்வளவு விளம்பரங்கள் வெளியாகின்றன? பெண்களின் கவர்ச்சியான தோற்றத்தைப் பத்திரிகைகளும் திரைப் படங்களும் விளம்பரம் செய்யும்போது அழகுப் போட்டிக்கு மட்டும் ஏனோ இந்த எதிர்ப்பு? இதில் மரபுக்கு விரோதமாக



ஸ்ரீமதி லக்ஷ்மி

எதுவுமில்லை. திரைப் படங்களில் இப்போதெல்லாம் ஆடைக் குறைப்பு அதிகமாகி வருகிறது. படம் பார்க்கக் கூட்டம் குறையவில்லை! அழகுப் போட்டிகளில் பங்கு பற்றும் பெண்கள் திரைப் படங்களில் நடிக்கும் நடிகைகளைப் போல் அந்த அளவுக்குக்கூட ஆடைக் குறைப்பு செய்வதில்லை. அழகுப் போட்டியின் நோக்கம் கவர்ச்சியே ஒழிய ஆடைக் குறைப்பின் மூலம் அதை நிறைவேற்றுவதன்று'' என்பது ஸ்ரீமதி லட்சுமியின் உறுதியான நம்பிக்கை.

அவர் மேலும் ஓர் உதாரணம் கூறுகிருர்: ''வேலைக்குப் போகும் பெண்கள் இருக்கட்டும்; வீட்டோடு இருக்கும் பெண்டிர் கவர்ச்சியாக உடையணியக் கூடாதா? வெளியே பல இடங்களில் சுற்றியலையும் ஆண்கள் அழகில்லாத பெண்களிடம் கூட ஏதோ அபூர்வ அழகு இருப்பதாக எண்ணிப் பிரமிக்கின்றனர். ஏன்? அவர்களின் ஒப்பனையும், செயற்கை அலங்காரமுமே இந்த மன மயக்கத்தின் காரணம். அந்த ஒரு கவர்ச்சியைத் தன் மனைவியிடமே கணவன் காணக் கூடுமானுல் பிற பெண்டிரிடம் அவன் மனம் ஏன் லயிக்கிறது? சில கல்லூரி மாணவிகளுக்கே தங்கள் இயற்கை அழகை நன்கு எடுத்துக் காட்டும்படி கவர்ச்சியாகப் புடவை உடுத்தத் தெரியாது; தெரியவில்லை என்பதை நான் அறிவேன். பெண்கள் பலருக்குக் கூச்சம் அதிகமாக இருக்கிறது. தன்னம்பிக்கையும் தைரியமும் இல்லாததே காரணம். உயர் கல்விக்காகவும் பிற காரணங்களுக்காகவும் இத்தகைய பெண்கள் வெளி நாடுகளுக்குச் சென்ருல் மிகவும் சிரமப்படுவார்கள். சங்கோஜம் இவர்களின் முன்னேற்றத்துக்குத் தடையாக இருக்கும். தேவையற்ற இந்தக் கூச்சத்தைப் போக்கவும், பெண்டிரின் தன்னம்பிக்கையை வளர்க்கவும் அழகுப் போட்டி பெரிதும் உதவும் என்று நிச்சயமாக நான் நம்புகிறேன்.''

''உங்களுக்கு இந்த நம்பிக்கை எவ்வாறு ஏற்பட்டது?''

''புகைப்படம் எடுப்பது என் முக்கியவேலை. (முன் பக்கத்தில் பிரசுரமாகியுள்ள யாஸ்மின்னுடைய படம் ஸ்ரீமதி லட்சுமி எடுத்ததுதான்.) எதையும் கலைக் கண்ணோடு பார்க்கும் தன்மை என்னிடம் வளர்ந்தது. அழகுப் போட்டியில் பங்கெடுத்துக் கொண்ட பெண்களைப் பார்த்துப் புகைப்படம் எடுக்கும் போதுகூட இதே கலைக் கண்ணோடுதான் பார்ப்பேன். ஓர் அழகான சிற்பத்தை எந்தக் கலைக் கண்ணோடு பார்க்கிருேமோ, அதே கலையுணர்ச்சியுடன்தான் அழகுப் போட்டியில் மேடையில் தோன்றும் பெண்களையும் பார்க்க வேண்டும். மக்களும் அதே ரசிகத் தன்மையோடுதான் பார்க்கிருர்கள் என்று கருதுகிறேன். இந்த நம்பிக்கையின் அடிப்படையில்தான் என் தங்கை சாந்தியையும் இந்த அழகுப் போட்டியில் பங்கெடுத்துக் கொள்ளுமாறு உற்சாகப்படுத்தினேன். என் சிநேகிதிகள் சிலரையும் உற்சாகப்படுத்தி, அழகுப் போட்டியில் பங்கெடுத்துக் கொள்ளும்படி ஊக்கினேன்'' என்கிருர் ஸ்ரீமதி லட்சுமி.

பேட்டி : **'பாணன்'**

(அடுத்த இதழில் இதற்கு மாருன கருத்துக்களைத் தெரிவிக்கிருர் சென்னை எதிராஜ் மகளிர் கல்லூரித் தலைவர் மிஸ். மாத்யூ.)




முச்சந்தியும் நாற்சந்தியும் சாதாரணம். ஆனுல் சென்னை அசோகா ஓட்டலை ஒட்டிய சாலை முனை ஐந்து தெருக்கள் கூடும் இடம். இங்கே சாலை விபத்து அதிகம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனுல் விபத்து நேர்வதற்குத்தான் எவ்வளவு வசதியான முனை இது!

அடிக்கடி இந்தப் பகுதியில் சாலை பல்வேறு காரணங்களுக்காகத் தோண்டப்பட்டு ஒரே குண்டும் குழியுமாக இருப்பதால் மட்டும் விபத்து நேர வசதியான முனை என்று சொல்லவில்லை. ஆஸ்பத்திரியா? — ஒன்றுக்கு மூன்று — மூன்று சாலைகளிலே உள்ளன! நாலாவது வீதியிலே, விபத்து விஷயமாக விசாரணை செய்ய போலீஸ் மாஜிஸ்டிரேட் கோர்ட் உள்ளது. விபத்து நேர்ந்ததும் தவறிழைத்தவர் தப்பி ஓடலாம் ஐந்தாவது தெருவில் சென்ருல் — அது எழும்பூர் ரயிலடிக்கு அழைத்துப் போகிறது!

— **சிரி - வாசன்**

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு

## வலியை அதி வேகமாக வெளியேற்ற

# புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர்—அதுதான் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோஃபைன்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோஃபைன்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருள்களின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக் கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் சுலபமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம் வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்ட நேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலக்கியோ, ஒரு டம்ப்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல் வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவு பெரியதாக உள்ளதோ, அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவு நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவு நேரம் காக்கவேண்டியிருக்கிறது.




மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

---

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.






புதிய

மைக்ரோஃபைன்ட்

'ஆஸ்ப்ரோ'

**அதி வேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது**

நிகோலஸ் தயாரிப்பு



# தமிழுக்குத் தனி ரயில்

பொதுவாக எழும்பூர் ரயில் நிலையம் தூங்கி வழியும் நேரம் — நள்ளிரவு! ஆனால் அன்றைக்கு நடுநிசியில் மட்டும் ஏனோ உறக்கம் கொள்ளாமல் உற்சாகமாக ஆர்ப்பரித்தது எழும்பூர் !

ஆம்; 1968 ஜனவரி பதினோராம் நாள் இரவில் தாங்க முடியாத சுறுசுறுப்பும் தாங்க முடியாத கோலாகலமும் கொண்டு விளங்கியது அந்த ரயில் நிலையம் !

அன்றிரவு தமிழுக்கென்றே ஒரு தனி ரயில் புறப்படத் துடிப்போடு நின்று கொண்டிருந்தது ! பன்னிரண்டு ரயில் பெட்டிகளில் அனைத்தும் முதல் வகுப்புப் பெட்டிகளே கொண்ட அந்த ரயிலில் உணவு வழங்கும் தனிப் பெட்டி ஒன்றும், மருத்துவ வசதிகள் அடங்கிய பெட்டி ஒன்றும் இணைக்கப்பட்டிருந்தன.

ஒவ்வொரு ரயில் பெட்டியிலும் இருமருங்கிலும், ''இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாட்டுப் பிரதிநிதிகள்'' என்ற பெயர்ப் பலகை, வரிசை எண்ணுடன் விருது முழக்கம் ஏந்தி இலங்கியது!

உலகத் தமிழ் மாநாடு முடிவடைந்ததும் மொழி நாட்டம் கொண்ட வெளிநாட்டு அறிஞர்கள் தமிழ் நாட்டைச் சுற்றிப் பார்ப்பதற்காகவே இந்தத் தனி ரயில் ஏற்பாடு !

எட்டுத் திக்கிலிருந்தும் வந்திருந்த நாற்றைம்பது ஆராய்ச்சியாளர்கள் இந்தச் சுற்றுலாவில் கலந்து கொண்டனர். ரயிலில் ஏறியதும் அறிஞர்களுக்குச் சிறிது திகைப்பு ஏற்பட்டது ! ஏனெனில், இவர்கள் வருவதற்கு முன்பாகவே, ஒவ்வொரு முதல் வகுப்பு அறையிலும் படுக்கைகள் வைத்து 'ரிசர்வ்' செய்யப்பட்டிருந்தன! எனவே, தங்கள் படுக்கையை எங்கே வைப்பது என்றும் சிலருக்கு ஐயம் ஏற்பட்டது!

''தயங்காதீர்கள் ! அந்தப் படுக்கைகள் உங்களுக்காகவே வைக்கப்பட்டுள்ளன !'' என்று சுற்றுலாக் குழு நண்பர் ஒருவர் உறுதி கூறிய பிறகுதான் உண்மை புலனாகியது. உலகத் தமிழ் அறிஞர்களின் சுற்றுலா வசதிக்காகப் புத்தம் புதிய முதல் வகுப்புப் பெட்டிகள் மட்டுமல்லாமல் படுக்கை வசதிகளையும் செய்திருந்தனர், தென்னக ரயில்வேயினர் ! படுக்கை விரிப்பு, தலையணை, போர்வை, துண்டு முதலானவை அடங்கிய ''ஹோல்டால்'' ஒவ்வொருவருக்கும் தரப்பட்டிருந்த புதுமை இதுவரை கண்டிராத பெருமையல்லவா ?

தமிழக அரசும், தென்னக ரயில்வேயும், விருந்தோம்பல் குழுவும் மிகச் சிறந்தமுறையில் சுற்றுலாத் திட்டத்தை வகுத்திருந்தனர். ஆகையினாலேதான் சென்னையிலிருந்து தென்குமரிவரை ஆறே நாட்களில் அனைவரும் கண்டு திரும்ப முடிந்தது.

பகலில் நகர்வலம், வரவேற்பு விருந்து, பொதுக் கூட்டம் முதலான கோலாகலங்கள், இரவில் பத்துமணிக்கு மேல் ரயில் பயணம். இவ்வாறு ஏழு இரவுகளும், ஆறு பகற்பொழுதும் பயனுள்ள முறையில் வேகமாக ஓடி மறைந்தன.

உலகத் தமிழ் அறிஞர்களின் தமிழக உலா வெற்றி பெறுவதற்காக, மாண்புமிகு உணவு அமைச்சர் திரு கே. ஏ. மதியழகன் தலைமையில் சுற்றுலாக் குழு ஒன்றைத் தமிழக அரசு அமைத்து இயக்கி வைத்தது. இதையொட்டி ஒரு செயலகமே தனி ரயிலில் இயங்கிக் கொண்டிருந்தது. இலக்கிய அறிஞர்களின் உடல் நலம் பேணுவதற்காக டாக்டர் இராமகிருஷ்ணன், டாக்டர் விமலா, டாக்டர் விஜயலட்சுமி ஆகிய மருத்துவ அறிஞர்களும் துணையிருந்தனர்.

''தனி ரயில் பயணம் நடமாடும் விடுதி போல் சுகமான ஏற்பாடு'' என்றார் அமெரிக்க அறிஞர் ஜெரிகோன்.

அதிகாலையில் கண் விழித்ததும் காப்பி; நீராடுவதற்கு வெந்நீர்; காலை உணவு இவையெல்லாம் முறைப்படி ரயிலில் கிடைத்தன. அதிகாலையில் குளிக்கும் பழக்கமில்லாதவர்களைக்கூடக் கட்டாயமாக நீராடச் செய்தது ரயில்! ஏனெனில், காலை எட்டரை மணிக்கு ரயிலை விட்டு இறங்கினால் பின் இரவு பத்து மணிக்குத்தான் ரயிலுக்குத் திரும்ப முடியும். அவ்வளவு நேரமும் வரவேற்பு விருந்து வைபவங்களில் பிரதிநிதிகளைக் குளிப்பாட்டித் திணற அடித்து விடுவார்கள் நகரமக்கள்! எனவே, ரயிலில் குளிக்க முடியாமல் கிளம்பியவர்கள் மக்களின் அன்பு வெள்ளத்திலே குளிக்காமல் திரும்பவே முடியாது!

சென்றவிடமெல்லாம் உலகத் தமிழ் அறிஞர்களை வரவேற்பதில் பொதுமக்களின் உற்சாகம் கங்கு கரைகாணாத கடலாகப் பொங்கியது! ஒவ்வோர் ஊரிலும் உலகத் தமிழ் மாநாடு நடப்பது போன்ற கோலாகல உணர்ச்சியே விம்மி நின்றது!

இந்தப் பெருமித வரவேற்பு சிதம்பரத்திலே தொடங்கியது. நல்வரவு கூறும் அலங்கார வளைவுகள், தோரணங்கள், தமிழ் முழக்கத் தட்டிகள், வண்ணக் கொடிகள், வாழ்த்தொலிகள், ஒளி வரிசை விந்தைகள், மேளதாளங்கள், வாண வேடிக்கைகள் இத்தனையும் சிதம்பரத்தில் கண்டது போலவே மற்ற இடங்களிலும் ஒன்றை ஒன்று மிஞ்சும்படியாக இருந்தன என்றால் மிகையாகாது.

பிரதிநிதிகள் ஒவ்வொருவருக்கும் ''சிதம்பரம் நகரக் கௌரவக் குடிமகன்'' பட்டம் தனித் தனியே பெயர் பொறித்து வழங்கியது சிதம்பரம் நகர மன்றம். ''இந்தக் கௌரவக் குடிமகன் பட்டம் பெற்றவர்களுக்கு நகர மன்றத் தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமைச் சலுகை உண்டல்லவா?'' என்று நகைச் சுவையாய் வினவினார் மலேசியப் பிரதிநிதி ஒருவர்.

டாக்டர் கெல்லர் ஒரு சிறிய — புதுமையான 'டேப் ரிக்கார்ட'ரை எப்பொழுதும் தம் கழுத்தில் மாட்டிக் கொண்டு எதையாவது ஒலிப் பதிவு செய்து கொண்டே வந்தார். திருவாரூர்க் கோவிலில், கல்நாதசுரத்தையும் தந்தத்திலான நாதசுரத்தையும் வாசித்துக் காட்டியபோதும் ஒலிப் பதிவு செய்துகொள்ள இவர் மறந்து விடவில்லை.

ஒலிபெருக்கியும் கையுமாக உற்சாகம் பொங்கத் திருவாரூரின் சிறப்புக்களையெல்லாம் பிரதிநிதிகளுக்கு விளக்கிக் காட்டினார் திரு வி. எஸ். தியாகராஜ முதலியார்.

மேனாட்டு அறிஞர்கள் சிலர் தங்கள் காமிராவுக்குச் சிறிதும் ஓய்வு கொடுக்காமல் எதையாவது படம் பிடித்தவண்ணம் காணப்பட்டனர். ஆரூரில் மட்டுமின்றித் தஞ்சையிலும் மதுரையிலும் கோயில் மண்டப விதானங்களில் காணப்படும் வண்ண ஓவியங்களைத் தரையில் மல்லாந்து படுத்த வண்ணம் படம் பிடித்து மகிழ்வதில் ஜே. பி. லால் போன்ற அறிஞர்கள் சுறுசுறுப்பாக இருந்தனர்.

திருவாரூர் — தஞ்சை — கோவை — மதுரை திருநெல்வேலி — சென்னை என்ற முறையில் தனி ரயில் உலா வந்தது. ரயில் நிலையங்களிலிருந்து குறிப்பிட்ட நிகழ்ச்சிகளுக்குப் பிரதிநிதிகளை அழைத்துச் சென்று மீண்டும் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பைத் தமிழக அரசின் போக்குவரத்துத் துறையின் விரைவுப் பேருந்துகள் ஆறு சரிவர நிறைவேற்றி வந்தன. கோவையில் மட்டும் இந்தப் பொறுப்பை ஏ. பி. டி. பேருந்துகள் கவனித்துக் கொண்டன.

வெறுங் கையோடு செல்லும் பிரதிநிதிகள் ரயிலுக்குத் திரும்பி வரும்போது கை நிறைய மாலைகள், வரவேற்பு இதழ்கள், சிறப்பு மலர்கள், அன்பளிப்புப் பொருள்கள் இவைகளைக் கொண்டு வந்து ரயில் பெட்டிகளை நிரப்பி விடுவார்கள். அத்தனை பொருள்களும் போட்டது போட்டபடியே கிடக்கும்படி கவனித்துக் கொண்டனர் ரயில் பெட்டிக் காவலர்கள்.

மதுரை மாநகர் மன்ற வரவேற்பில் மாணவ மாணவியரின் உடற் பயிற்சி விளையாட்டுகள் சிறப்பான அம்சம். திருநெல்வேலி, பாளையங்கோட்டை, மேலப்பாளையம் ஆகிய மூன்று நகர மன்றங்களின் வரவேற்புக்கள் ஒரே இடத்தில் நெல்லை சென்ட்ரல் சினிமாவில் நடைபெற்ற சிறப்பு நகர மன்றங்களின் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது.

சமய வேறுபாடு கருதாமல் சமரச உணர்வோடு மேனாட்டு அறிஞர்கள் திருநீறும், குங்குமமும் அணிந்து கொண்ட புதுமையைப் பல கோயில்களில் கண்டோம். பேரூர்க் கோயிலில் திருவாதிரைத் திருவிழாவையும் உலகத் தமிழ்ப் பேராளர்கள் காணும் வாய்ப்பு அமைந்தது. கோயில் யானைக்குச் சீப்புச் சீப்பாக வாழைப் பழங்களைக் கையார ஊட்டுவதில் பெண் பிரதிநிதிகள் மிகுந்த ஆர்வம் காட்டினர்.

மதுரைக் கோவிலில் பிரதிநிதிகள் ஒவ்வொருவருக்கும் பட்டுப் பரிவட்டம் கட்டப்பட்டது. அதனை மணி மகுடம் போல் மதித்து, அவிழ்க்க மனமில்லாமல் நெடுநேரம் வைத்துக் கொண்டு பூரிப்பு எய்தினர் மேனாட்டுப் பிரதிநிதிகள்!

சுசீந்திரம் கோவிலுக்குள் அசட்டையாக— அதாவது சட்டை அணியாமல், வேட்டி கட்டிக் கொண்டு செல்ல வேண்டும் என்பதற்கு வேட்டி கட்டி அறியாத மேலைநாட்டு அறிஞர்களுக்குப் புத்தம் புதிய வேட்டிகளை வழங்க ஏற்பாடு செய்தார் மாவட்ட ஆட்சித் தலைவர்.

தாய்லாந்து இளவரசர் டிஸ்கல் உள்பட அத்தனை பிரதிநிதிகளும் வேட்டியை விரும்பிக் கட்டிக் கொண்டு மதுரைக் கோயிலில் தரப்பட்ட பட்டுத் துண்டை மேலே அணிந்தவண்ணம் அசல் தென்னாட்டினரைப் போலவே கோவில்களுக்குச் சென்று வந்த காட்சி மறக்க முடியாததாகும்.

*புத்தனேரி சுப்பிரமணியம்*

திருக்குறுங்குடி அழகியநம்பி ஆலயக் கோபுரத்தின் முகப்பில் ஏணி வைத்து ஏறிச் சிற்பங்களைக் கண்டு மகிழ்வதில் ஆடவர் மட்டுமல்ல; பெண் பிரதிநிதிகளும் பேரார்வம் கொண்டனர்.

மூன்று கடலும் ஒன்றுகூடும் தெற்கு முனையான கன்னியாகுமரியில், கேரளா மாளிகையின் மேல், மொட்டை மாடியில் நின்று சூரியன் மறைவுக் காட்சியைக் கண்டது உலகத் தமிழ்ப் பிரதிநிதிகளின் இனிய அநுபவமாகும். சாதாரணமாகக் கதிரவன் மறைவு அவ்வளவு தெளிவாகத் தெரியாத படி மேகங்கள் மறைத்திருக்கும். ஆனால் அன்றைக்கு வெளிநாட்டுத் தமிழ் அன்பர்களுக்கு ஒளி காட்ட வேண்டும் என்பதற்காகவோ, என்னவோ மேகமும் சற்றே விலகி நின்றது. எனவே, செக்கச் சிவந்த ஆப்பிள் பழமொன்று மேலைக் கடலுக்குள் மெதுவாக மூழ்குவது போன்று கதிரவன் மறையும் காட்சி அனைவரையும் கொள்ளை கொண்டது.

கரந்தைத் தமிழ்ச் சங்கம், கோவை கிருஷ்ணம்மாள் கல்லூரி, பேரூர் சாந்தலிங்கம் அடிகளார் தமிழ்க் கல்லூரி, அவிநாசிலிங்கம் மனை இயற் கல்லூரி, மதுரைத் தமிழ்ச் சங்கம், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம், திருச்சி தமிழ்ச் சங்கம் முதலான தமிழ் நிறுவனங்கள் அளித்த வரவேற்பு விழாக்களில் கலை மணமும் தமிழ் மணமும் கமழ்ந்தன. கிருஷ்ணம்மாள் கல்லூரியில் நூற்றுக் கணக்கான மாணவிகள் சீருடை அணிந்து கையில் அகல் விளக்கு ஏந்தி, ஒரு பர்லாங்கு தூரம் இருபுறமும் அணிவகுத்து நின்று வரவேற்பு அளித்த அழகு அனைவருடைய இதயத்திலும் ஆழப் பதிந்துள்ளது!

ஒவ்வொரு ஊரிலும் வெளிநாட்டுப் பேராளர்கள் சிலரின் தமிழ்ப் பேச்சு மக்களை மிகவும் கவர்ந்தது.

திருமுருகாற்றுப்படை வரிகளையும், ''மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை'' என்ற தேவாரத்தையும் அழகாக மேற்கோள் காட்டிப் பேசிய டாக்டர் கெல்லர் திருமுருகாற்றுப் படையை ஃபிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்தவர் என்று அறிந்த மக்களின் மகிழ்ச்சிக்கு எல்லை ஏது?

''மண் ஆசை, பெண்ணாசை, பொன்னாசை எல்லா ஆசைகளையும் விடத் தமிழ் ஆசை தான் என் உள்ளத்தில் பொங்கி எழுகின்றது!'' என்று முழங்கினர் ஜான் பிலிப்ஸ்கி என்ற செக்கோஸ்லோவேக்கிய நாட்டு அறிஞர்.

ஒவ்வொரு கூட்டத்திலும் தமிழ்ப் பேசத் துடித்துக் கொண்டு முன்வந்தார் பஞ்சாபிப் பேராசிரியர் திரு பல்தேவ்ராஜ் குப்தா. இவர் மழலைத் தமிழில் ''தலைவர் அவர்—களுக்கும், பெரியோர்—களுக்கும், அன்பர்—களுக்கும்'' என்று பிரித்துப் பிரித்து அழுத்தமாகப் பேசியதும் 'களுக்'கென்ற பாராட்டுச் சிரிப்புடன் கரக் கம்பமும் செய்தனர் பொது மக்கள்.

மலேசியப் பிரதிநிதிகளும், இலங்கைப் பிரதிநிதிகளும் தமிழ் உணர்ச்சி ததும்பப் பல கூட்டங்களில் முழக்கமிட்டனர்.

சுற்றுலாவின் இறுதிக் கட்டமான திருச்சியில் மாடி மேல் மாடி போல் அமைந்த மலைக்கோட்டைக் கோவில்களையும், ஸ்ரீரங்கம், கல்லணை போன்ற இடங்களையும் பிரதிநிதிகள் கண்டு மகிழ்ந்தனர்.

திருவானைக்காவில் நடைபெற்ற ''அரிமா மன்ற'' வரவேற்பில் மக்களின் கட்டுக்கடங்கா ஆர்வ ஒலி காரணமாகச் சொற்பொழிவு செய்தோரின் 'சிங்க நாதம்' செவியில் ஏறவில்லை.

மாட்டுப் பொங்கலை ஒட்டி நடைபெறும் 'ஜல்லிக்கட்டு' என்னும் 'மஞ்சி விரட்டு' நிகழ்ச்சியைக் காஜா மலைத் திடலில் கண்டு மகிழ்வதற்குத் திருச்சி மாவட்டத் தலைவர் சிறந்த ஏற்பாடு செய்திருந்தார். வாழ் நாளில் இதுவரை கண்டறியாத நிகழ்ச்சி எனப் பிரதிநிதிகளும் மிகவும் ஆவலோடு அமர்ந்திருந்தனர். ஆயினும் திடலில் மாபெரும் கூட்டம் கட்டுக் கடங்காமல் நிறைந்திருந்தமையால் ''மஞ்சிவிரட்டை''ச் சரிவரக் காண இயலவில்லை. அதனால் ''ஆள் கூட்டம் பார்த்தோம்'' என நகைச் சுவையோடு குறிப்பிட்டார் திரு கெல்லர். பந்தயத் திடல் போல் வேலி அமைத்து 'ஜல்லிக்கட்டு' நிகழ்ச்சியை முறைப்படுத்தியிருந்தால் நன்றாயிருந்திருக்கும்.

பதினேழாம் தேதி இரவு திருச்சி ஜோசப் கல்லூரித் திடலில் நடந்த மாபெரும் பொதுக்கூட்டம் மறக்க முடியாதது. வெள்ளம்போல் தமிழர் கூட்டத்தைக் கண்டதும் மற்ற இடங்களில் வாய் திறவாமல் இருந்த பிரதிநிதிகள்கூட ஒலிபெருக்கி முன் வந்து பேசத் துணிந்தனர். ஜப்பானியப் பெண்மணி அயோகி இரண்டு வார்த்தைகள் பேசிவிட்டு நாணிக் கோணிக் கொண்டு விரைந்து திரும்பி விட்டார்.

ஆரவாரம் நிறைந்த சுற்றுலா நிகழ்ச்சிகளின் இடையே இதயத்தைத் தொடும் இனிய 'இசைக்கோலம்' என்னும் நிகழ்ச்சியைத் திருச்சி வானொலி நிலையம் ஏற்பாடு செய்த முறை அனைவரையும் கவர்ந்தது.

சுற்றுலாவின்போது ஏற்பாடு செய்யப் பெற்ற ஏராளமான நிகழ்ச்சிகளில் எதைத் தொடுவது, எதை விடுவது என்பதில் திரு வி. எஸ். தியாகராஜன், திரு கி. ஆ. பெ. விசுவநாதம் இவர்களுக்கிடையில் நல்லெண்ணப் போட்டி இருந்தபோதிலும் குறித்த நேரத்தில் ஒவ்வோர் ஊரிலிருந்தும் தனி ரயில் புறப்படுவதற்கு ஒத்துழைத்த அனைவரையும் எவ்வளவு பாராட்டினாலும் போதாது. இவ்வகையில் மாவட்ட ஆட்சித் தலைவர்களின் திறமான — நிறைவான ஒத்துழைப்பு மிகவும் போற்றத் தக்கது. இதன் பயனாகக் குழுவினர் அனைவரும் பதினெட்டாம் தேதிக் காலையில் சென்னைக்குக் குறித்த நேரத்தில் திரும்ப முடிந்தது.

எட்டுத் திக்குகளும் தமிழகத்தைச் சுற்றி வந்தது போல், பல்வேறு நாட்டுப் பேரறிஞர்கள் ஆறே நாட்களில் கோலாகலமாக ''உலகத் தமிழ் உலா''க் கண்ட சிறப்பை வேறு எந்த நாடும் இதுவரை கண்டிருக்க முடியாது.



லதா ஜார்ஜ்

டேபிள் டென்னிஸில் சென்னை சாம்பியன் சுமா ஜார்ஜ் வீட்டின் முன் அறை. ஒரு கண்ணாடி பீரோ நிறைய வெள்ளிக்கோப்பைகளும், பதக்கங்களும் அவரது வெற்றிகளைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. சிறிய மேஜையின்மீது டேபிள் டென்னிஸ் மட்டை ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது.

''வெள்ளிக் கோப்பைகளே! நீங்கள் தான் அதிர்ஷ்டசாலிகள்! சுமா ஜார்ஜ் வீட்டின் முன் அறையில் அழகான கண்ணாடி பீரோவில் அலங்காரமாகக் காட்சி தருகிறீர்கள்! நான் தினம் ஓய்வு ஒழிச்சலின்றிப் பயிற்சிக்குப் போய் வருகிறேன்!'' என்று டேபிள் டென்னிஸ் மட்டை குறைப்பட்டுக் கொண்டது.

''நாங்கள் அடைபட்டுக் கிடக்கிறோம். ஒருதடவை சாம்பியன் சுமா ஜார்ஜின் கையில் ஏறும் பாக்கியம் கிடைத்ததோடு சரி! நீ தினம் அவள் கையில் அமர்ந்து அவருக்குப் பெருமையும் புகழும் சேர்க்கிறாய்!'' என்று வெள்ளிக் கோப்பைகளும் பதக்கங்களும் பதிலுரைத்தன.

இதற்குள் சென்னை சாம்பியன் சுமா ஜார்ஜ் பேட்டியளிக்க முன் அறைக்கு வந்துவிட்டார்.

''கல்கத்தா ரகளை சென்னையில் இருக்கும் என்னை ரொம்பவும் பாதித்து விட்டது! இந்த வருஷம் டேபிள் டென்னிஸ் தேசியப் போட்டியைக் கௌகாத்தியில் நடத்தினார்கள். என்னையும் என் தங்கையையும் போட்டியில் கலந்துகொள்ள அனுப்பவிருந்தாள் என் அம்மா! ரயில்கள் போகவில்லை என்ற அதிர்ச்சி! விமானத்திலாவது பறந்து போகிறோம் என்றோம். விமானமும் கௌகாத்திக்குக் கல்கத்தா போய்த்தான் போக வேண்டியிருந்ததால் எங்கள் பிரயாணம் ரத்தாகி விட்டது! இந்த வருஷம் தேசியப் போட்டியில் கலந்து கொள்ள முடியவில்லை!'' என்று குறைப்பட்டுக் கொண்டார், சென்னை சாம்பியன் சுமா ஜார்ஜ்.



சுமா ஜார்ஜ்

'அடேடே! நமக்கு மட்டும்தான் ஏதோ குறைகள் இருப்பதாக எண்ணினால் சுமா ஜார்ஜின் நிலையும் அதேதானா?' என்று வெள்ளிக் கோப்பைகளும், டேபிள் டென்னிஸ் மட்டையும் கண் சிமிட்டிக் கொண்டு திருப்தி அடைந்தன!

சர்ச்பார்க் கான்வென்டில் பதினோராம் வகுப்புப் படிக்கும் குமாரி சுமா ஜார்ஜ் இந்திய டேபிள் டென்னிஸ் ஆட்டக்காரிகள் வரிசையில் 1966ல் இரண்டாவது ஸ்தானம் பெற்றிருக்கிறாள். சென்னையின் இந்த வருஷ சாம்பியன் அவளே. இந்தத் தடவை சென்னையில் நிகழ்ந்த பதினான்கு போட்டிகளிலும் அமோக வெற்றி. 1964ம் ஆண்டில் டேபிள் டென்னிஸ் ஆடத் தொடங்கிய சுமா ஜார்ஜ் விரைவில் புகழேணியில் ஏறத் தொடங்கினாள். அவளது வெற்றிக்குக் காரணம் 'இண்டர் நேஷனல்' ஆட்டக்காரரும், 'கோச்ச'மான திருவேங்கடத்தின் இடைவிடாத பயிற்சி அவளுக்குக் கிடைத்தது தான் என்கிறாள். சுமா ஜார்ஜ் விளையாட்டிலும்; படிப்பிலும் ஒருங்கே சிறந்து விளங்குவதைக் கண்டு சர்ச்பார்க் கான்வென்டில் அவளுக்கு எட்டாம் படிவத்திலிருந்து 'மெரிட் ஸ்காலர்ஷிப்' வழங்கி வருகிறார்கள்! கல்வி, விளையாட்டு இரண்டிலும் ஒருத்தி தேர்ந்தவளாயிருப்பது அபூர்வம்தானே!

# சுமா ஜார்ஜா சும்மாவா!

அக்கா கெட்டிக்காரி என்றால் தங்கை மட்டும் என் சும்மாவா? சுமா ஜார்ஜின் தங்கை லதா ஜார்ஜ் டேபிள் டென்னிஸில் சென்னையைப் பொறுத்தவரை நான்காவதாகத் ? திகழ்கிறாள். அநேகமாகச் சென்னையில் நடக்கும்

போட்டிகளில் சுமா ஜார்ஜுடன் இறுதி ஆட்டத்தில் வந்து போட்டியிடுவது அவள் தங்கை லதா ஜார்ஜ்தான் என்றால் அவளும் முன்னணிக்கு வந்து கொண்டிருக்கிறாள் என்றுதானே அர்த்தம்!

சுமா, லதா டேபிள் டென்னிஸில் சிறந்து விளங்கத் தந்தை இன்ஜினீயர் ஜார்ஜும், தாயாரும் எடுத்துக் கொள்ளும் சிரத்தை அதிகம். தினம் பயிற்சிக்கு அவர்களை அனுப்பி வைப்பதில் அக்கறை செலுத்துகின்றனர்.

இந்தச் சமயத்தில் அவர்களது குட்டித் தம்பி மகேஷ் கையில் மட்டையோடு முழக்குகிறான்: ''நான் டேபிள் டென்னிஸில் உலக சாம்பியனாகப் போகிறேன். இவங்க எனக்கு ஆட சான்ஸ் தரமாட்டேங்கிறாங்க!''

''மட்டையைக் கொடு. எங்களுக்குப் பயிற்சிக்குப் போக நேரமாகிவிட்டது!'' என்று அவனிடமிருந்து மட்டையைப் பெற்றுக் கொண்டு சகோதரிகள் இருவரும் புறப்படுகிறார்கள். — குண்டுமணி

# படித்துப் பாருங்கள்

## உன் குழந்தை......?

உன் குழந்தைகள் உண்மையில் உன்னுடைய குழந்தைகளே அல்ல;

வாழ்ந்து கொண்டே இருப்பதில் உயிருக்கு உள்ள பிரேமை காரணமாக உயிருக்குப் பிறந்த ஆண், பெண் குழந்தைகளே அவர்கள்.

அவர்கள் உன் மூலம் உலகுக்கு வருகிறார்கள். ஆனால் அவர்கள் உன்னிடமிருந்து வரவில்லை.

அவர்கள் உன்னுடனேயே இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் உனக்கு உடைமையானவர்கள் அல்ல.

நீ அவர்களுக்கு உனது அன்பைக் கொடுக்கலாம்; ஆனால் உனது எண்ணங்களை அவர்களுக்குத் தரலாகாது.

ஏனெனில், அவர்களுக்கென்று பிரத்தியேக எண்ணங்கள் உண்டு.

நீ அவர்களுடைய உடல்களுக்கு ஓர் இருப்பிடத்தை அளிக்கலாம்; ஆனால் அவர்களுடைய ஆன்மாக்களுக்கு ஒரு குடியிருப்பைத் தர முடியாது.

ஏனெனில், அவர்களுடைய ஆன்மா எதிர்காலம் என்ற இல்லத்தில் வசிக்கிறது.

அந்த இல்லத்துக்கு நீ விஜயம் செய்ய முடியாது, கனவிலும்கூடப் போக முடியாது.

அவர்களைப் போல இருக்க நீ முயலலாம். ஆனால் உன்னைப் போல் அவர்கள் இருக்க வேண்டும் என்று பிரயாசைப் படாதே!

ஏனெனில், வாழ்க்கை பின்னோக்கிச் செல்வதுமில்லை; நேற்றுடன் நின்று போவதுமில்லை.

சென்னை, வித்யாபாரதி குழந்தைகள் சங்கத்தினர் வெளியிட்டுள்ள '67 ஆண்டு மலரில் கலீல் ஜிப்ரானின் மேற்படி கருத்துச் செறிந்த மொழிகள் மட்டுமின்றிக் குழந்தை வளர்ப்பு, கல்வி பற்றிய பலப் பல அருமையான கட்டுரைகள் உள்ளன. ஆங்கிலத்தில் வெளியாகியுள்ள இம்மலரின் விலை: ரூ. 3-00; விலாசம்: 162, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை — 4.

## கிரீனின் அடிச்சுவடு

தெலுங்கு, தமிழ் போன்ற பிரதேச மொழிகள் நன்கு வளர்ச்சியடைய வேண்டும்; மேனாட்டில் உள்ள நவீன விஞ்ஞான முன்னேற்றங்களை எளிதில் எழுதக்கூடிய அளவுக்கு அவை வளர வேண்டும் என்று எதிர்பார்ப்பது நியாயம். ஆனால் அதே சமயத்தில் உடனடியாக எல்லா ஆங்கில விஞ்ஞானப் புத்தகங்களையும் டன் கணக்கில் பிரதேச மொழிகளில் மொழிபெயர்த்துத் தள்ளுவது தவிர்க்கப்பட வேண்டிய விஷயம்.

கிரீன் வைத்தியர் என்ற அறிஞர் இன்றைக்கு நூறாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். தாய்மொழி மூலம் கல்வி புகட்டுவதே சிறந்தது என நம்பினார். ஆரம்பக் கல்வி மட்டுமின்றி மேனாட்டு வைத்தியக் கல்வியைக்கூடத் தமிழில் போதித்துச் சில வைத்தியர்களை உருவாக்கினார். விஞ்ஞான நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். தமிழில் கலைச் சொற்களைத் தொகுத்தும் அமைத்தும் வைத்தார். ஈழத்தில் வாழ்ந்த அவர், விஞ்ஞானக் கலைச்சொற்கள் தமிழ் பேசும் மக்கள் அனைவருக்கும் பொதுவானவையாக அமைதல் வேண்டும் என்று தமிழ் நாட்டினருடன் தொடர்பு கொண்டார். அவரது அந்த நோக்கம் முன்னைவிட இன்று அதிக முக்கியத்துவம் பெற்று விட்டிருக்கிறது. மலேயா, இலங்கை, தமிழகம், பர்மா போன்ற நாடுகளில் தமிழில் விஞ்ஞான நூல்கள் வெளிவருகின்றன. அந்த அந்த நாட்டவரும் தனித்தனியே தமிழில் கலைச் சொல் ஆக்கம் செய்தால் ஒரே குளறுபடியாகப் போகும் என்பதில் சந்தேகமில்லை. தமிழில் கலைச் சொற்கள் என்னும்போது அவை எந்நாட்டில் வாழும் தமிழருக்கும் ஒப்புதலாகவும் அவர்கள் பின்பற்றக் கூடியதாகவும் இருக்க வேண்டும். இவ்விஷயத்தில் பல நாட்டுத் தமிழறிஞரும் ஒத்துழைத்தல் அவசியம். இதனைத்தான் வற்புறுத்தி உலகத் தமிழ் மகாநாட்டில் பேசினார் ஈழத்திலிருந்து வந்த ஸ்ரீ அம்பிகை பாகன்.

'அம்பி' என்ற புனைபெயரில் அவர் எழுதியுள்ள நூல் ''கிரீனின் அடிச்சுவடு'' என்ற பெயரில் வெளியாகியுள்ளது. டாக்டர் கிரீனின் வரலாற்றினையும் அவர் தமிழுக்குச் செய்துள்ள தொண்டுகளையும் விவரிக்கிறது.

வெளியீடு: யாழ் இலக்கிய வட்டம், யாழ்ப்பாணம், விலை: ரூ. 2-50.





# பூவும் பொட்டும்

வங்கத்தில் பிறந்த கதை என்பதை ஆரம்பத்திலேயே சொல்லி விடுகிறார்கள்.

சாதாரண உடை உடுத்தியிருந்த தன் பெண்ணுக்குக் கவர்ச்சி உடை அணிவித்து அழைத்துப் போய்ப் பணக்கார வாலிபனுடன் தாராளமாகப் பழகும் வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுத்து விட்டு விபரீதம் நிகழ்ந்ததும் பெற்றவள் வாய்விட்டுக் கதறி அழுகிறாள். இந்த இடத்தில் பானுமதியின் நடிப்பு பிரமாதமாக இருக்கிறது. கவர்ச்சி, கவர்ச்சி என்று கனவிலும் நினைவிலும் அதே சிந்தனையுடன் இருந்து, நமது பண்பாட்டுக்கு ஒவ்வாத விதத்தில் ஆடவருடன் நெருங்கிப் பழகுவதில் நேரக்கூடிய விபரீதங்களைச் சுட்டிக் காட்டி மக்களை எச்சரிப்பது சரிதான். ஆனால் அதே சமயத்தில் புடவையே உடுத்தாமல் 'சிக்' உடைகளையே நட்சத்திரங்கள் எப்போதும் அணிந்து தோன்றுவதால் மக்களிடையே நேரக்கூடிய ஒழுக்கக் குறைவு பற்றியும் படாதிபதிகள் சிந்திக்க வேண்டியது அவசியமில்லையா?

இரவு விடுதி (நைட் கிளப்) நம் நாட்டு வாழ்க்கைக்கு ஒவ்வாத, ஒட்டாத ஒன்று. மேலை நாட்டு நாகரிகமான இந்த அமைப்பை, எல்லாரும் காணக் கூடிய திரைப்படச் சாதனத்தின் மூலம் பிரபலப் படுத்த வேண்டுமா? இரவு விடுதி இல்லாமலே கதையைக் கொண்டு செல்ல முடியாதா? முடியும். ஆனால் கிழ்த்தரமான உடல் குலுக்கல் நடனத்தைப் புகுத்த முடியாதே. விஜய நிர்மலாவை இவ்வளவு ஆபாசமாக நடனமாடச் செய்திருக்க வேண்டாம். போதாக்குறைக்கு அந்த நடனத்தைச் சுவரொட்டிகளிலும் போட்டு விளம்பரப்படுத்தி யிருக்கிறார்கள்.

நாகேஷின் இந்திரசபை நடிப்பு கலைவாணரை நினைவுபடுத்துகிறது. பஞ்சம், புயல், வறட்சி, பூகம்பம், தீ விபத்து இவைகளை வைத்துக் கொண்டு பிரமாதப்படுத்தியிருக்கிறார். ரங்காராவும், ராஜனும், பண்டரிபாயும் பாத்திரத்தை உணர்ந்து நன்றாக நடித்திருக்கிறார்கள். தாம் ஓர் ஒப்பற்ற நடிகை என்பதைப் பானுமதி இரண்டு காட்சிகளிலேயே காட்டி விடுகிறார். பாரதி அடக்கமான பெண்ணாக வந்து அழகாகத் திகழ்கிறார். சில நல்ல கருத்துக்களையும் கதைப் போக்கையும் சிறப்பான நடிப்பையும், நெஞ்சை நெகிழ வைக்கும் கட்டங்களையும் தரமான வசனத்தையும் கொண்டிருந்தாலும் ஆபாச நடனங்களும், கவர்ச்சியே பிரதானமான காதல் காட்சிகளும் முள்ளாக நெருடுகின்றன.



# தமிழ் வலம் வந்த தூதுவர்கள்

## ஆர். இ. ஆஷர்

**க**ல்லூரி மாணவர் போல் சாதாரண வெள்ளை அரைக்கை சட்டையுடன், அடிக்கடி மேடையிலும் அரங்கத்திலும் காணப்பட்ட ஆர். இ. ஆஷர் நாற்பத்தி இரண்டு வயதை எட்டியிருப்பவர் என்று தெரிந்துகொண்ட போது வியப்பாகவே இருந்தது. அது மாத்திரமல்ல. பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னுலேயே ஃபிரெஞ்சு மொழிப் புலமைக்காக லண்டன் சர்வகலாசாலையில் டாக்டர் பட்டம் பெற்றவரும் கூட. இவர் ஓர் அசல் இங்கிலாந்து நாட்டவர். இப்போது எடின்பரோ சர்வகலாசாலையில் மொழி இயல் பற்றிப் போதிக்கும் ஆசிரியராகப் பணியாற்றுகிறுர்.

சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் சரளமாகத் தமிழிலேயே பேசத் தொடங்கும் இவர் பாரதத்துக்கோ தமிழ் நாட்டுக்கோ புதியவரல்ல. 1955–56ல் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள செங்கம் என்ற ஊரில் சில மாதங்கள் தங்கி அங்குள்ளோர்களுடன் பழகி, 'பேச்சுத் தமிழி'ல் பயிற்சி பெற்றுர். ஒரு மொழியின் இலக்கியச் சுவையை நன்கு ரசிக்க, ஓரளவாவது அந்த மொழியின் இயற்கை ஒலி இன்பம் மனத்திலே பதிந்திருக்கவேண்டும் என்று நம்புகிறவர் இவர்.

லண்டனில் தமிழ் பேசவோ அந்த மொழியில் பேச்சைக் கேட்கவோ லண்டன் தமிழ்ச் சங்கத்தின் மூலம் இவருக்கு நிறைய வாய்ப்புக் கிடைக்கின்றதாம். லண்டன் சர்வகலாசாலையில் தமிழ் மொழி பயின்று பட்டம் பெறுவதற்கான வாய்ப்புகளும் இருக்கின்றன என்கிறுர் ஆஷர்.

மொழி இயல் போதகராக இருந்தபோதிலும் இவர் ஈடுபாடெல்லாம் வளர்ந்து வரும் தற்கால இலக்கியத்தில்தான். 'இன்றைய உலகத்தில் இலக்கியத்தின் முக்கிய உருவம் நாவல் என்பதற்குச் சந்தேகமே கிடையாது. கடந்துபோன நூற்றுண்டுகளைச் சேர்ந்த காவியப் பாடல்களுக்குச் சமமாகத் தலை நிமிர இந்த உருவத்துக்குத் தகுதி உண்டு என்று ஓங்கியடித்துச் சொல்லும் ஆஷர், தம் கருத்துக்கேற்ப பண்டித எஸ். எம். நடேச சாஸ்திரிகளின் நாவல்களைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரையையே மகாநாட்டுக் கருத்தரங்குக்குச் சமர்ப்பித்திருந்தார். புதை பொருள்களுக்கும், கல்வெட்டுக்களுக்கும் இடையே இந்தக் கட்டுரை தனிச் சுவை பெற்றிருந்தது.

'கமலாம்பாள் சரித்திரத்தை' இவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறுர். மலையாள மொழியிலும் இவருக்கு நல்ல பரிச்சயம் உண்டு. தகழியின் நாவல்கள் சிலவற்றையும் மொழிபெயர்த்திருக்கிறுர். சென்ற ஆண்டு அமெரிக்காவுக்குப் போய் அங்குள்ள மாணவர்களுக்குத் தமிழ் போதித்துவிட்டு வந்தாராம். ''அப்புறம் அவசியம் சந்திப்போம்'' என்று தடங்கலில்லாமல்] பேசி விடைபெற்றுர் இவர்!



ஆர். இ. ஆஷர்

## டாக்டர் டேனியல் ஆர்கோவ்

'**லெ**கித் ராவோத்!' என்ற பதத்துக்குப் பொருள் தெரியுமா உங்களுக்கு? அந்தப் பதம் எந்த மொழியைச் சேர்ந்தது என்ருவது தெரியுமா?... ஊஹூம்! அவ்வளவு சுலபமல்ல! காரணம் அது ஹிப்ரு மொழியைச் சேர்ந்தது. 'அப்புறம் சந்திப்போம்' என்ற வாசகம்தான் அதன் பொருள்.

இந்த ஒரு பதத்தின் மூலம் எனக்கும் ஹிப்ரு மொழிக்கும் தொடர்பேற்படுத்திக் கொடுத்தவர் டாக்டர் டேனியல் ஆர்கோவ். ஜெருசலத்திலிருந்து கருத்தரங்கில் கலந்து கொள்ள வந்திருந்த முப்பத்தி நான்கு வயது இளைஞர். ஆப்பிரிக்கா மற்றும் கீழ்த்திசை மொழிகள் பற்றிய ஆராய்ச்சியில் லண்டன் சர்வ கலாசாலையில் டாக்டர் பட்டம் பெற்றிருக்கிறுர். இப்போது ஜெருசலம் ஹிப்ரு சர்வகலாசாலையைச் சேர்ந்த ஆசிய ஆப்

பிரிக்க நிறுவனத்தில் இந்திய சரித்திர பாடபோதகராக இருக்கிறார்.

இந்தியாவுக்கு இப்போது இரண்டாம் தடவையாக வந்திருக்கிறார் ஆர்கோவ். அவருடைய ஹிப்ரு சர்வகலாசாலையில் ஆண்டுதோறும் சுமார் எழுபது மாணவர்கள் இந்தியாவைப் பற்றிய பாடங்களைப் படிக்கச் சேருகிறார்களாம். சம்ஸ்கிருதம், முகம்மதிய சாம்ராஜ்யம் சம்பந்தப்பட்ட சரித்திர பாடம் மற்றும் இருபதாம் நூற்றாண்டின் சுதந்திரப் போராட்டம் பற்றிய பாடம் எல்லாம் அங்கே சொல்லித் தருகிறார்கள். தமிழ் மொழி போதிக்க அங்கு ஏற்பாடுகள் இல்லை. ஆர்கோவ் தமிழ் மொழி பற்றித் தெரிந்து கொண்டதெல்லாம் ஆங்கிலத்தின் மூலமாகத்தான்.



Daniel Argov

'இந்திய சுதந்திரப் போராட்டத்தில் மிதவாதிகளும், தீவிரவாதிகளும்' என்ற நூல்தான் அவருடைய சமீபத்திய படைப்பு. தமிழர்களின் அன்பும் உபசரிப்பும் அவருக்குப் பிரமிப்பை ஊட்டுகின்றன.

## சுபத்ராடிஸ் டிஸ்குல்

தென் மாவட்டங்களைச் சேர்ந்த தமிழ்ப் பேராசிரியராக இருக்கலாம் என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் ஒரு சந்தர்ப்பத்தில் இருவரும் அருகில் அமர்ந்திருந்தபோதுதான் ஆசாமி தாய்லாந்து நாட்டைச் சேர்ந்தவர் என்பது தெரிய வந்தது. தமிழ் நாட்டுக்கும் தாய்லாந்து நாட்டுக்கும் இடையே தோற்றத்தில் அவ்வளவு வேறுபாடு இல்லை. சுபத்ராடிஸ் டிஸ்குல் பாரதத்துக்கு வருவது இதுதான் முதல்தடவை. பாங்காக்கிலுள்ள சர்வகலாசாலையில் புதைபொருள் ஆராய்ச்சி, சிற்பம் முதலிய துறைகளுக்கான பகுதிக்குத் தலைவராக இருக்கிறார். இதற்கு முன் பாங்காக் தேசிய மியூஸியத்தில் பிரதம கவனிப்பாளராக இருந்தவர். இவருக்குத் தமிழ் எழுதவோ, படிக்கவோ இன்னும் பழக்கம் ஏற்படவில்லை.

## கென்னத் மாக்பேர்சன்

கருத்தரங்கில் கலந்துகொள்ள வெளிநாடுகளிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகளிடையே இளைஞரானவர், ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருந்த இருபத்திமூன்றே வயதான கென்னத் மாக்பேர்சன்தான்!

எம். ஏ. பட்டதாரி, அந்தப் பட்டம் பெற அவர் தேர்ந்தெடுத்துப் படித்த பாடம் இந்திய நாட்டுச் சரித்திரம். சந்திரகுப்த மௌரியனைப் பற்றியோ, சாளுக்கிய பரம்பரைகளைப் பற்றியோ அவர் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. '1906க்கும் 1937க்கும் இடையே சென்னை மாநிலத்தில் வாழ்ந்த இஸ்லாமியர்கள்' என்ற விஷயம்தான் அவருக்கு எம்.ஏ. பட்டம் பெற்றுக் கொடுத்தது. டாக்டர் பட்டம் பெறுவதற்கும் அவர், தென்னிந்தியாவிலிருந்தே ஒரு விஷயத்தைத் தேர்ந்தெடுக்கப் போவதாகத் தீர்மானித்துவிட்டார்.

தமிழகத்தைப் பற்றி அவர் இதுவரை தெரிந்து கொண்ட விஷயங்களெல்லாம், இங்கிருந்து அங்கே போய்க் குடியேறியிருக்கும் ஆங்கிலோ இந்தியர்கள் மூலம்தான். இந்தக் கருத்தரங்கை முன்னிட்டு, தமிழ் நாட்டைப் பற்றி ஓரளவு விரிவாகத் தெரிந்து கொள்ள இரண்டு மாதங்கள் முன்னாலேயே வந்துவிட்டார். திருவாளர்கள் முகம்மது இஸ்மாயில், பஷீர் அகமத் முதலியோர்களைச் சந்தித்துப் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டாராம்.

விசேஷ ரயில் மூலம் தமிழ் நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தை முடித்துவிட்டுத் திரும்பிய, மாக்பேர்சனை மீண்டும் சந்தித்தேன்.

'பிரமாதம்' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கண்களை மூடிக்கொண்ட அவர், 'அடுத்த ஆண்டு மீண்டும் இங்கே வந்து அந்த இடங்களை யெல்லாம் சாவகாசமாகப் பார்க்க விரும்புகிறேன்' என்றார்.



Kenneth McPherson

— மேனா

புகைப்படங்கள் :

விசுவநாதன்

சென்னை
பிளாசா
அகஸ்தியா 70 MM
மேகலா
சீனிவாசா
மற்றும் தென்னுடெங்கும்

மக்கள் திலகம்
எம். ஜி. ஆர்
ஜெயலலிதா
நடிக்கும்



பத்மினி பிக்சர்ஸ்

# ரகசிய போலீஸ் 115

ஈஸ்ட்மென் கலர் BY ஜெமினி

தயாரிப்பு - டைரக்‌ஷன்
பி. ஆர். பந்துலு

SEMBI

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

## ஐந்தாம் அத்தியாயம்

### "சுற்றத்தின் நடுவே ஒற்றர்கள்"

உலகில், 'வெளுத்த தெல்லாம் பால்' என்று நினைப்பவர்களும் உண்டு. இதற்கு மாறாக 'வெளுத்ததெல்லாம் சுண்ணாம்பு' என்று நினைப்பவர்களும் உண்டு. யுவராஜா பாவாஜி இருவிதமாகவும் நினைப்பவர். அவருடைய தேகமே சந்தேகம்; பொருள், அகப் பொருள்; ஆவி அவருடைய மூட நம்பிக்கைகளே. இவ்வாறு அவர் உடல், பொருள், ஆவி மூன்றிலும் தனித் தன்மை பெற்று விளங்கினார்.

'மகாதேவி பட்டிணத்து வண்டி வந்திருக்கிறது. அதில் சிற்றன்னை அன்னபூர்ணா தேவி யாரோ அல்லது வேறு யாரோ வந்திருப்பார்கள்' என்று எண்ணித்தான் பாவாஜி வரவேற்கப் போனார். ஆனால் வந்தது பரமாத்மா என்றதும் பரவசமானார். பரமாத்மா தம்பியாக மாறியதும் பரவசம் பாசமாக மாறியது.

''என் தம்பி கெட்டிக்காரன்; பல கலைகளை அறிந்தவன். இசையில் மேதை. கவிஞன்! என்ன இருந்தாலும் என்ன? பட்டமகிஷியின் மகனாகப் பிறக்காமல் இஷ்ட மனைவியின் மகனாகப் பிறந்து விட்டானே?'' என்ற கவலையுடன் நடந்தார்.

''அண்ணா! இதோ வருகிறேன்'' என்று அவரிடம் சொல்லி விட்டுப் பிரதாபசிம்மரும் அவருடைய நண்பர்களும் பாவாஜியின் ஏகாந்த மகாலுக்குள் நுழைந்தனர். அதற்கு முன்பே வண்டியிலிருந்த அவருடைய பேழைகளைப் பணியாட்கள் அங்கு கொண்டு வந்து வைத்திருந்தார்கள். மகாலுக்குள் நுழைந்ததும் பிரதாபசிம்மர் சர்க்கரையிடம், ''நீ அந்த மாறுகண் வீரனைப் பார்த்தாயா?'' என்று ரகசியமாகக் கேட்டார்.

''கவனித்தேன் நானும்!'' என்றான் சர்க்கரை. உடனே பிரதாபசிம்மர் அவன் காதில்

வினு

என்னமோ சொல்லி எச்சரித்தார். சியாமாவிடம், ''நீ உன் இல்லத்துக்குப் போய் வரலாம்'' என்று விடை கொடுத்தார். இதனிடையில், மூவரும் தங்களுடைய வேஷங்களைக் களைந்து விட்டுத் தங்கள் சொந்த ஆடைகளை அணிந்து கொண்டார்கள். சியாமா புறப்பட்டுச் சென்றார். அப்போது இரண்டு பணிப்பெண்கள் பிரதாபசிம்மர் அறைக்குள் வந்து வணங்கி, ''இளவரசே! தங்கள் வருகைக்காக யுவராஜாவும் யுவராணியாரும் 'மன்மத விலாச'த்தில் காத்திருக்கிறார்கள்'' என்று அழைத்தார்கள். பிரதாபசிம்மர் அவர்களைத் தொடர்ந்து சென்றார். அவரது கண் பார்வைக்கு எட்டிய தூரத்தில் சர்க்கரையும் தொடர்ந்தான்.

மன்மத விலாசம் மனத்தைக் கவரும் வண்ணம் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. அதன் ஒரு புறத்தே சுமார் நூறு கஜ தூரத்தில் ஜரிகை வேலைப்பாடு செய்த பட்டுத் திரைகள் தொங்கிக் கொண்டிருந்தன. அந்தத் திரைகளின் மீது ரதி மன்மத விஜய சித்திரங்கள் வரிசையாக வரையப் பட்டிருந்தன. அவர்கள் பூலோகத்துக்கு வருவதும், உலக மக்கள் மன்மத பாணத்தால் மயங்குவதும், கடைசியில் சிவபெருமான் மீது மன்மதன் அம்பை எய்யும் காட்சியும் மிக அற்புதமாக, சிறந்த ஓவியர்களைக் கொண்டு தீட்டப்பெற்றிருந்தன.

அந்தத் திரைகளின் மறுபுறமிருந்து பல கண்கள் பிரதாபசிம்மரின் வருகையை நோக்கிக் கொண்டிருந்தன.

பாவாஜி அவர்களின் ஜாதகத்தில் பதினெட்டுக் கிரகங்கள் உண்டு. அவை நவக்கிரகங்கள் ஒன்பதும் அவரது மனைவிமார்கள் ஒன்பதும்தான்.

மற்ற ராஜாக்களுக்குப் போர்க்களத்தில்தான் சண்டை செய்யும் பாக்கியம் கிடைக்கும். நமது பாவாஜிக்கோ அந்தப் பாக்கியம் இருந்த இடத்திலேயே கிடைத்தது. அவருக்கு அந்தப்புரமே போர்க்களம். அத்தனை போரிலும் தோல்வி அவருக்கே. சில சமயங்களில் விரல் நகத்தால் புண்கள் பெற்றிருப்பாரே தவிர அவர் உடலில் விழுப் புண்கள் பட்டதே இல்லை. அனால் விழிப் புண்கள் பட்டே உடல் இளைத்தார். மூத்த மனைவி — சுஜனுபாய் நல்லவர்களுக்கு நல்லவள்; பொல்லாதவர்களுக்கு ரொம்பப் பொல்லாதவள்.



கிரிஜாபாய் பிடிவாதக்காரி. மலையை அசைத்தாலும் அவள் மனத்தை அசைக்க முடியாது.

ஜயந்திபாய் வெற்றியில் நாட்டமுடையவள். கணவனுடன் போராட ஆரம்பித்து விட்டால் எதிலும் வெற்றி அவளுக்குத்தான்.

சக்குபாய் திட்ட ஆரம்பித்தால் போதும். வாய் பொல்லாதது. அக்கு வேறு ஆணி வேறாகப் பிரிக்காமல் அவள் விடமாட்டாள்.

பார்வதிபாய் பாகப் பிரியாள். எப்போதும் கணவன் தன் பக்கத்திலேயே இருக்க வேண்டும் என்பாள்.

குமார்பாய் அழகே உருவானவள்; அதனால் கர்வம் மிகுந்தவள்.

இந்த ஆறு பெரும் கோள்களைத் தவிர, ராகு, கேதுக்களைப் போல் மேலும் மூன்று ஆசைநாயகிகளும் அவருக்கு உண்டு. இவர்கள் தாமாகவே கணவனுடன் சண்டை பிடிக்கா விட்டாலும் மற்ற மனைவிகளின் சண்டையில் எவள் கை உயருகிறதோ, அவள் பக்கம் சேர்ந்து கொள்வார்கள்.

இந்த ஒன்பது கோள்களுக்கும் நடுவே ஓர் ஆள் என்ன செய்ய முடியும்? இவையெல்லாம் தாம் செய்த தவறின் பலன் என்று பாவாஜி எண்ணாமல் தமது ராசி பலன்களை ஆராய்ந்து வந்தார். உள்ள ஒன்பது போதாது என்று உயர இருக்கும் ஒன்பது கிரகங்களுக்கும் ஓயாது சாந்தி செய்வார்.

பெண்டாட்டி கோபித்தால் அவர் பேந்தப் பேந்த விழிப்பார். பத்தினியின் கோபத்தைத் தணிக்க முடியாமல் உடனே பத்ரகாளி கோயிலுக்கு அபிஷேகம் செய்வார்.

இவர்களுக்குக் கோபம் வந்தால் தான் அவருக்கு ஆபத்து என்பதில்லை. சந்தோஷம் வந்தாலும் ஆபத்துத் தான். இருவர் கால்களைப் பிடிப்பார்கள். இருவர் நெட்டி ஒடிப்பார்கள்; இருவர் கையை அமுக்குவார்கள். இருவர் கழுத்தை நெரிப்பார்கள். எல்லோரும் சேர்ந்து ஏககாலத்தில் வெற்றிலை மடித்துக் கொடுத்தால் எவரால் தின்ன முடியும்? ஒருவர் கொடுத்ததை வாங்கிக் கொண்டு மற்றவர் கொடுத்ததை மறுத்தால் உடனே ரகளை வந்துவிடும். போர் ஆரம்பித்து விடும்.

ஒன்பதும் சேர்ந்து ஒன்றை ஒன்று இட்டிக் கொள்ளும்போது நடுவே புகுந்து மத்தியஸ்தம் செய்தால் தப்பித் தவறி ஒரு கை அவர் மேலும் பட்டுவிடும்.

இவ்வாறு அவர் ரௌரவத்தைக் கௌரவமாகத் தம் அரண்மனையிலேயே அனுபவித்து வந்தார். இந்த மனுஷருக்குப் பக்தி வராமல் வேறு யாருக்கு வரும்?

இதைத் தவிர அவருக்கு நரம்பு நோய் வேறு. இதற்காகத் தைலம், லேகியம், மாத்திரை, கஷாயம், காயகல்பம் என்று வைத்தியங்கள் வேறு நடந்து வந்தன.

அன்று தசரதனை ஓர் இடத்தில் வர்ணித்த கம்பர், 'தையல் கடலை விட்டு எடுத்துத் தைலக் கடலுக்குள் போட்டார்கள்' என்று எழுதியிருக்கிறார். இது கடைசிவரை உள்ள சங்கதி. ஆதலால் ''கவலைப்பட்டுப் பயனில்லை'' என்ற விவேகம்தான் பாவாஜியைக் காப்பாற்றியதே அல்லாமல் உடல் வேகம் அவரைக் காப்பாற்றவில்லை. பிரதாபசிம்மர் உள்ளே நுழைந்ததும், இதுவரை திரை மூலம் பார்த்துக் கொண்டு நின்ற ராணிமார்கள் அத்தனை பேர்களும் மான் கூட்டம் உள்ளே ஓடி வருவது போல் வந்தார்கள்.

பாவாஜியின் மனைவி சுஜனா பாய் தன் மைத்துனரை அந்தப்புரத்துக்குள் வரவேற்றாள். அறிவு, ஆற்றல், மிடுக்கு முதலிய முக்குணங்களுக்கும் உறைவிடமாகிய அந்தப் பெண்மணி தன் கணவனின் அளவுக்குமீறிய மூடநம்பிக்கையை அறவே வெறுத்தாள். ஆயினும், பிறர் முன்னிலையில் அடங்கி நடந்து வந்தாள்.

''பிரதாப்! மாமி அன்னபூர்ணா தேவியார் நலமாக இருக்கிறார்களா?''

''ஒன்றும் குறைவில்லை, அண்ணி! அவர்கள் உத்தரவின் பேரில்தான் நான் இங்கு வந்தேன்.''

''அவர்கள் சொல்லித்தான் நீ இங்கு வர வேண்டுமா ?''

''அண்ணி, நான் சிட்டுக் குருவிபோல் சிறகு விரித்துப் பறப்பவன். அரசாங்கத்துக் குழப்பங்களில் ஈடுபட வேண்டாம் என்பது என் விருப்பம்.''

மைத்துனனின் பொறுப்பற்ற பேச்சைக் கேட்டு அந்த மாதரசியின் மனம் மகிழ்ந்தது. ஏற்கனவே மாம்பழம் போல் தங்க நிறமாக இருந்த திருமுக மண்டலத்தில் இந்த மகிழ்ச்சி குங்கும வண்ணம் போல் படிந்தது. இருப்பினும் ''தஞ்சை அரசு செய்த தவம் அவ்வளவுதான். துளசி மகாராஜாவுக்குப் பிறந்த பிள்ளைகளில் இறந்த இருவரும் நல்லவர்கள். இருப்பவர்களில் ஒருவர் துறவி. ஒருவன் கலைஞன்'' என்று கூறிச் சாகஸமாக ஒரு பெருமூச்செறிந்தாள்.

''வித்தையும் ஞானமும் இருந்து பயன் என்ன? வீரமில்லையே! விளக்கிருக்கிறது; எண்ணெயும் இருக்கிறது. திரியில்லை'' என்று படபடப்பாக மொழிந்தாள்.

அண்ணியின் ஆவேசப் பேச்சை மைத்துனர் மனமாரப் போற்றினார். ஆயினும் அதன் உட்கருத்து தெரிந்தவராகையால் விளையாட்டாக நகைத்தவண்ணம், '' அண்ணி! நான் வாள் மனைவிக்குப் பிறந்தவன்தானே! ஆள்வதில் எனக்கென்ன அக்கறை?'' என்றார்.

''உங்கள் மகாராஜாவின் வீரத்துக்குத்தான் உன் அன்னையார் மாலையிட்டார்கள். தாய் தந்தை இருவரின் வீர இரத்தத்தில் வளர்ந்திருக்கிறது உன் உடல்'' என்று அவள் கூறியவுடன் பிரதாபசிம்மரின் விழிகளில் ஏறிய சிவப்பையும், அரும்புமீசையின் படபடப்பையும், திடீரென்று வெண்தாமரை செந்தாமரையாக மாறியது போல் திருமுக நரம்புகளில் குபீரென்று ஏறிய இரத்த ஓட்டத்தையும் கண்ட பாவாஜி தம் தம்பியைப் பார்த்துப் பெருமிதம் அடைந்தார்.

அப்பொழுது 'ஜயவிஜயீபவ' என்று ஒரு குரல் ஒலித்தது. பிரதாபசிம்மரைத் தம் இரு கைகளாலும்

சேவிங்ஸ் கணக்கு
ஆரம்பிக்க ரூ 5/= போதுமானது.
ரூ 25,000 வரை வைத்துக்-
கொள்ளலாம். வாரம் ஒன்றுக்கு
ரூ 2000 வரை செக் மூலம்
பணம் பெற்றுக் கொள்ளலாம்.




**தஞ்சாவூர் பர்மனேண்ட் பாங்க் லிமிடெட்.**

பதிவு அலுவலகம்:
1087, மிஷன் தெரு தஞ்சாவூர்.

சேர்மன்
K. V. சச்சிதானந்த மூப்பனார்
செக்ரட்டரி
B. K. மாதவன்

# சேவிங்ஸ் டெபாசிட்டுகளுக்கு

# 5%

வரை வட்டி அளிக்கப் படுகிறது



KS.G.13 TM

# க்ருஷன்

## எந்த வயதிலும் உங்களை இளமையோடு இருக்கச் செய்கிறது

தினமும் க்ருஷன சாப்பிட்டு என்றும் இளமையோடு விளங்குங்கள். க்ருஷனில் சரிசமமாகச் சேர்ந்துள்ள முக்கியமான ஆறு தாது உப்புக்கள் மலச்சிக்கல், மூட்டுவலி, ஈரல் மற்றும் மூத்திரப்பைக் கோளாறுகள், கீல் வாதம், பிடிப்பு வலி முதலியவை வராமல் தடுக்கின்றன.

**க்ருஷன் உங்களை இளமையோடு வைத்திருப்பதன் விதம் இதுதான் : மூத்திரப் பைகளைக்கழுவுகிறது • ஈரலை நன்றாக இயங்கச் செய்கிறது • இரத்தத்தை சுத்தமாக்க உதவுகிறது • மலச்சிக்கல் அகல உதவுகிறது • ஜீரண சக்தியைப் பெருக்குகிறது • பசியெடுக்க வைக்கிறது • மூட்டு வலிகளை அகற்றுகிறது.**

எளிய முறையில் என்றும் இளமையோடு விளங்க தினந்தோறும் ஒரு ஸ்பூன் **க்ருஷன்** சாப்பிடுங்கள்.




நிகோலாஸ் Ⓝ தயாரிப்பு

ஆரத் தழுவிக் கொண்டார் ஒரு முனிபுங்கவர். அவரது திருக்கரத்தி லிருந்து குங்குமத் திலகம் பிரதாப னின் நெற்றியில் இடப்பட்டது.

''சுவாமி, வணக்கம்!'' என்று அவர் இரு பாதங்களையும் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டார் பிர தாபசிம்மர். யுவராஜாவும், சுஜனு பாயும் வணங்கினார்கள். அங்கு வந்தவர் வேறு யாருமல்ல. அரண்மனை உள்துறை நிர்வாகத்தை ஏற்றவரும், ராஜவம் சத்தின் மரியாதைக்குப் பாத்திரமானவ ரும், கல்விக் கடலும், அறுபத்தி நான்கு அரிய வடமொழி நூல்களை யாத்தவ ரும், பவபூதியின் 'உத்தரராம சரிதத்' துக்கு விளக்கவுரை கண்டவருமாகிய வணக்கத்துக்குரிய மந்திரி கனசியாம் பண்டிதரேயாகும்.

அவர் முன் அரண்மனைப் பெண்டிர் அவரது குழந்தைகளைப் போல் பழகு வார்கள். அந்த அரண்மனைக்குள் அந் தப்புரத்திலும் ஆஸ்தானத்திலும் எங்கும் எக்காலத்திலும் செல்லும் உரிமை அவருக்கு உட டு. அவரது விடு ஒரு கலைக்கூடம். அவருடைய குடும்பத்தினர் பல்கலை வல்லுநர்கள். அவர் பெயரைச் சொல்வது பண்புக் குறைவு என்று கருதி அரண்மனையில் அனைவரும் 'பண்டித முனிவர்' என்றே அழைப்பார்கள்.

பண்டித முனிவரைப் பணிவுடன் ஓர் உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்து, அவர் உத்தரவிட்ட பிறகு அண்ணனும் தம்பியும் இருக்கைகளில் அமர்ந்தனர். சுஜனுபாய் அம்மணி தன் கணவர் அருகில் நின்றுகொண் டாள். மற்ற எட்டு மனைவியரும் சற்று எட்டி நின்றார்கள். பிரதாப சிம்மர் பயபக்தியுடன் எழுந்து நின்று வலக் கரத்தால் தம் வாயை மூடிக் கொண்டே, ''சுவாமி, எங்கள் தந்தையார் விரும் புவதாகவும் உடனே இங்கு வரும்படி யும் தாங்கள் ஆணையிட்டதாகத் தங்கள் மருமகன் சியாமா தெரிவித்தார். எனக்கு இடும் கட்டளை என்ன?'' என்றார்.

கனசியாம பண்டிதர் பதில் சொல் வதா வேண்டாமா என்று சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். ஆனால் சிந்திக்காமலேயே சுஜனுபாய் ஒரு வார்த்தையைச் சொன்னாள்.

''தந்தை எதற்குத் தனயனை அழைப் பார்? மைந்தன் வீரத்தைப் பார்க்க மகாராஜா விரும்பியிருப்பார்கள்.... ஆனால் வண்டியிலே மாறு வேடம் தரித் துக்கொண்டு மகன் வருவான் என்று தெரிந்திருந்தால் அழைத்திருக்கவே மாட்டார். பிரதாபா, நீயும் ஏன் டெண் வேஷம் போட்டுக் கொண் டிருக்கக் கூடாது?''

பிரதாப சிம்மர் கடகடவென்று சிரித்தார்.

'' 'வண்டியில் இரண்டு டெண்க ளோடு ஒருவன் வருகிறான். அதிலும், அரண்மனை வண்டி அது' என்று தெரிந்தால் காட்டு வழியிலே, கன்னி யரை வேட்டையாடும் கயவர்கள் வழி மறிப்பார்கள். என் வீர வாளுக்கு அவர் களை விருந்திடலாம் என்ற எண்ணத்தில் தான் வேடம் தரித்து வந்தோம். பயந்து அல்ல, அண்ணி!'' என்றார்.

''ஏய், பிரதாபா! உனக்கு அந்தச் சேதி தெரியுமா? அன்றைக்கு மாரியம் மன் கோயில் பூசாரி சொன்னான்'' என்று மிகுந்த அக்கறையோடு இடை மறித்தார் பாவாஜி.

தன் கணவர் பேச ஆரம்பித்த உடனேயே, சுஜனுபாய் தனக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டாள். ''உங்கள் பூசாரி கதை உங்களோ டேயே இருக்கட்டுமே!'' என்றாள்.

''அது எப்படி? எனக்குத் தெரிந் தது என் தம்பிக்கும் தெரிந்திருக்க வேண்டும். மாற்றாந்தாயின் மகன் என் றால் என்ன? பூசாரி உடுக்கடித்துப் பாடி னான். உடனே ஆவேசம் வந்து விட் டது. அந்த ஆவேசத்தில் மாரியம்மன் என்ன உரைத்தாள் தெரியுமா? பரம சிவன் ஏதோ ஒரு காட்டில் வந்து அவதாரம் செய்திருக்கிறாராம். சிங்கம், புலி, கரடி எல்லாம் அவருக்குக் குற் றேவல் செய்து அவரை வளர்த்து வரு கின்றனவாம். திடீரென்று ஒரு நாள் கையிலே உருவிய வாளோடு ஊருக் குள் பிரவேசித்து, நாட்டில் உள்ள தீய வர்கள், பாபிகள் ஆகிய துஷ்டர்களை யெல்லாம் நிக்ரஹம் செய்து சிஷ்ட பரிபாலனம் செய்வாராம். தாட்சிண்ய மில்லாமல் கண்ட தலைகளையெல்லாம் தரையில் உருட்டி விடுவாராம். ஆனால் வாசலில் ஆஞ்சநேயர் படத்தினை வரைந்திருந்தால் அந்த வீட்டை ஒன்றும் செய்ய மாட்டாராம். நான்கூட அரண் மனை ஓவியனை விட்டு உடனே அந்தப் புரத்து வாசலில் இரண்டு ஆஞ்சநேயர் ஓவியங்களை வரையச் சொல்லிட்டேன்.''

''அண்ணா! எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கையில்லை. வெறுங்கதை.''

''ஐயையோ! தவறு, தவறு. பெருந் தவறு! அப்படிச் சொல்லாதே. இப் பொழுது உச்சிகாலமானவுடன் கோயில் பிரசாதத்தோடு கோயில் பூசாரியே வருவார். அவரை வேண்டுமானால் கேள்!'' என்று அவர் சொல்லி முடிக்கு முன் அந்தப்புரத்தில் கணகணவென்று மணிகள் ஒலித்தன.

''எப்படி என் ஏற்பாடு? மாரியம்மன் கோயிலில் பூஜை மணி அடித்தவுடனேயே, நாலு இடங்களிலிருந்து அஞ்சல் மணிக்காரர்கள் மணியடிப்பார்கள். உடனே அந்தப்புரத்தில் மணி முழங்கும். மாரியம்மா! தாயே!'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டார் பாவாஜி.

அப்பொழுது தலையை மொட்டை அடித்துக் கொண்டு நெற்றியெல்லாம் குங்குமத்தைப் பூசிக்கொண்டு, கையில் ஒரு தாம்பாளத்துடன் ஒருவர் வந்தார். அந்தத் தாம்பாளத்தில் ஒரு பெரிய மாலை இருந்தது. அதன் நடுவே தாமரை இலையில் ஒரு பிரசாதப் பொட்டலம் வாழை நாரால் சுற்றி நன்றாகக் கட்டி வைக்கப்பட்டிருந்தது.

பாவாஜி எழுந்தார். ''யுவராஜ்கி மங்கலம் உண்டாகுக...!'' என்று வாழ்த்தி, பூசாரி பாவாஜியின் கழுத்தில் மாலையை அணிவித்து, பிரசாதத் தாம்பாளத்தைக் கையில் கொடுத்தார்.

''நீ யார்? ஏன் பழைய பூசாரி வரவில்லை?'' என்று கேட்டார் யுவராஜா.

''கிழவருக்கு உடல்நலமில்லை. நான் அவருடைய சீடன். என்னை அனுப்பினார். வணக்கம். நான் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சிறிய பூசாரி யுவராஜாவைப் பார்த்தவண்ணமே பின்னால் நடந்தார். அவர் அவசரத்தைக் கண்டு பிரதாபசிம்மன் சந்தேகப்பட்டார். அவருடைய கண்கள் சர்க்கரையை நோக்கின. பாவாஜிக்கும் ஏதோ ஓர் எண்ணம் வரவே, ''ஏய், நில்'' என்றார். பூசாரியின் உடல் நடுங்கியது. குபீரென்று வேர்த்தது. வெல வெலத்துப் போய் நின்றான்.

''மாலையில் நாம் அரண்மனை வைத்தியரை அங்கு அனுப்புகிறோம். பெரிய பூசாரியாரின் உடல் நிலையை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்.''

''ஜீ ஹுஜூர்'' என்று கூறி ஓடி மறைந்தான் பூசாரி.

''பிரதாபா, நீ வந்த நேரம் பிரசாதமும் வந்திருக்கிறது. பேசும் தெய்வமப்பா....!'' என்றார் பாவாஜி.

அந்தப் பிரசாதத்தையே கூர்ந்து நோக்கினார் பிரதாபசிம்மர். அவர் காதில் அண்ணனின் வார்த்தை புகுந்தவுடன், ''ஆம், அண்ணா, பிரசாதமே பேசுகிறது. பொட்டலத்துக்குள்ளிலிருந்து ஏதோ சத்தம் வருகிறதே, கவனித்தீர்களா?'' என்றார்.

''அப்படியா?'' என்று ஆவலுடன் பிரசாதப் பொட்டலத்தைப் பிரிக்கக் கரத்தை நீட்டினார் பாவாஜி.



## அட! அப்படியா?

-காழி ஜெயா-

- மிருகங்களில் ஒட்டைச் சிவிங்கியினால் மட்டுமே கழுத்தைத் திருப்பாமல் பின்புறம் பார்க்க முடியும்.
- ஆமையின் மூளையைத் தகர்த்தெறிந்துவிட்டால் கூட அதன் உடலில் உயிர் இருக்கும். அதைக் கொல்வது மிகக் கடினம்.
- நாலு கால் பிராணிகளில் ஒட்டகத்துக்குமட்டுமே நீரில் நீந்தத் தெரியாது.
- வெட்டுக் கிளிகள் நாள் கணக்காகச் சேர்ந்தாற் போல் பறக்கும் திறமை படைத்தவை.
- தட்டாரப் பூச்சியைப் போல் நின்று பறக்கும் சக்தி வேறு எந்தப் பூச்சிக்கும் கிடையாது.
- உணவு கிடைக்காதபோது தேள்கள் ஒன்றையொன்று கொன்று தின்றுவிடும். அவை சேர்ந்து வாழ்வது இல்லை. தனித் தனியே தான் வசிக்கும்.
- நாய்களுக்கு வர்ண பேதம் தெரியாது. கறுப்பு, வெள்ளை ஆகிய இரண்டு நிறங்களே அவைகளுக்குத் தெரியும்.
- கரப்பான் பூச்சி எப்போதும் சரியாகப் பதினாறு முட்டைகளே இடும்.
- நத்தை, மண் புழு போன்ற ஜந்துக்களில் தனித் தனியே ஆணும் பெண்ணும் கிடையாது. ஒவ்வொன்றும் ஆணும் பெண்ணுமாக இருக்கும்.

---

பிரதாபசிம்மர் தம் இடது கையால் பிரசாதத் தாம்பாளத்தைச் சரேலென்று கீழே தள்ளினார். இருவரும் திடுக்கிட்டார்கள்!

தாமரை இலைக் கிழியிலிருந்து தலை தூக்கியது ஒரு கருநாகம். புஸ்ஸென்று சீறிக் கொண்டே படம் எடுத்து ஆடியது அது.

அந்தப்புரப் பெண்கள் அலறி ஓடினர். ''ஜெய், நாகராஜ்'' என்று கூவினார் பாவாஜி. அதற்குள் பிரதாபசிம்மரின் வாள்வீச்சுக்கு இரையாகியது அந்தக் கரு நாகம்.

''பிரதாபா, என்ன அநியாயம் செய்துவிட்டாய்? தஞ்சாவூர்கோட்டை, கருடனைப் போல் அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்குள்ளே பாம்பு வராது'' என்றார் பாவாஜி.

''வந்திருக்கிறதே அண்ணா!''

''வந்தாலும் கடிக்காது. கடித்தாலும் விஷம் ஏறாது. ஐயோ! பாம்பைக் கொன்று விட்டாயே! இந்தப்

பாவத்துக்குப் பிராயச்சித்தம் பண்ண வேண்டுமே!'' என்றார் அந்த அப்பாவி.

பிரதாபசிம்மரின் காதுகளில் அவர் சொல்லியது ஏறவில்லை. இரத்தம் தோய்ந்த தம் வாள் நுனியால் தாமரை இலையின் நடுவேயிருந்த ஓர் ஓலை நறுக்கைக் குத்தியெடுத்தார்.

''வழியை மறிக்காமல் இருந்தது இதற்காகத்தான். அண்ணன் தம்பி இருவரையும் கூண்டோடு கைலாசம் அனுப்பிவிட்டேன்.

— ''முல்லை வேந்தன்''

என்ற சீட்டைப் படித்தார். எல்லோரும் திகைத்து நின்றனர்.



ஆண்டிக்கு ஓட்டைப் பற்றின பயம். அரசனுக்கு நாட்டைப் பற்றின பயம். அச்சம் எங்கும் உண்டு. அளவில்தான் வித்தியாசம்.

ஒருதனி அறையில் ஒரு மகாநாடு கூடியிருந்தது. அதற்கு பாவாஜி தலைமை வகித்தார். மகாநாட்டின் பிரதிநிதிகளாகப் பூசாரிகள், மந்திரவாதிகள், ஜோசியர்கள், புரோகிதர்கள் எல்லாரும் வந்திருந்தார்கள்.

''நாலாயிரம் பேருக்குச் சாப்பாடு போட்டு அரசமரத்தடியில் நாகப் பிரதிஷ்டை செய்ய வேண்டும். நீர் எனக்குத் தங்கத்தால் நாகம் செய்து தானம் செய்ய வேண்டும், பாம்பு மோதிரம் பதினாறு செய்து சுமங்கலிகளுக்குக் கொடுக்க வேண்டும்'' என்றார் புரோகிதர்.

''அந்த இடத்தை வாழைத் தண்டுச் சாரால் மொழுகி எருக்கம் பாலால் கோலம் இட வேண்டும். ஏழு நாட்களுக்குப் பசு நெய்யால் விளக்கேற்ற வேண்டும்'' என்றார் வைத்தியர்.

''கோவிலுக்கு நெய் விளக்கேற்ற நூற்றெட்டு ஆடுகள் தானம் செய்ய வேண்டும். அரண்மனையில் சர்ப்ப சாந்தி செய்ய வேண்டும்'' என்றார் சோசியர்.

''வல்லம் முதல் தண்டாங் கோரை வழியாக மாரியம்மன் கோயில் வரை உள்ள பாம்புப் புற்றுக்களுக்கெல்லாம் பால் ஊற்ற வேண்டும்'' என்றார் பூசாரி.

''பாம்பைக் கொன்று விட்டீர்களே? இல்லாவிட்டால் நான் அதையே திருப்பி ஏவி அனுப்பியவனையே கடிக்கவிட்டிருப்பேனே?'' என்று வேகமாக மாரைத் தட்டிக்கொண்டு இருமினார் மாரண மந்திரக்காரர்.

இவர்களுக்கிடையில் ஒன்றும் புரியாமல் பாவாஜி திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தார்.

''ஏய் ஆமாஜி!'' என்று இரைந்து கூப்பிட்டார். அவர் பின்னே கையைக் கட்டிக் கொண்டிருந்த குட்டையான மனிதர் ஒருவர் ''இதோ இருக்கிறேன், பிரபோ!'' என்றார்.

''அவர்கள் சொல்வதை யெல்லாம் கேட்டாயா?''

''ஆமாஜி! கேட்காமலிருப்பேனா?''

''இந்தப் பிராயச்சித்தங்கள் எல்லாம் செய்ய வேண்டியதுதானே?''

''வேண்டியதுதான், வேண்டியதுதான்.''

''செய்யாவிட்டால் என்ன?''

''அதைத்தான் நானும் கேட்கிறேன். செய்யாவிட்டால் என்ன?''

''ஒரு சமயம் பாம்பு மறுபடியும் பிழைத்து வந்து விட்டால்...?''

''ஆமாஜி! அது யோசிக்க வேண்டிய விஷயம்தான். வந்தாலும் வரும்.''

''என்னடா உளறுகிறாய்? எதற்கெடுத்தாலும் 'ஆமாம்' போடுகிறாயே? செத்த பாம்பு பிழைக்குமா?''

''நல்ல கேள்வி! நன்றாகக் கேட்டீர்கள். எனக்கும் அதுதான் சந்தேகமாக இருக்கிறது. அப்படிப் பிழைத்தாலோ மறுபடியும் பல் முளைத்துத்தானே கடிக்க வேண்டும்?'' என்று தம் கற்பனைக்குத் தாமே கடகடவென்று சிரித்தார் ஆமாஜி.

'காஞ்சிபுரத்துக்குப் போனால் காலாட்டிச் சாப்பிடலாம்' என்பார்கள். இது கைத்தறியைக் காலால் மிதித்து ஓட்ட வேண்டும் என்பதற்காக ஏற்பட்ட பழமொழி. 'தஞ்சாவூருக்குப் போனால் தலையாட்டியே சாப்பிடலாம்' என்றும் ஒரு பழமொழி உண்டு. தஞ்சாவூர்ப் பொம்மை என்றாலே தலையாட்டிப் பொம்மை என்று எல்லோருக்கும் தெரியும். பெரிய மனிதர்களுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு எதைக் கேட்டாலும் தலையை ஆட்டிக் கொண்டே இருந்தால், எந்த வேலையும் செய்யாமலேயே சாப்பிடலாம் என்ற கருத்தைக் காட்டுவதுதான் அந்தப் பொம்மை. அந்த லோட்டாப் பேர் வழிகளில் ஒருவர்தான் ஆமாஜி. அவரோடு கலந்து ஆலோசித்து அத்தனை பரிகாரங்களுக்கும் ஏற்பாடு செய்து கொண்டிருந்தார் பாவாஜி. அதே சமயத்தில்....

மன்மத விலாசத்தில் கனசியாம் பண்டிதரும் பிரதாபசிம்மரும் மிக அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்!

**(தொடரும்)**

# லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட டீ




## தூரத் தேயிலைத் தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

குணமும் சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள் நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள்—ஆம்!—அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட. தூரத் தேயிலைத் தூள்களில லிப்டன்ஸ ஹிமாலயன் கோல்டன் டஸ்ட தனிப்பெருமை வாய்ந்தது. தன்னிகரற்றது சுவைப்பது உண்மை

**லிப்டன்ஸ் என்றாலே நல்ல டீ**




LMDC-5 FAM

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..

5
















சுந்தர புரியிலே அதிர்ச்சிகள் காத்திருப்பதை அறியாத ஆனந்தன் நம்பிக்கையோடு அதை நாடிச் செல்லுகிறான். தனக்கு முன்னால் அங்கு வஜ்ரகீர்த்தி சென்று சூழ்ச்சிகள் புரிந்து கொண்டிருப்பதை அவன் அறியவில்லை. அது மட்டுமல்ல. தன் அருமை நண்பன் கந்தனும் கூட அங்குதான் சிறைப்பட்டுக் கிடக்கிறான் என்பதும் அவனுக்குத் தெரியாது. கந்தன் ஏன் எப்படி அங்கு சிறைப்பட்டான்? அதைப் பார்ப்போம்......




காட்டாற்றின் கரையிலோ ஏராளமான முதலைகள்..


கந்தன் ஆற்றிலே நீந்தி வரும் போது ஒரு முதலையும் நீரினுள் நழுவி — அவனைத் தொடருகிறது...


சுவையான விருந்தை எண்ணி விரைவாக முன்னேறுகிறது முதலை.


கந்தனைத் தொடரும் அபாயத்தை உணர்ந்த ஜம்பு காட்டுக் கொடிக் கயிறுடன் மரங்களினூடே தாவி வருகிறது..


ஜம்பு வீசிய காட்டுக் கொடிக் கயிறு கந்தனுக்குக் கை கொடுத்து உதவுகிறது.


நீர் அரக்கனான முதலையோடு போராடுகிறான் கந்தன்...
தொடரும்..



## கொலையாளியே அழுவார்!

ஒரு வெங்காயம் மற்றொரு வெங்காயத்தைக் கேட்டது: "ஆமாம், நாம் இறந்தால் யார் அழுவார்கள்?"

"வேறு யார்? நம்மை நறுக்கியவர்கள் தான்!"

## மூக்கு!



குழந்தைகளுக்கு மிகவும் பிடித்தமான விளையாட்டுச் சாமான் எது என்பதைக் கண்டுபிடிக்க ஒரு நிபுணர் குழு அமைக்கப்பட்டது. அது பல்லாயிரக் கணக்கான குழந்தைகளின் போக்குகளை ஆராய்ந்து வெளியிட்ட முடிவு:

குழந்தைகளுக்கு மிகவும் பிடித்தமான விளையாட்டுச் சாமான் அப்பாவின் மூக்கு!

தகவல்: மு. க. தியாகராசன்
ஆதாரம்: "எங் நியூஸ்"



விண்ணிலிருந்து மழைத்துளிகள் பூமியை வந்தடைவதற்கு 3 மணி நேரம் ஆகின்றது. கடலில் விழும் மழைத்துளிகள் 50 அடி ஆழம் வரையிலுள்ள தண்ணீருடன் கலக்கின்றன. அதற்குக் கீழே போவதில்லை.

தகவல்: 'ரமன்'
ஆதாரம்: 'ஸயன்ஸ் டைஜெஸ்ட்.'



ஸ்டுடிபேக்கர் கார்களை உற்பத்தி செய்த ஸ்டுடிபேக்கர் சகோதரர்கள் 1863ல் தங்கள் நிறுவனத்தை ஆரம்பித்தபோது ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

அவ்வளவு எளிமையான, சுருக்கமான ஒப்பந்தம் வேறு யாரும் செய்து கொண்டது கிடையாதாம்.

அதன் வாசகம்: "பீட்டர் ஸ்டுடிபேக்கரான நான், என்னுடைய சகோதரரால் உற்பத்தி செய்யக்கூடிய அத்தனை வண்டிகளையும் விற்பனை செய்ய ஒப்புக்கொள்கிறேன்."

"க்ளாம் ஸ்டுடிபேக்கராகிய நான் என்னுடைய சகோதரரால் விற்பனை செய்யக்கூடிய கார்கள் அத்தனையையும் உற்பத்தி செய்து தர ஒப்புக் கொள்கிறேன்."

— 'நியூயார்க் டைம்ஸ்'
தகவல்: 'ஜம்ஜூ'



தராசிலே கனம் உள்ள தட்டு கீழே தாழும். இலேசான தட்டு மேலே எழும். மனிதரிலே குணமும் ஆற்றலும் உள்ளவர்கள் பணிவாயிருப்பார்கள்; கர்வமும் பலவீனமும் உள்ளவர்கள் ஆர்ப்பாட்டம் செய்வார்கள்.

ஆயிரம் குறிப்பு என்ற நூலிலிருந்து
தஞ்சை ர. பத்மநாபன்

## காதலுக்கும் ஒரு வரி!

காதல் விஷயத்தில் ஜப்பானியர் பெயர் வாங்கியதில்லை. எனினும், உலகிலேயே இவ்விஷயத்துக்காகத் தம் வருமானத்தில் ஒரு பகுதியை வரியாகச் செலுத்தும் மக்கள் அவர்கள். இந்தியாவில் வேலை தரும் ஸ்தாபனங்கள்போல் ஜப்பானில் விவாக ஜோடி சேர்க்கும் ஸ்தாபனங்கள் இயங்குகின்றன. வரிப்பணம் வசூலித்து நகரசபைகளே அதை நடத்துகின்றன. —ரமன்




**ப**ண்டாபீஸில் ஐந்து மணி அடிக்கிறபோது தூக்கம் கலைந்து விட்டது. படுக்கையைச் சுருட்டிவிட்டு விளக்கைப் போட்டார். பக்கத்துக் கட்டிலில் மூர்த்தி உடலை முறுக்கிக் கொண்டு கம்பளிக்குள் முடங்கிக்கொண்டிருந்தான். ஏதோ இனிய கனவை ரசிக்கும் பாவனையில் இதழ்கள் பிரிந்திருந்தன. அவனையே ஒரு கணம் பார்த்தவர், அறையைத் தாண்டி மாடியின் கைப்பிடிச் சுவர்ப் பக்கம் வந்து வெளியே பார்த்தார்.

கீழே, ஊசியாய் இறங்கும் பனிப் போர்வையின் ஊடே, தெருவெங்கும் கோலங்கள் முளைத்துக் கொண்டிருந்தன. வைகறையின் அமைதியைக் கிழிக் கொண்டு அசைந்தாடி நடக்கிற மாடுகள் தெரு விளக்கின் கீழ் பூதாகாரமான தங்கள் நிழலைக் கண்டு தாமே மிரண்டன. நட்சத்திரங்கள் இன்னும் மறையவில்லை.

அவர் பார்வையில்லாத பார்வையாய் இருளைத் துருவிக் கொண்டு நின்றார். தினமும் இந்த வேளையில் இப்படி வெளியைக் கண்டு தன்னையே இழக்கும் வழக்கம் படிந்து எத்தனையோ வருஷங்கள் கரைந்தாயிற்று. இந்த நேரத்தில், இந்த அமைதியில், உதயத்தை ரகசியமாய் ரசிக்கும்போது மனசை உடலிலிருந்து அகற்றி, கழுவித் துடைக்கிறாற்போல் ரம்மியமாயிருக்கிறது. காக்கைகளின் அலறலைத் தவிர வேறு ஒலியே இல்லை.

ஆறேகால் மணிக்கு மூர்த்தியை எழுப்பினார். அவன் முனகிக் கொண்டே கட்டிலில் எழுந்து உட்கார்ந்தான். "மனிதனுக்கு எட்டு மணி நேரத் தூக்கம் வேண்டுமென்று சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன ஸார்..." என்றான்.

"அப்படியா...? சாஸ்திரங்கள் கோஷித்த காலத்தில் ஒன்பதரை மணி ஆபீஸ் இருந்திருக்காது. நீ வேணுமானால் தூங்கு" என்றார் அவர்.

"இப்படி நீங்கள் குளித்த உடம்பும் விபூதியுமாய் வந்து நிற்கிறபோது... நாளைக்குச் சேர்த்துத் தூங்கிக் கொள்கிறேன்" என்று மூர்த்தி எழுந்து போனான்.

இருவரும் காப்பிக்காக ஹோட்டலை நோக்கி நடக்கையில், "ஏதாவது விசேஷமா ஸார்?" என்று மூர்த்தி கேட்டான்.

"ஒன்றும் இல்லை. நீதான் சொல்லணும்."

"இருக்கு ஸார்; அதை எப்போ, எப்படிச் சொல்லறதுன்னு தெரியல்லே. உங்கள் முகத்தைப் பார்த்தால் உங்களுக்கு அம்மா ஞாபகம் வந்துவிட்ட மாதிரி இருக்கு."

அவர் அவனோடு சேர்ந்து சிரித்தார். "என் அம்மா உன்னை என்ன செய்யப் போகிறாள்? நீ சொல்லு..."

அவன் பேசாமல் குளத்து மண்டபத்தைப் பார்த்துக் கொண்டு நடந்தான். இளமை முறுக்குடன் ஒன்றிய ஆஜானுபாகுவான உடல்வாகு. நிமிர்ந்த, செங்குத்தான நடை. அவனுக்கும் அவருக்கும் ஆபீஸில் ஏற்பட்ட பழக்கம் வளர்ந்து வேரூன்றி இப்போது சகோதர பாசத்துக்கும் மேலாகக் கிளைத்து விட்டது.

அவர் அவனை கவனிக்கவில்லை. அம்மாவின் நினைவு வர, அந்த நினைவில் மூழ்கியவராய் நடந்து கொண்டிருந்தார். ஹோட்டல் வாசல் வரவும், "ஸார், உங்கள் சந்து வரான்" என்று மூர்த்தி அவரை நிறுத்தினான்.

அவர் கணத்துள் நடுங்கிப் போனார். அவன் ஏன் இத்தனை அதிகாலையில் வரணும்? மாம்பலத்தில் இருக்கிற அவர் தங்கை—சந்துவின் அம்மா — ஏதாவது சொல்லி அனுப்பினாளோ? கடவுளே! அம்மாவுக்கு ஏதாவது....

அவர் கண்ணை மூடித் திறந்தார்.

"என்னடா?"

"பாட்டி ஊரிலிருந்து வந்திருக்கா. உன்னை அழைச்சுண்டு வரச் சொன்னாள்."

"ஏண்டா? உடம்புக்கு ஏதாவது...?"

"ஊஹூம்.. ராத்திரி யாரோ காரில் கொண்டு வந்து விட்டுப் போனார்கள். வெறுமனேதான்..." பத்து வயதுச் சந்துருவுக்கு மாமாவைப் பார்க்க வேடிக்கையாயிருந்தது.

காப்பி குடித்தானதும், "மூர்த்தி, நீயும் வாயேன்... அம்மா எப்படி இருக்கிறாள் என்று பார்..." என்று அழைத்தார்.

அவன் தயங்கினான். அந்தத் தயக்கத்தினூடே தான் அவரிடம் சொல்ல வேண்டியதைச் சொல்ல வாய்ப்புக் கிடைக்கும் என்று நம்பிக்கை பிறக்கவே, அவனும் கிளம்பினான்.

மாம்பலத்தில் சிறிய வீடு. ஹாலில் கிருஷ்ணன் பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். ஞானு நின்றபடி ஏதோ புத்தகத்தில் லயித்திருக்க, ருக்கு அவளுக்குத் தலை பின்னிக் கொண்டிருந்தாள். ஹாலைத் தாண்டி, கூடத்துச் சார்ப்பில் ஊஞ்சலில் உட்கார்ந்து சத்தமில்லாத ஜபமாய் வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டு, பேத்தி படிக்கிற அழகை ரசித்துக் கொண்டிருந்தாள் அவர் தாய்.

அவர் யாருடன் பேசுவது என்று தெரியாமல் திணறினார். கிருஷ்ணனுக்கு அவர் ஒரு விளையாட்டுப் பொருள். ருக்குவுக்கு அவர் ஒரு ஞானப்பித்து: ஞானுவுக்கு அவர் ஒரு புதிர்.




ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டே வந்தார். கிருஷ்ணனுக்கு வயதுக்கு மீறிய முதுமை வந்து விட்டது. ராஜுவின் வளர்ச்சி அவருக்கே பிரமிப்பாக இருந்தது. அம்மாவும் ருக்குவும் ஒரே வார்ப்பு. அம்மா தான் அவருக்கு நினைவு தெரிந்த நாளாய் ஒரே மாதிரி இருந்து வருகிறாள். வருஷங்களும் பிரச்னைகளும் அவளை ஒன்றும் செய்ய முடியவில்லை. சிவப்பான, சிறு கூடான உடம்பு. அதைச் சுற்றிப் பதினெட்டு முழப் புடவையை எப்படித்தான் கட்டிக் கொள்ளுகிறாளோ!

''என்னடா? எப்படி இருக்கிறாய்?''

அவர் சிறு பையனைப் போல் முகம் மலரச் சிரித்தார். ''இருக்கிறேன், நீயே பாரேன்! காலம்பறக் குளிக்கிறபோது உன்னை நினைத்துக்கொண்டேன். மனத்துக்குள்ளே எதுவோ நீ வரப்போகிறாய் என்று சொல்லித்து...''

''அதனாலேதான் நான் வந்தேன்... ஏன் வந்தேன் என்று கேட்க மாட்டாயோ?'' அவன் குரல் இறுகினாற்போல் அவருக்குத் தோன்றியது.

''உன் பெண் வீட்டுக்கு நீ ஏன் வந்தாய் என்று நான் ஏன் கேட்கணும் அம்மா? ருக்கு கேட்கிறபோது தெரிந்து கொள்ளுவேன்...''

''ஹம்ம்...'' என்று முனகினாள் அம்மா.

''மாமா....அவர் வெளியே நிற்கிறார்...'' என்றான் சுந்து.

''அடடா, மறந்தே போனேன்...'' என்று அவர் மூர்த்தியை உள்ளே அழைத்து வந்தார். கிருஷ்ணனையும் அம்மாவையும் அவனுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

''உங்களைப் பத்தி இவர் பேசாத நாளே இல்லை'' என்றான் மூர்த்தி அவர் தாயாரிடம்.

''உனக்குக் கல்யாணம் ஆயிடுத்தோ?'' என்றான் அவன் நேரிடையாக.

''இல்லை...''

''சீக்கிரம் செய்துகொள். இவனோடு இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்தால், பெண்டாட்டிக்குச் சாதம் போடற பணத்தை பாங்கில் போட்டால் வட்டி எவ்வளவு தேறும் என்று உனக்குச் சொல்லித் தருவான். அப்பா, அம்மாவெல்லாம் எந்த ஊரில் இருக்கிறார்கள்?''

''இப்போ இரண்டு பேரும் இல்லே'' என்ருன் மூர்த்தி.

ஞானு இரண்டு டம்ளர்களில் காப்பி கொண்டு வந்து வைத்தாள். மூர்த்தி அவளை ஒரு கணம் பார்த்துவிட்டு வாசல்புறம் பார்த்தான்.

''எடுத்துக் கொள்....'' என்ருள் அம்மா. ''ஞானு காலேஜில் படிக்கிருள்; நீதான் வெட்கப்படணும். படிக்கப் படிக்க, பார்வை ஆகாசத்துக்குத்தான் போகும்....''

ஞானு கலகலவென்று சிரித்தாள். ''எங்கள் பாட்டியைச் 'சீரியஸா'க எடுத்துக் கொள்ளாதீர்கள். நல்ல மனசு.''

''பேத்தி சொல்லி விட்டாள். என் ஜன்மம் சாபல்யமாச்சு....''

மூர்த்தியை ஞானுவின் சௌந்தரியம் கவர்ந்தது. 'புதுமைப் பெண்' வகையைச் சேர்ந்தவள் என்று எண்ணிக் கொண்டான்.

கிருஷ்ணன் குளிக்கப் போனதும், தாயும் பிள்ளையும் ஒருவரையொருவர் பார்த்தபடியே சிறிது நேரம் பேசாமல் இருந்தார்கள். மூர்த்தி சுவரில் மாட்டியிருந்த படங்களில் ஆழ்ந்து போனுன்.

திடீரென்று. ''ஆத்மா! நீ ஏன் பிறந்தாய்?'' என்ருள் அம்மா.

அவர் திடுக்கிட்டுப் போனுர். ஞானுகூட, ''என்ன கேட்கிருய், பாட்டி?'' என்ருள். அவருக்கு என்னவோ போல் இருந்தது. அம்மாவின் உடம்பு குறுகிக் குறுகிக் கரைந்து போவது போல் ஒரு பிரமை அவரை ஆட்டியது.

''உன் மாமா எதுக்காகப் பிறந்தான், ஞானு ? நீதான் சொல்லேன்....!''

''இது கேள்வியே இல்லே.... கல்யாணம் பண்ணிக் கொள்ளாதவர்கள் எல்லாம் பிறக்காமலேயிருக்கணும் என்கிருயா, பாட்டி?''

அவன் பேத்தியின் அழகிய முகத்தை உற்றுப் பார்த்தாள்.

அவர் சட்டைப் பொத்தானைத் திருகிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அம்மாவின் மேல் அவருக்குக் கோபம் வரவில்லே. எத்தனையோ வருடங்களாய் அவரை வற்புறுத்தி, கெஞ்சி, கோபித்து, கடைசியில் அவரது நாற்பத்தெட்டாவது வயதில், 'இனி இல்லே' என்று ஆனபிறகு, தன் ஆற்ருமையை அவள் வெளியிடும் விதம் அது. அவள் மேல் ஓர் இரக்க உணர்வுகூடத் தோன்றிற்று. 'எனக்கு ஒருத்தியைக் ட்டி வைத்து இவள் என்ன சுகத்தைக் கண்டிருக்கப் போகிருள்?' என்று தன்னையே கேட்டுக் கொண்டார்.

நேரம் ஓடியது. என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தார்கள். எட்டரை மணிக்கு, ''ஸார், எனக்கு நேரம் ஆகிறது: நீங்கள் இருந்து விட்டு வாருங்கள்....'' என்று மூர்த்தி எழுந்தான்.

''இரு, இரு.... நானும் வரேன்.... '' என்று அவரும் எழுந்து கொண்டார்.

''சாப்பிட்டுவிட்டு, இப்படியே போங்களேன் மாமா....'' என்ருள் ஞானு.

''இல்லே, ஆபீஸுக்கு வேஷம் மாற்றியாகணும். நான் சாயந்திரம் வரேன் அம்மா. ருக்கு, வரேன்...!''என்று சொல்லிக்கொண்டு கிளம்பினுர்.

தெருவில் வெய்யில் இதமாக உறைக்க ஆரம்பித்து விட்டது. கால்சராயும் நெக்டையுமாக ஆபீசுக்கு ஓடுகிறவர்களும், கல்லூரிக்கும், பள்ளிக்கும் விரையும் மாணவர்களுமாக ஜன இயக்கம் மும்முரமாக இருந்தது. பஸ் ஸ்டாப்புக்கு அருகே வரும் வரை இருவரும் பேசவில்லே.

''எப்படி இருக்கு, ருக்குவின் குடும்பம்?'' என்ருர் அவர்.

''எல்லாரும் உங்கள் மேல் ஆழ்ந்த பாசம் வைத்திருக்கிருர்கள், உங்கள் அம்மா உட்பட...'' என்று மூர்த்தி சிரித்தான்.

''அவ்வளவுதானு?''

''எல்லாரிடமும் துடிப்பு இருக்கு : வாழ்க்கையைச் சுமையாக நினைக்கிற பலவீனம் இல்லே.....''

''எனக்கு உன் மாதிரி பேச வரவில்லே, மூர்த்தி ! ஞானுவைப் பற்றி என்ன நினைக்கிருய்?''

''நல்ல பெண். அழகி.... உங்களை ஒரு மாதிரி எடை போட்டு வைத்திருக்கிருள்.... எனக்கு இருபத்தேழு வயசில் தோன்றின சந்தேகம் அவளுக்குப் பதினெட்டு வயசில் உண்டாகிவிட்டது.......''

அவர் பேசாமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''ஸார்......! நான் உங்களிடம் பழகின நெருக்கத்தைத் துஷ்பிரயோகம் செய்கிறேன் என்று நீங்கள் நினைக்காவிட்டால் உங்களை ஒன்று கேட்கலாமென்று நினைக்கிறேன்....''

''காலேயில் என்னவோ சொல்ல வந்தாயே, அதுவா? என்னிடம் உனக்கு எல்லாச் சுதந்திரமும் உண்டு, மூர்த்தி! எதுவானுலும் கேள்.......!''

''ஞானு கேட்டாளே, அதுவாகத்தான் வைத்துக் கொள்ளுங்கள். இத்தனை வருஷங்களில் சென்னையில் இருக்கிற இத்தனை பெண்களில் யாருமே உங்கள் மனத்தைக் கவர்ந்த தில்லேயா? வெகு நாட்களாகக் கேட்கணும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இன்று ஞானு கோடி காட்டி விட்டாள்....!''

அவர் உதட்டைப் பிதுக்கி ஓர் அரைச் சிரிப்புச் சிரித்தார். பஸ் வரும் வழியையே சிறிது நேரம் பார்த்தார். மரத்தின் மேல் சிக்கிக் கொண்டிருந்த குருவியைப் பார்த்தார்.

''நான் கேட்டது தப்பானுல் மன்னித்துக் கொள்ளுங்கள்....!''

''நீ கேட்டது சரி.... ரொம்ப கரெக்ட், மூர்த்தி! ஞானுவை உனக்குப் பிடித்திருக்கோ? வட்டம் போடாமல் மனத்தில் பட்டதைச் சொல்.... நான் மனசுக்குள் ஒரு திட்டம் வைத்திருக்கேன்......!''

பஸ் வந்து நின்றது. எப்படியோ காலூன்றிக் கொண்டார்கள்..... பஸ் ஓட்டத்தில் பிறந்த இரைச்சலேயும் மீறி மூர்த்தி அவரிடம் பேசலானுன். அவன் பேச்சைக் கேட்கக் கேட்க, அவருக்குத் தலே சுற்றியது. கச்சேரி ரோட்டில் இறங்கி நடந்த போது இருவருக்கும் சிந்தனைக்கு நிறைய விஷயம் இருந்தது.

''நான் சொல்லிவிட்டேன், ஸார்.... எனக்கு உறவினர் என்று யாருமில்லே. எனக்கு நீங்கள்தான் 'கார்டியன்' என்று,




''என்ன ஆத்தா, நீ மாமாங்கத்துக்கு மாமாங்கம் கும்பகோணம் போறியே, இந்த மாமாங்கத்துக்கு போகாட்டி என்ன?''

''ஏப்பச்சி, நீ மட்டும் 40 வருஷமா வெத்திலேயோட அசோகா பாக்கையே போட்டுக்கினு இருக்கியே, உனக்கு மட்டும் அலுப்பு தட்டலே?''



''யோவ்! உனக்கு இன்னிக்கு விடுதலை. வா! வெளியே போவியாம்!''
''கஷ்டப்பட்டு கன்னம் வச்சேனுங்க. இது வழியாலே வெளியே போயிடறேனுங்க!''

செய்வீர்களா?'' அவன் குரல் தாழ்ந்து, புதுமையாக ஒலித்தது.

''கட்டாயம் செய்கிறேன், மூர்த்தி..... எனக்குச் சந்தோஷம்.... ஆனால் நான் வேறு விதமாக எண்ணிக் கொண்டிருந்தேன். ஜானுவுக்கு அதிர்ஷ்டம் இல்லை.... உனக்கும் தான்......'' என்று, நெற்றியைத் தேய்த்து விட்டுக் கொண்டார்.

தலைக்கு மேல் மின்சார விசிறி ஊமை முனகலாய்ச் சுற்றிக் கொண்டிருந்தது. மேஜை நெடுக அவர் பார்த்த, பார்க்க வேண்டிய பைல்கள். யந்திரம் மாதிரி இரண்டரை மணி நேரம் உழைத்தாயிற்று. அவர் நிமிர்ந்து பார்த்தார். வரிசையாய், எதிரெதிராய், அவருக்குக் கீழே உழைக்கும் சிப்பந்திகள். எல்லாருக்கும் இளம் வயசு.

மூர்த்தியும் கமலாவும் எதிரெதிரே உட்கார்ந்திருந்தார்கள் மூர்த்தி கண்ணில் பட்டதும், ''இவனா? இவனா இப்படி?'' என்று தன்னையே கேட்டுக் கொண்டார். இயற்கை நியதிதானே? ஆனாலும் அவரால் ஜீரணிக்க முடியவில்லை...... மூர்த்தியோடே எப்பவும் இருந்தும் பழகியும் இதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவனிடம் ஏமாந்த உணர்வுதான் எல்லா எண்ணங்களையும் மீறி எழுந்தது.

மூர்த்தி கமலாவைக் காதலிக்கிறானாம். அவர் கண்ணெதிரே — அவர் மேற்பார்வையில் தானா இத்தனை நாள் இது நடந்திருக்கிறது? அவருக்குத் தெரியவில்லை!

கமலாவைப் பார்த்தார். தன் மேலேயே நம்பிக்கையில்லாத, எடுத்ததற்கெல்லாம் அவரிடம் ஓடி வரும் கமலா, இதில் எப்படித் துணிந்தாள்? அவரையும் மீறி மனத்துள் ஜானுவின் நினைவு, எழுந்தது. ஜானு இப்படிச் செய்யத் துணிவானோ?

திடீரென ஓர் அலுப்பு. அத்தனை நாட்கள் அவர் அனுபவித்தறியாத அலுப்பு அவரை ஆட்கொண்டது. எங்கோ பிடி வழுக்கிய உணர்வில் மனசு நடுங்கியது. அம்மாவின் நினைவு காரணமில்லாமல் எழுந்தது. என்னைப் பார்த்தால், அம்மா சொன்னது ஒரு விதத்தில் சரிதான். இப்படி யாருக்காக அவர் உழைக்க வேண்டும்? ஏற்கனவே சம்பாதித்த பணம், அவரே பிரமிக்கும் அளவுக்குப் பாங்கியில் வளர்ந்து விட்டது. அத்தனையும் யாருக்கு? அம்மா, திருச்சியில் பெரிய குடும்பத்தில் உழலும் தம்பி, ஜானு, ருக்கு என்று ஒவ்வொருவராய் நினைவில் வலம் வந்தார்கள். மாதா மாதம் அம்மாவின் செலவுக்கென்று தம்பிக்குப் பணம் அனுப்பிக் கொண்டுதான் வருகிறார். ஆனால் அம்மாவுக்கு அது தெரியாது. ஜானுவைக் கல்லூரியில் சேர்த்ததும் அவர்தான். ருக்குவுக்கு ஏதாவது கையைப் பிடிக்கும் போது சந்துவை அவர் அறைக்கு அனுப்பிப் பணம் வாங்கிக் கொள்ளுகிறாள். ஆனால் இதற்காகத்தான் அவர்கள் அவரிடம் பாசம் கொண்டிருக்கிறார்களோ? அவர் தம்மையே வெறுத்துக் கொண்டார்.

கமலா அவரைப் பார்த்து, பார்த்த விழியே தலை குனிந்து விரலால் மேஜையில் கோலம் போடலானாள். முகத்தில் செம்மை கூடிற்று.

இடைவேளையின்போது மூர்த்தி அவரிடம் வந்தான்.

''ஸார்! என்னிடம் கோபமா? அளவுக்கு மீறி உரிமை கொண்டாடி விட்டேன் என்று நினைக்கிறீர்களா?'' என்று அடிக் குரலில் கேட்டான்.

''அப்படி ஒன்றும் இல்லை, மூர்த்தி! நான் எத்தனை பெரிய குருடன் என்று எண்ணிக் கொள்ளுகிறேன்.''

''அவள் பயப்படுகிறாள், ஸார்! இந்த 'ஸஸ்பென்ஸ்' உடைந்தால்தான் மனசு ஒரு நிலைப்படும் போல் இருக்கு.....''

''நீ எப்போ சொல்லுகிறாயோ, அப்பவே போய் அவள் அப்பாவைப் பார்த்துவிடுகிறேன். என்னிக்குப் போகணும்?''

''நீங்கள் இன்றே வருவீர்கள் என்று அவளிடம் சொல்லி அனுப்பினேன். உங்கள் அம்மா வரப் போவது தெரியாதே?''

''பரவாயில்லை. கமலாவிடம் விலாசம் வாங்கிக் கொடு. முதலில் இதை முடித்து விட்டு அப்புறம் அம்மாவைப் பார்க்கப்போகிறேன்.''

மூர்த்தி கண்களில் நன்றி பொங்க அவரைப் பார்த்தான்.

இடைவேளைக்குப் பிறகு பியூனை அனுப்பிப் பாங்கியிலிருந்து இருநூறு ரூபாய் எடுத்துக் கொண்டார். வேலையில் ஆழ்ந்து கொஞ்ச நேரம் பைல்களில் கொக்கியும் கிறலுமாகப் போட்டு அனுப்பிக் கொண்டிருந்தார்...... அவருக்குள் ஒரு பரபரப்பு எழுந்து உடல் முழுதும் வியாபித்தது. ஏதோ அதிசயம் நிகழப்போகிற உணர்வில் உடம்பு நிலை கொள்ளாமல் தவித்தது. தலை இலேசாக வலிக்க ஆரம்பித்தது.

மூன்று மணிக்குக் கமலா ஏதோ ஒரு பைலை எடுத்துக் கொண்டு அவரிடம் வந்தாள். அதில் கண்களை ஊன்றிக் கொண்டே அவர், ''உன் வீட்டுக்குப் போகிறேன், இப்போ.....!'' என்றார். அவள் பதில்

சொல்லவில்லை. அவர் நிமிர்ந்தபோது கமலாவின் விழிகள் நீரில் பளபளத்தன.

''இது என்ன இப்போ?'' என்றார் அவர், மனக் குழப்பத்துடன். அவள் பதில் பேசாமல் அவர் கையெழுத்திட்ட பைலை எடுத்துக் கொண்டு தன் இடத்துக்குப் போய் அமர்ந்தாள். ஏனோ, அவள் செய்கை அவர் மனத்துக்கு ஒரு நிம்மதியை அளித்தது.

மூன்றரை மணிக்கு டிராயரைப் பூட்டிக் கொண்டு மானேஜரின் அறையை நோக்கி நடந்தார். மானேஜர் சமீபத்தில் கல்கத்தாவிலிருந்து மாற்றலாகி வந்த வெள்ளைக்கார இளைஞன். அவரைவிடப் பத்து வயது குறைவாகத்தான் இருக்கும்.

''வாருங்கள், மிஸ்டர் ஆத்மநாதன்....'' என்று அவர் பெயரை உச்சரிக்க முயன்று, நாற்காலியைக் காட்டினான் அவன்.

''எனக்குப் பர்மிஷன் வேண்டும்.... உடல் நலம் இல்லை.....!''

''ஐ ஆம் ஸாரி.... இந்த வயசில் உடம்பை ரொம்ப ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளணும், நீங்கள்....'' என்று ஆங்கிலத்தில் புத்திமதி கூறி, அனுமதி கொடுத்தான். ஏர் கண்டிஷன் அறையிலிருந்து வெளியே வந்த போது, உண்மையாகவே காய்ச்சல் வந்துவிட்டாற்போல் உடம்பு வலித்தது; நெற்றிப் பொட்டில் நரம்பு அடிக்க ஆரம்பித்தது. மானேஜர் தன் வயதைப் பற்றி அவ்வளவு பேசியிருக்க வேண்டாம் என்று எரிச்சல் உணர்வு மனம் நெடுக வியாபித்தது. தன் இடத்துக்கு வந்தவர், கோட்டைக் கையில் எடுத்துக் கொண்டு மூர்த்தியிருந்த பக்கம் பார்த்தார். அவனிடம் தலையசைத்துவிட்டு ஆபீஸிலிருந்து வெளியேறி நடந்தார்.

நேதாஜி போஸ் ரோடு உயிர் பெற்றுக் கொண்டிருந்தது. பஸ்களும் கார்களும், 'விர் விர்' என்று ஓடின. ஹைகோர்ட் பக்கம் பட்டணம் பார்க்க வந்தவர்களின் கும்பல். உஷ்ணம் தணிந்த இதமான வெய்யிலில் பிளாட்பாரம் நெடுகக் கடைகள் முளைத்துக் கொண்டிருந்தன. அவர் எல்லாவற்றையும் பார்த்தும் பார்க்காதவராய் நடந்தார். கிழக்கே ஹார்பர் பக்கத்திலிருந்து 'பூம்.பூம்' என்று ஒலி விடாமல் கேட்டுக் கொண்டிருந்தது. மனம் பம்பரமாய்ச் சுழல, கால்கள் அவரை அறியாமல் தாமாக இயங்கலாயின. பீச் ரோடில் திரும்பி நடக்கலானார். எத்தனை நேரம் என்று கணக்குத் தெரியவில்லை..... சூழலின் நினைவு வந்து அவர் தம் நிலைக்கு மீண்டபோது செகரடேரியட்டைத் தாண்டி வந்து விட்டது தெரிந்தது.

மணலைத் தாண்டின பார்வையில் கடல், உறங்கும் வெறியனைப் போல் அமைதியாய்த் தோன்ற, நெளியும் வெள்ளிப் பாம்புகளாய் அலைகள் எழுந்து மடிந்தன. வானம் ஒரே நீலமாய், மேகக் கலப்பேயின்றித் தொடுவானில் கடலில் ஐக்கியமாயிற்று. சிறு சிறுவென்ற காற்று முகத்தைத் தடவ, அப்படியே நின்றார். தார் ரோட்டில் கார்களின் ஓட்டமும், அப்பால் சிவப்புக் கட்டடங்களும், அவர் ஒதுக்கிவிட்டு வந்த வேலைகளும் உவமையாகத் தெரிந்தது.

அவருக்கு மட்டும் கேட்ட பேரோசையுடன் மனப் பெட்டி திறந்து கொண்டது. உலோபியின் பொக்கிஷம்.... தம்மையே இழந்தவராய் நினைவுகளில் மூழ்கினார்.

''வேதா.... நீ இப்போ எங்கே இருக்கிறாய்?''

''அதுதெரிந்து இப்போ என்ன ஆகணும்?''

கண்முன்னே அவள் முகமும் கண்களும் பன்னீர் மழை போன்ற சிரிப்பும், சிரிக்கையில் தெரியும் மேல் வரிசைத் தெற்றிப் பல்லும் முழுசாகத் தெரிந்தன. நெஞ்சு வலித்தது. இருபத்தைந்து வருஷங்கள்.... அப்போ கிராமமாயிருந்த ராமநகர் இப்போது நகரசபை ஆயாச்சு. பாட்டியின் வீடும், தோட்டமும் மஞ்சள் கொன்றை மரங்களும் அவர் கண்ணில் மறுபிறவி எடுத்தன.

அப்போது அவர் இண்டர்மீடியட்டில் இரண்டாவது தடவை தோற்றுவிட்டு, மார்ச்



பரீட்சைக்குத் தயார்ப்படுத்திக் கொள்ளக் கிராமத்துக்குப் போனார். வேதம் தன் வயதைத் தானே உணர ஆரம்பிக்கும் வயசு. அவருக்குப் படிப்பில் மனம் செல்லவில்லை. பாட்டிக்குக்கூட ஒரு மாதிரி அவர் மன ஓட்டம் தெரிந்திருந்தது. ''நீ பரீட்சை எழுதற வழியைப் பாரடா. அவள் இங்கேதான் இருக்கப் போறாள். நான் உன் அப்பாவிடம் சொல்றேன்......!'' என்றுகூடச் சொன்னாள்.

இருவர் மனசும் எப்படியோ ஒன்றி விட்டன.

''வேதம்..... வேதா.....!'' என்று மனசுக்குள்ளே உருகினார்.

''அம்மா.... மூர்த்தி.... இது தெரிந்தால் என்னைப் பற்றி என்ன நினைப்பீர்கள்?''

....மூன்று மாதங்கள் நிமிஷமாய் ஓடி விட்டன. ''உன்னைத் தவிர யாரையும் மனத்தால் நினைக்க மாட்டேன்'' என்று அவளிடம் சொன்னது ஆச்சரியம் இல்லை..... அதை இன்று வரை காப்பாற்ற முடிகிறதே! அதுதான் அதிசயம்!

ஆனால் நினைத்தது நடக்கவில்லை. பரீட்சைக்கு இரண்டு நாட்கள் முன்பே அப்பா



"பட்டு மாமி வீட்டிலிருந்து பட்டு ரோஜாச் செடி ஒன்று கொண்டு வந்து நட்டேனே! அது பட்டுவிட்டதடி!"

"அடடா! யார் கண் பட்டதோ?"

---

வுக்கு உடம்பு நன்றாயில்லை என்று தந்தி வந்து பாட்டியோடே கிராமத்தை விட்டுப் புறப் பட்டார். இவர் மீண்டும் பரீட்சை எழுதவே யில்லை. அப்பாவின் காலம் முடிந்து விட்டது. அப்பாவிடம் வேதத்தைப் பற்றிச் சொல்வ தாகச் சொன்ன பாட்டியும் போய்ச் சேர்ந் தாள். அப்போது அதைப்பற்றி எண்ணக்கூட அவருக்குத் தோன்றவில்லை. குடும்ப பாரத் தின் கனம் முழுவதையும் உணர்ந்த பிரமிப் பால் திணறிக் கொண்டிருந்தார். உலக யுத்தம் வந்தது. நிலக் குத்தகை சம்பந்த மாய் அவர் மீண்டும் கிராமத்துக்குப் போன போது வேதாவின் குடும்பமே அங்கு இல்லை. ஏமாற்றத்தை விழுங்கிக் கொள்ளவே எத் தனையோ நாட்களாயின.

காலம் எனும் மணலில் நினைவுகள் புதைந்து போயின. அப்படித்தான் அவர் நினைத்தார். ருக்குவின் கலியாணம் நடந்து, அவர் கல்யாணத்தைப் பற்றி அம்மா பேச ஆரம்பித்ததும்தான், கம் நிலை அவருக்குப் புரிந்தது. அவளை மறக்க முடியவில்லை. மன சுக்குள் அவளை ஏற்றுக் கொண்டவுடன் கதவு மூடிக் கொண்டு விட்டது.... அந்த உண்மை அவருக்கே ஆச்சரியமாகத் தோன்றவே, அதை அம்மாவிடம் சொல்லக்கூடத் தோன்ற வில்லை......

அவர் பித்தனைப் போல் கடலை வெறித்துக் கொண்டு வெகு நேரம் நின்றார். பிறகு மெதுவாக நடக்கலானார்; நிழல் நீண்டு விட்டது. பைக்ராப்ட்ஸ் ரோடில் திரும்பி ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்து காப்பி சாப் பிட்டார். மணி ஐந்தை எட்டிக் கொண் டிருந்தது. மூர்த்தி கொடுத்த விலாசத்தைப் பார்த்தார். கமலாவின் வீடு ராயப்பேட்டை யில் இருந்தது.

நெற்றிப் பொட்டுத் தெறித்தது. இனி நடக்க முடியாது போல் தோன்றியது. ஒரு டாக்ஸியை நிறுத்தி ஏறிக் கொண்டார்.

லாயிட்ஸ் ரோடு எப்போது வந்தது என்று அவருக்குத் தெரியாது. டிரைவர் அவர் தோளைத் தொட்டு உலுப்பியதும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டார். மனசு நிலைப்பட்டு, தன்னையே நிதானித்துக் கொண்டு விட்டு வாசல் வரை போனார். தூங்கின தூக்கத்தில் பழையனவும், நிகழ்வனவும் தெளிவற்ற பொறிகளாய்த் தட்டாமாலை ஆடின.....

சென்னை நாகரிகத்தையொட்டி வாசற் கதவு சாத்தியே இருந்தது. சுவருக்கு வண்ண மும், கதவுகளுக்குப் புது வார்னிஷுமாய், "கமலாவின் அப்பா செயலுள்ளவர்" என்கிற மாதிரியிருந்தது. ஆனால் வாடகை வீடோ, என்னவோ....? காலிங் பெல்லை அழுத்தினார்.

ஒரு நிமிஷம் கழித்துக் கதவு திறந்தது. மில் வேஷ்டியும் ஸில்க் சட்டையுமாய் ஒருவர், "யாரு?" என்று கேட்டு, அவரையே பார்த் தார். உடலில் தேவைக்கு மீறின சதை கொத்துக் கொத்தாக ஆடிற்று. "வா....." என்று அழைக்கவில்லை. அது இவருக்கும் உறைத்தது.

என்ன சொல்லிப் பேச்சை ஆரம்பிப்பது, சுய அறிமுகம் பண்ணிக் கொள்ளணுமா, இல்லையா என்று அவரால் தீர்மானிக்க முடிய வில்லை.

"யாரு?"

"நான்... கம்பெனியிலிருந்து வரேன்" என்று பேரைச் சொன்னார். பிறகு எப்படியோ சுற்றி வளைத்துத் தான்வந்த காரியத்தை அவரிடம் விளக்கினார். அவர் 'வேதா' என்று குரல் கொடுத்தார்.

அறை வாசலில் நிழல் கவிந்தது. தலை யைக் குனிந்து கொண்டார்.

அடுத்தகணம்.... பூகம்பம் நிகழ்ந்தது..... அவர் நிமிர்ந்து பார்த்தார்.

"அவளா.... அவளா? வேதா?.... இப்படிக் கதையில்கூட நிகழாது....."

தனக்கே சமாதானமாக அழுகையை அடக்கிக் கொள்கிற போது, கமலாவின் அப்பா, "வேதா.... கமலாவின் ஆபீஸி லிருந்து இவர் வந்திருக்கார்" என்றார்.

ஆத்மா பார்த்துக் கொண்டேயிருந்தார். கண் குருடாகி மீண்டும் பிரகாசமாகியது. அவளும் பார்த்தாள் ஆஹா.....!

அவள் பார்வை சாதாரணமாய் அவரைத் தாண்டிக் கொண்டு வழுக்கியது. முகத்தில் சிறு சலனம்கூட இல்லை. "இந்த முகத்தைப் பார்த்திருக்கிறேன்" என்கிற லவலேசமான ஐயம்கூட இல்லை. நிஷ்களங்கமான, புது மனுஷனைப் பார்த்து நாணமுடன் விலகுகிற பார்வை! அவர் நெஞ்சுள் ஒரு கேவல் எழும்பிக் கழுத்தை இறுக்கியது.....

ஆத்மா தெருவில் இறங்கி நடந்தார். காதில் ஓர் இரைச்சல் கிளம்பி, 'ஓ'வென்று மண்டையைக் குடைந்தது..... "அட! இது... இவளுக்கா ஓர் ஆயுள் முழுக்க நான் இப்படி ஆனேன்!"

கண்களைத் தொட்டுப் பார்த்துக் கொண் டார். கண்ணீர் வரவில்லை. ஞானு குரல் உயர்த்தி அவரைப் பார்த்து நகைக்கிறது மட்டும் கேட்டது.

மேற்கு வானம் ரத்தக் குழம்பாய்ச் சிவந்து வந்தது. தெரு முனையில் அவர் நிழல் அவ ருக்கு முன்னே போய் விட்டது!



# அல்டாப் அப்பாசாமி

குறும்பன்

''அப்பாசாமி! இந்த ஊருக்கு நீ வந்து இன்றோடு இருபது நாள் முடிந்து இருபத்தோராவது நாள்தானே தொடக்கம்?'' என்று கேட்டார் குப்பாமணி.

''அட! படு கணக்காகச் சொல்லிவிட்டீர்களே, மாமா! எனக்குக்கூட இந்த நாட்கணக்கு நினைவிராது போலிருக்கே!''

''நேற்று மாடி வீட்டு மல்லிகார்ஜுனத்தின் கிட்டப் பேசிக் கொண்டிருந்தேன்...''

''ஓகோ! அவர் சொல்லிவிட்டாரா? அதனால் என்ன? பரவாயில்லே, எனக்கும் வேலையைக் குறைத்து விட்டார். மனுஷ்யான்னு பாருங்கோ, இப்படித்தான் ஒத்தாசையாயிருக்கணும். நான் சொல்ல வந்தது என்னென்னு, இன்னிக்கு உங்கள் முறை. இதே தடா இது, பகாசுரன் கணக்கா இந்தப் பயல் முறை வைக்கிறானேன்னு எண்ணிக்காதீங்கோ! உங்கள் கைராசியைப் பார்க்கப் போகிறேன். இந்த 'விடு வெட்டி'க்கு வேலை கிடைச்சுடணும்னு வேண்டிக்கொண்டு ஒரு பதினைஞ்சு பைசாவை இப்படித் தள்ளுங்கோ !'' என்றான் அப்பாசாமி.

பிரசவத்துக்குப் பின் ஒரு நல்ல நாளில் தன் தமக்கையைப் புக்ககத்துக்குக் கொண்டு விட வந்தவன் அப்பாசாமி. குப்பாமணி சொன்னது போல அந்த இருபத்தோரு நாளும் திருவாரூர்த் தேராக நிலைத்து விட்டான். அதுமட்டுமா? அன்றாடம் யாருடைய தலையையாவது தடவிப் பதினைந்து பைசா பெற்று ஏதாவது ஒரு வேலைக்கு விண்ணப்பம் செய்து வந்தான்.

அவன் தமக்கையோ மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் தவித்தாள்.

இப்படி யிருக்கும்போதுதான் ஒரு நாள் அவனைப் பிடித்த நல்ல காலமோ அல்லது அப்பாசாமியின் அதிர்ஷ்டச் சக்கரம்தான் சுழன்றதோ, அந்த ஊரையே அதிசயத்தில் ஆழ்த்தும் கடிதம் ஒன்று வந்தது! ஆம்; அவனுக்கு உத்தியோகம் கிடைத்து விட்டது.

''என் தாத்தா! இப்படித் திடுதிப்பென்று வேலை ஒப்புக்கொள்ளச் சொல்லுகிறானே!- மூணு நாளைக்குள். பட்டணம் போறதுன்னு அதுக்கு வேண்டிய முஸ்தீப்போடு போக வேண்டாமோ?'' என்று எதிர் வீட்டுக் கிழவரிடம் சந்தேகம் கேட்டாள்.

''அது மெய்தான். இருந்தாலும் அவன் சொல்லுகிற நாளுக்குள் போய் உத்தியோகத்தை ஒப்புக்கொண்டு விடுகிறதுதான் நல்லது. அப்புறம் லீவு போட்டுவிட்டுச் சாவகாசமாக வந்து...''

''நூற்றிலொரு வார்த்தை! இதற்குத்தான் பெரியவர்களிடம் யோசனை கேட்க வேண்டும் என்கிறது. மூன்று நாட்களுக்குள் வேலை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று சொல்லி யிருக்கானே ஒழிய அப்புறம் லீவு போடக்கூடாதுன்னு எங்கே சொல்லி யிருக்கிறான்? இன்னிக்கு நல்ல நாளா இருக்கு. ராத்திரியே புறப்படட்டுமா?''

''பேஷா!'' என்றார் கிழவர்.

''ஏன் அப்பாசாமி! நீ வேலையை ஒப்புக்கொண்ட பின் லீவு போட்டுவிட்டுச் சாமான் செட்டை எடுத்துக் கொண்டு போக இந்தப் பக்கம் வருவியோ இல்லியோ?'' — கிழவரின் மனைவி கிழவி கேட்டாள்.

''எதற்குக் கேட்கிறேள்? கட்டாயம் வருவேன். அதுவும் இந்த ஊருக்கு வந்துட்டுத்தான் எங்க ஊருக்கே போவேன்!''

''ஒன்னுமில்லே! இவர் உடம்புக்கு ஹார்லிக்ஸ் வாங்கிக் கொடுத்தால் தேவலை.''

''பூ! இவ்வளவுதானே? கட்டாயம் வாங்கிண்டு வரேன்!'' என்றான் அப்பாசாமி.

சிலந்தி வலையிலே தானாக வலியப் போய் விழும் பூச்சிகளும் உண்டு; சிலந்தியாக வேட்டையாடும் உயிரினங்களும் உண்டு. முதல் இனத்தைச் சேர்ந்த பாட்டி தானே வலியப் பத்து ரூபாயை எடுத்துக் கொடுத்தாள்.

அன்று மாலை அப்பாசாமி அந்த ஊரைவிட்டுப் புறப்பட்டபொழுது அவன் சட்டைப் பை மிதப்பாகவே இருந்தது. கிளாக்ஸோ, சர்க்கரை, சம்பா கோதுமை, ரவா, மைதா என்று அந்த ஊரில் கிடைக்காத பொருள்களையெல்லாம் வாங்கி வருமாறு அவ்வூரில் உள்ள பலர் கொடுத்த பணம்தான் அது.

ஆனால்...

அவன் நாடிப்போன 'அதிசயம் எண்டர்பிரைஸ்' என்னும் கம்பெனியை ஆறு நாட்கள் தேடியும் அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஏழாவது நாள் காலையில் ரங்கன் என்னும் தன் நண்பனைச் சந்தித்தான். 'அதிசயம் எண்டர்பிரைஸை'ப் பற்றி அவனை விசாரிக்கலாம் என்று எண்ணிய அப்பாசாமியை ரங்கன் வாய் திறக்க விடவில்லை.

''அப்பனே, அப்பாசாமி! இந்தக் கைதான் அப்பா அ தி ச ய த் தி லு ம் அதிசயமாக உனக்கு 'அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர்' 'டைப்' அடித்து அனுப்பியது. அதற்குள் கம்பெனியின் வண்டவாளங்கள் அம்பலமாகி விடவே, போலீசார் படையெடுத்துவிட்டார்கள். தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று நான் வெளி வந்துவிட்டேன். வா, இனி ஒருவருக்கிருவராக வேலை தேடி அலைவோம்!'' என்றான்.

ரங்கன் கூறியதில் கற்பனைக் கலப்பு தாராளமாகவே இருந்தது என்றாலும் அதற்கு ஈடாக அவன் கூறாமல் விட்ட செய்தியும் ஒன்றிருந்தது. 'தம்பி அப்பாசாமி இங்கே என் புக்ககத்தில் அல்டாப்பாக டேரா போட்டுவிட்டான். எனக்கென்னவோ இது அல்பமாகத் தோன்றுகிறது. இவனை இங்கிருந்து கிளப்ப வழி தேட மாட்டாயா?' என்று அப்பாசாமியின் தமக்கை தனக்கு எழுதியிருந்த கடிதத்தைப் பற்றி ரங்கன் மூச்சுக்கூட விடவில்லை!



## தவணை ஏற்பாடு:

## சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்

மூலம் சுலபமான மாதத் தவணைகளில் வாங்கலாம்



முழு விவரங்களுக்கு
அன்பு கூர்ந்து அணுகுக:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்,**
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர் - திருவனந்தபுரம்

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்** மதராஸ் - பங்களூர் - செகந்திராபாத் (A.P.)




sf-4272a

(பேராசிரியர் நீலகண்டன் போர்ஷனைச் சேர்ந்த வராந்தா. நீலா ஒரு நாற்காலியில் அமர்ந்து கையிலிருக்கும் புத்தகத்தில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறாள். ரமானந்த சாட்டர்ஜி எட்டிப் பார்க்கிறார்.)

நீலா: வாருங்கள், மிஸ்டர் சாட்டர்ஜி! உட்காருங்களேன்.

சாட்டர்ஜி: குட்மார்னிங்! அப்பா இல்லையா அம்மா?

நீலா: ஸ்டேஷனுக்குப் போயிருக்கிறார். சிநேகிதர் ஒருவர் மதுரையிலிருந்து வந்து பம்பாய் போகிறாராம்.

சாட்டர்ஜி: அப்படியா?... நான்கூட சென்ட்ரலுக்குப் போகணும். கல்கத்தா வண்டி கொஞ்சம் 'லேட்'டாக வருகிறது என்று சொன்னார்கள்.

நீலா: யார் சார், வருகிறார்கள்?

சாட்டர்ஜி: என் மனைவிதான்! முதலில் ஒரு தடவை புறப்படுவதாகச் சொல்லிவிட்டுத் திடீர் என்று தந்தி கொடுத்துப் புரோகிராமை மாற்றி விட்டாள். இன்றைக்கு என்ன ஆகப் போகிறதோ?

(வேணு பத்திரிகையுடன் வருகிறான்.)

வேணு: குட்மார்னிங் மிஸ்டர் சாட்டர்ஜி! என்ன புரோகிராமைப் பற்றிச் சொல்கிறீர்கள்?

சாட்டர்ஜி: கமான், மிஸ்டர் வேணு! டொமெஸ்டிக் டிராமா புரோகிராம்னு வச்சுக்குங்களேன்!....

வேணு: தமிழ் சினிமாக்களிலேதான் 'இது ஒரு குடும்பச் சித்திரம்' என்று போடுவார்கள். படத்திலே 'குடும்ப வளர்ச்சி'க்கான எந்த அம்சமும் மருந்துக்குக்கூட இருக்காது. ஆனால் பார்ப்பவர்கள் மாத்திரம் குடும்பம் குடும்பமாகப் போய்ப் படம் எடுத்தவரின் பண வளர்ச்சிக்கு உதவுவார்கள்! வங்காளத்திலும் இந்த நிலேதானு?

நீலா: அண்ணு, இப்போது நடைமுறையிலிருக்கும் பாலிசி தெரியாமே குடும்ப வளர்ச்சிக்குச் சினிமா உதவலேன்னு குறைப்பட்டுக் கொள்கிறாயே!

வேணு: குடும்பப் பண்புகளை வளர்க்கும் அம்சங்களைச் சொல்கிறேன். குடும்ப நபர்களை அதிகப்படுத்துகிற அம்சங்களை நான் குறிப்பிடவில்லை.

(சாட்டர்ஜி படபடவென்று சிரிக்கிறார்.)

நீலா: என்ன சார், சிரிக்கிறீங்க?

சாட்டர்ஜி: சிரிக்காமல் வேறு என்னம்மா செய்வது? நீங்க இரண்டு பேரும் இந்த மாதிரி சப்ஜெக்டுகளை 'டிஸ்கஸ்' பண்ண ஆரம்பிச்சுட்டீங்களே!.... குடும்ப வாழ்க்கை என்கிற ரயிலில் ஏற நீங்கள் இன்னும் பிளாட்பாரத்துக்கே வரவில்லை!

# ஒருமைப்பாடு வீடு





நீலா: நீங்க இன்றைக்கு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போக இருப்பதாலே உங்கள் உபமானங்களிலெல்லாம் கூட ரயில் ஓடிகிட்டுப் போயிருக்கிறது?

சாட்டர்ஜி: நீங்க டிஸ்கஸ் பண்ண ஆரம்பித்த விஷயங்களிலே என் பெண் விராஜராணி பெரிய அதாரிட்டி.

வேணு: குடும்பக் கட்டுப்பாடு அதிகாரியாக எங்கேயாவது பணி செய்கிறார்களா?

சாட்டர்ஜி: உன் மாதிரித்தானம்மா அவளும் ஒரு காலத்திலே சதா கதைப் புத்தகங்களைக் கையிலே வைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் இப்போது தன்னுடைய ஆறு குழந்தைகளையும் தன்னுடைய இரண்டு கைகளிலும்....

நீலா (திகைப்புடன்): வாட்! நீங்க ஸிக்ஸ் கிராண்ட் ஃபாதர்ஸா? உங்களைப் பார்த்தா அப்படித் தெரியலியே!

வேணு: (சிரிப்பை அடக்கிக் கொண்டு): நீலா! அவர் ஒரே தாத்தாதான். பேரக் குழந்தைகள்தான் ஆறு!

*நீலா:* போ, அண்ணு! ஆறு குழந்தைகளுக்குத் தாத்தாவான்னு கேட்க நினைத்ததைத்தான் வாய் தவறி அப்படிச் சொல்லி விட்டேன்.



*சாட்டர்ஜி:* ஏனம்மா, நீலா! பேராசிரியர் ஜோக் ஒன்று கேட்டிருக்கிறுயோ?

*வேணு:* ஓஹோஹோ! நம்ப அப்பா அவிழ்க்கிற ஜோக்குகளையெல்லாம் நம்ப சாட்டர்ஜி சாரும் பிடித்துக் கொண்டு விட்டார் போலயிருக்கு?

*சாட்டர்ஜி:* உங்க வீட்டிலே உட்கார்ந்து உங்கள் அப்பா ஜோக்கையேவா காப்பியடிப்பேன்? இது வேறே பேராசிரியர் தாத்தாவோடது! அந்தப் பேராசிரியருக்கு ஒரே பெண். மகளைப் பிரசவ விடுதியில் சேர்த்து விட்டு, உள்ளிருந்து நல்ல செய்தியை நர்ஸ் கொண்டு வர வேண்டுமே என்று கவலையுடன் காத்துக் கொண்டிருந்தார். கதவைத் திறந்து கொண்டு மகிழ்ச்சி நிறைந்த முகத்துடன் நர்ஸ் எட்டிப் பார்த்து, 'குழந்தை பிறந்து விட்டது' என்ருள். பேராசிரியருக்கு உற்சாகம் தாங்கவில்லை. அந்த நர்ஸோ, பிறந்த குழந்தை ஆணு பெண்ணு என்று சொல்லவில்லை. பதற்றத்தில் அவர், 'நான் தாத்தாவா? அல்லது பாட்டியா?' என்ருர்.

*வேணு:* பிறந்திருப்பது பேரனு பேத்தியா என்று கேட்க நினைத்தவர் பாட்டியா தாத்தாவா என்று ஒரு போடு போட்டாராக்கும்!

**(மாடிப்படி வழியாகக் கன்யாலால் ஏறுகிறுர்.)**

*வேணு:* மிஸ்டர் கன்யாலால்!.... என்ன ஒரு தினுசா தனக்குத்தானே பேசிக் கொண்டு போகிறீர்கள்?.... இங்கே வந்து எங்ககூடப் பேசலாம்......

**(கன்யாலால் வராந்தாவின் கோடியில் வந்து எட்டிப் பார்க்கிருர். அப்போதுதான் அவர் சட்டையின் முன்புறத்திலும் பின்புறத்திலும் ஏதோ காகிதத் துண்டுகள் ஒட்டப்பட்டிருப்பதை மற்றவர் கவனிக்கிருர். கன்யாலால் அவை களைக் கிழிக்க முயற்சி செய்து கொண்டே பேசுகிருர்.)**

*கன்யாலால்:* வேணுஜீ! யாராவது கூட்டமாக உட்கார்ந்திருந்தாலோ, நின்று கொண்டிருந்தாலோ அந்தக் குருப்பைப் பார்த்து நான் பயப்படும் நிலையில் இருக்கிறேன்!

*சாட்டர்ஜி:* கன்யாலால்ஜீ! என்ன விஷயம்?

*கன்யாலால்:* என்ன விஷயமா? பெரிய விஷயம்! நான் திடீர்னு பெரிய மனுஷனுயிட்டேன். எனக்கு எத்தனை மதிப்பு பாருங்க! 'கன்யாலால் ஒழிக'ன்னு எழுதி என் மேலேயே நாலு பொடிப் பசங்க ஒட்டிட்டாங்க......

*வேணு (கிட்டே வந்து பார்த்து):* மிஸ்டர் கன்யாலால்!.... உங்களை யாரும் ஒழியச் சொல்லலே! கன்னையாங்கிறவரைத்தான் ஒழியச் சொல்ருங்க! இந்த வட்டாரத்திலே ஒரு வியாபாரப் போட்டி நடக்குது. கங்கையாங்கிறவர் ரொம்ப நாளா இங்கே மளிகைக் கடை நடத்தருர். அவருக்குப் போட்டியாகக் கன்னையாங்கிறவர் புதிசாக் கடை போட்டார்! கங்கையா அனுதாபிகள் கன்னையாவை ஒழிக்க மும்முரமாக இருக்காங்க......! நீங்க எங்கே அங்கே போய் மாட்டிக்கிட்டீங்க.....?



**கோமதி சுவாமிநாதன்**

*கன்யாலால்:* நல்ல வேளை!.... நான்தான் எழுத்துக்கூட்டிக் கன்னையாவைக் கன்யாலால்னு படிச்சுப்புட்டேன் போலிருக்கு....! இரண்டு மூணு பொடிப் பசங்களாகச் சுவரிலே கடுதாசித் துண்டுகளை ஒட்டிக்கிட்டிருந்தாங்க! ஏண்டா, பசங்களா! சுவரைப் பாழாக்கறீங்கன்னு கேட்டு வைச்சேன். அவ்வளவுதான்! சுவரை விட்டு விட்டு என் சட்டை மேலே பாஞ்சுட்டாங்க.....!

*சாட்டர்ஜி:* நீங்கபாட்டுக்கு உங்க வழியே வந்திருந்தாத் தொல்லை இருந்திருக்காது.




"வீட்டிலே இப்பதான் மருந்து குடிச்சுட்டு வர்றேன். நீங்களாவது காப்பி கொடுங்களேன்!"

கன்யாலால்: இதை விடுங்க!.... வேணுஜி! என்னதான் போட்டி இருந்தாலும் 'ஒழிக' என்கிற வார்த்தை சரிதானா? 'வேண்டாம்' ஏற்றுக் கொள்ள மாட்டோம்' 'கடையை மூடு'ன்னு சொல்றதுதானே, பண்பாடு..... நீங்க சொல்லுங்க.

வேணு: உண்மை! ஆனால் உணர்ச்சிவசப் படறபோது வார்த்தையை யாரு கவனிக்கிறாங்க?

கன்யாலால்: அன்னைக்கு மீட்டிங் ஒன்றிலே குறளைப் பற்றிப் பேசினாங்க! திருவள்ளுவர் ஓர் இடத்திலே... இன்னு.... எனக்குச் சொல்ல வரல்லே.....! அதுக்கு அர்த்தம் தெரியுது.

நீலா: நான் சொல்கிறேன். 'இன்னா செய் தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்.'

கன்யாலால்: ஆமா! ஆமா!... அது தான்: குறளைப் பஸ்ஸிலே போகிறபோது படிக்கிறவங்க இறங்கிற போது மறந்து போயிடறாங்களா?

வேணு: நீங்க என்ன சொல்றீங்க? ஒழிகங்கிற வார்த்தை ஒழியணும் என்கிறீங்க, அப்படித்தானே?

கன்யாலால் (வாசற் பக்கம் பார்த்து): ஹா! கூடாது, கூடாது!

மற்றவர்கள்: என்ன கூடாது? ஏன் கூடாது?

கன்யாலால்: ஒழிகங்கிற வார்த்தை ஒழியக் கூடாது! என் மாமியார் வந்து நிற்கிறாளே வாசலில்! ஒரு தபால் போடப்படாதா? நான் தலைமறைவாய்ப் போயிருப்பேனே!....ஒழிக என்கிற பதம் ஒவ்வொரு பாஷைக்கும் தேவை தான்! மாமியார் ஒழிக!

(வேகமாகப் போகிறார். ஹாலில் டெலிபோன் மணி அடிக்கும் சத்தம் கேட்கிறது. நீலா உள்ளே போய் வருகிறாள்.)

நீலா: மிஸ்டர் சாட்டர்ஜி! உங்களைத் தான் யாரோ கூப்பிடுகிறார்கள். லேடீஸ் வாய்ஸ்.....!

சாட்டர்ஜி (அவசரமாக): அடடே! ரயில் சீக்கிரம் வந்து விட்டதா? என் வொய்ஃப்பாகத்தான் இருக்கும். ஸ்டேஷனில் வந்து காத்திருக்கவில்லை என்று பாயப் போகிறாள். அவளுக்கு இந்த நம்பர் தெரியும். ஏதாவது அவசரத்துக்கு வேணுமானால் ஃபோன் செய்யட்டும்னு இந்த வீட்டு டெலிபோன் நம்பரைக் குறிப்பிட்டுக் கடிதம் எழுதியிருந்தேன்.

(உள்ளே போய்விட்டுப் பதற்றத்துடன் திரும்பி வருகிறார்.)

வேணு: உங்க மனைவிதானே? ஏன் இப்படிக் கலவரப்படறீங்க? பஸ் பிரேக் டௌன் ஆயிடுத்துன்னு சொல்லிச் சமாளியுங்க! க்விக்! இங்கேயே ஒரு டாக்ஸி பிடித்துக் கொண்டு போங்கள்.

சாட்டர்ஜி: டாக்ஸியா? ஒரு லாரி கொண்டு போகணும்! என் மனைவி அங்கிருந்து புறப்படவே இல்லையாம்! என் குழந்தைகள் ஆறு பேரையும் அழைத்துக் கொண்டு என் மாமியார் வந்திருக்காளாம்! சென்ட்ரல் ஸ்டேஷனை கிடுகிடுக்க அங்கேயிருந்து பேசறாள். நாசமாப் போற வண்டி சீக்கிரம் வந்திருக்கு!

நீலா: ஓஹோஹோ!.... உங்க டொமெஸ்டிக் டிராமா புரோகிராம் பெரிய காமெடி ஆயுடுத்துப் போலிருக்கே.....

சாட்டர்ஜி: இது காமெடியா?.... மகா டிராஜிடி!

(சாட்டர்ஜி வேகமாக வெளியேற நீலகண்டன் உள்ளே வருகிறார்.)

நீலகண்டன்: டேய், வேணு! இந்தா...! வாசலில் டாக்ஸி நிற்கிறது. அதிலே உங்கள் பாட்டி உட்கார்ந்திருக்கிறாள். ஜாக்கிரதையாக இறக்கி உள்ளே அழைச்சுண்டு வா.

நீலா: பாட்டியா? அவ எங்கே வந்து சேர்ந்தாள்?

நீலகண்டன்: எழும்பூர் ஸ்டேஷனிலே திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸிலே ஒவ்வொரு வண்டியாக என் சிநேகிதனைத் தேடிக் கொண்டே போனேன். திடீர்னு 'நீலகண்டா'ன்னு ஒரு குரல் கேட்டது. அவ்வளவுதான்!.... எங்க அம்மா....! பிள்ளை பேரன் பேத்தி நாட்டுப்பெண்ணைப் பார்க்கணும் போலிருந்ததாம். பத்துக் கட்டு அப்பளாத்தோடே கிளம்பி விட்டாள். இந்தக் கலவரத்திலே நான் ஸ்டேஷனுக்கு எதற்குப் போனேன் என்பதையே மறந்துவிட்டேன்.

நீலா: பேஷ்! பேஷ்! (உள்ளே பார்த்து) அம்மா!.... உன்னுடைய மாமியாரும் வந்துட்டா......!

வேணு: சாட்டர்ஜிக்கும் கன்யாலாலுக்கும் மாமியார்கள் வந்திருக்கா. இங்கே ஒரு சின்ன மாறுதல்! அம்மாவுக்கு மாமியார் வந்திருக்கா.....!

நீலகண்டன்: குடித்தனக்காரர்களிடையே தான் எத்தனை ஒற்றுமை!

நீலா: ஒருமைப்பாட்டைக் கருதி ஒரு மாமியார்கள் மகாநாடே நடத்தலாம்போல் இருக்கே!

வேணு: நடக்கட்டுமே; அதே சமயம் 'மாமியார்கள் ஒழிக' என்ற கோஷமும் கிளர்ச்சியும் நடக்காமல் போகாது!

(காட்சி முடிவு)





# மேனி எழிலை அள்ளி அளிக்கும்

# மேட்டூர் சந்தன சோப்






மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட

Criterion-MC-1133

# நெல் உலர்த்த நேர்த்தியான இயந்திரம்

தமிழகத்தின் நெற் களஞ்சியமான தஞ்சை மாவட்டத்தில் அக்டோபர்–நவம்பர்–டிசம்பர் ஆகிய காலத்தில் இரண்டரை லட்சம் முதல் மூன்று லட்சம் டன் வரை நெல் அறுவடையாவது வழக்கம். இவ்வாண்டு தீவிரச் சாகுபடித் திட்டத்தின் கீழ் ஆடுதுறை 27 என்ற நெல் ஜப்பானிய முறையில் சாகுபடி செய்யப்பட்டு 5 லட்சம் டன் எதிர் பார்க்கப்பட்டது. வழக்கத்தை விட இரு மடங்கு விளையும் இந்த ஆடுதுறை 27 நெல் அறுவடையாகி ஈரத்துடன் ஒரு நாளைக்கு மேல் இருந்தால் முளைத்துவிடும். எனவே அதிகமாய் உற்பத்தி செய்யும் இந்த நெல்லை ஈரத்தால் கெட்டுப்போகாமல் உலர்த்திப் பாதுகாக்க அமெரிக்க ஃபோர்டு பவுண்டேஷன் நிறுவனத்தாரின் உதவியுடன் ஒன்றே முக்கால் கோடி ரூபாய்த் திட்டத்தில் இந்திய உணவுக் கார்ப்பரேஷன் தஞ்சை மாவட்டத்தில் தஞ்சை, குடந்தை, மன்னார்குடி ஆகிய நகரங்களிலும் மற்றும் 27 கிராமங்களிலும் ஆக முப்பது இடங்களில் நெல் உலர்த்தும் இயந்திரமும் கிடங்கும் சேர்ந்த நிலையங்களை அமைத்துள்ளது.

மாயூரத்துக்கும் குத்தாலத்துக்கும் இடையில் மல்லியத்தில் திறக்கப்பட்டுள்ள நெல் உலர்த்தும் இயந்திரத்தின் இயக்குநர்களான திருவாளர்கள் ஏ. ராமகிருஷ்ணனும், ஏ. ஷண்முகமும் இந்த இயந்திரம் வேலை செய்யும் முறையைப் பற்றி விளக்கிக் கூறினார்கள்.

இந்திய உணவுக் கார்ப்பரேஷன் நிறுவனத்தார் தாங்கள் கொள்முதல் செய்யும் நெல்லைப் பல மூட்டைகளிலிருந்து சிறிது சிறிது மாதிரி எடுத்து ஈரம் அளக்கும் கருவியால் ஈரம் எத்தனை சதம் உள்ளது என்று முதலில் பார்க்கிறார்கள். 14 சத விகிதம் ஈரம் இருந்தால் நெல் கெட்டுப் போகாதாம். அதற்கு மேல் இருந்தால் நெல் மூட்டைகளை மேடையில் அடுக்கி வைத்து நிமிஷத்துக்கு ஏழு மூட்டைகள் வீதம் தொட்டியில் கொட்டுகிறார்கள். தொட்டியில் கொட்டும் நெல்லை ஓர் எலிவேட்டர் எடுத்துச் சென்று இரண்டு உலர வைக்கும் இயந்திரங்களுக்குச் சமமாகப் பிரித்துக் கொடுக்கிறது. ஒவ்வொரு உலர வைக்கும் இயந்திரத்துக்கும் 100 மூட்டைகள் வீதம் இரண்டுக்கும் 200 மூட்டைகள் நிரம்பியவுடன் பர்னரைக் கொளுத்திவிடுகின்றனர். இந்த ராட்சஸ அடுப்பு எரிபொருளாக 'பர்னேஸ்' எண்ணெயைப் பயன்படுத்துகிறது. இதனால் ஒரு பெரிய குழாய் சூடாகிறது. குழாய்க்குள்ளிருக்கும் ஒரு விசை வெளியிலுள்ள காற்றைக் குழாய்க்குள் இழுக்கிறது. காற்று, குழாயின் அனலில் பழுத்த தகட்டின் மேல் பட்டு அனல் காற்றாக மாறி உலர்த்தும் இயந்திரத்துக்குச் செலுத்தப்பட்டு அங்குள்ள நெல்லை உலர வைக்கிறது. இரண்டு உலர்த்தும் இயந்திரங்களிலும் உள்ள 200 மூட்டை நெல் அரை மணி நேரத்தில் உலர்த்தப்பட்டு இன்னொரு எலிவேட்டர் மூலம் மேலே எடுத்துச் செல்லப்பட்டுப் பின்னாலுள்ள கிடங்குக்குக் குழாய் மூலம் அனுப்பப்படுகிறது. கிடங்குக்குள் வேகமாக வந்து விழும் நெல்லை மளமளவெனப் பிடிப்பதற்கு ஆறு துவாரங்கள் அமைக்கப்பட்டு, அந்த ஆறு துவாரங்களின் வழியாக விழும் நெல்லை ஒரே சமயத்தில் ஒரே நிமிஷத்தில் ஆறு மூட்டைகளில் பிடித்து எடை போட்டு அடுக்குகிறார்கள். இரண்டு உலர்த்தும் இயந்திரங்களும் சேர்ந்து 8 மணி நேரத்தில் 2880 மூட்டை நெல்லை உலர வைக்கின்றன.

அறுவடையாகிக் கொள்முதலுக்கு வரும் நெல் 16 அல்லது 17 சதவீதம் ஈரமாயிருந்தால் ஒரே தடவையில் உலர்த்தி விடலாம். 17க்கு மேல் 20 சதவீதம் வரை ஈரமிருந்தால் முதல் தடவை உலர்த்திய நெல்லை எட்டு மணி நேரத்துக்குப் பிறகு இரண்டாம் முறையாக உலர வைத்துக் கிடங்கில் சேர்க்கிறார்கள். 20க்கு மேல் 23 சதவீதம் வரை ஈரமிருந்தால் இரண்டாம் தடவை உலர்த்திய நெல்லை 8 மணி நேரம் வைத்திருந்து மீண்டும் மூன்றும் முறையாக உலர்த்திக் கிடங்குக்கு அனுப்புகிறார்கள்.

இந்த நெல் உலர்த்தும் இயந்திர நிலையங்களைப் பற்றி நாம் பெருமைப்பட வேண்டிய விஷயங்கள் இரண்டு. இந்தியாவிலேயே முதன் முதலாகத் தமிழகத்தில்தான் இவை நிறுவப்பட்டுள்ளன என்பது ஒன்று. இந்த இயந்திரங்கள் நூற்றுக்கு நூறும் நம் நாட்டிலேயே தயாரானவை என்பது மற்றொன்று. அமெரிக்க நிபுணர்களின் உதவியைக் கொண்டு நம் நாட்டிலேயே தயாரிக்கப்பட்ட இந்த இயந்திரங்களில் உள்ள உலர்த்தும் இயந்திரங்களைச் சென்னை பின்னி என்ஜினியரிங் கம்பெனியும், குதிர்களைச் சென்னை சதர்ன் ஸ்ட்ரக்சரல் கம்பெனியும், எலிவேட்டர்களைக் குஜராத் எலிகான் என்ஜினியரிங் கம்பெனியும் மின்சார அமைப்பை கிராம்ப்டன் என்ஜினீரிங் கம்பெனியும் அமைத்துள்ளன.

மிகக் குறுகிய கால அளவில் — இப்படி முப்பது நிறுவனங்களை அமைத்து முடித்த பெருமையில் பெரும் பங்கு எக்ஸிகியூட்டிவ் என்ஜினியர் திரு ராமலிங்கத்துக்கு உண்டு.

''இயற்கையாக வெய்யிலில் காய்ந்த நெல்லை அறைக்கும்போது அரிசி அதிகமாக உடையும். ஆனால் இந்த இயந்திரத்தினால் உலர்த்தப்பட்ட நெல்லை அறைக்கும்போது அந்த அளவுக்கு உடையாது'' என்கிறார் இங்கு பணியாற்றும் இந்திய உணவு கார்ப்பரேஷன் அலுவலர் திரு எம். அன்பழகன்.

— குத்தாலம் வீ: சம்பந்தன்

புகைப்படம்: கே. எஸ். மாரிமுத்து

மல்லியத்தில் நெல் உலர்த்தும் இயந்திரம்






# வில்லனுக்கு ஒரு விழா!

காந்தன்

'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்பது பழமொழி. படஉலகில் 'வில்லன் இல்லாத படம் டப்பாவிலே' என்பது புதுமொழி.

வில்லன்தான் படத்தின் உயிர்நாடி. அவன் படத்தில் வருவது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் அவன் இறுதிக் காட்சியில் கதாநாயகனிடம் உதை வாங்கிக் கொண்டு ஒழிந்து போவதும். கதாநாயகனும் வில்லனும் சண்டை போடும்போது வில்லன் மீது விழும் ஒவ்வொரு குத்துக்கும், அடிக்கும் ரசிகர்களிடமிருந்து 'உம்! ஒன்று, இரண்டு, மூன்று!' என்று உற்சாக ஆரவாரம் எழ வேண்டும்.

வில்லனுக்கு என்று சில லட்சணங்கள் உண்டு. அவற்றில் முக்கியமானது அடர்ந்த மீசை; அடுத்தது கட்டைக் குரல்; அதற்கு அடுத்தது எக்காளச் சிரிப்பு; அதற்கும் அடுத்தது கொடிய பார்வை; இவைகள் எல்லாம் போதாக் குறைக்கு வில்லன் சதா சிகரெட் புகைக்க வேண்டும். கதாநாயகனை இரகசியமாகத் தீர்த்துக் கட்டப் போகும் வில்லன் வாயில் பளபளவென்று மின்னும் கத்தியைக் கவ்விக்கொண்டுதான் ஜன்னல் வழியாகக் குதிக்க வேண்டும். வில்லனுக்கென்று தனிப் பார்வை, தனி நடை, தனி உடை எல்லாம் உண்டு. வில்லன் என்று நெற்றியில் எழுதி ஒட்டாத குறைதான். எடுத்ததற்கெல்லாம் விழா நடத்தும் இந்நாளில் இத்தனை தனிச் சிறப்புக்களுடன் கூடிய வில்லனுக்கு ஏன் ஒரு விழா எடுக்கக் கூடாது?

ஸ்டுடியோவில் பரபரப்பாக வேலை நடந்து கொண்டிருந்தது. பெரிய மாளிகையில் ஒரு பெரிய ஹால். சோபாக்களும், நாற்காலிகளும் ஒழுங்காகப் போடப்பட்டிருந்தன. இங்கும் அங்கும் உயர்ந்த வேலைப்பாடமைந்த டீப்பாய்களைப் போட்டு அவற்றின் மீது பித்தளைப் பூத்தொட்டிகளை அலங்காரமாக வைத்த வெங்கு, ''டைரக்டர் ஸார், 'இம்பார்ட்டண்ட் திங்ஸ்' சில இன்னும் வர வில்லையே!'' என்றான்.

''அதென்னப்பா இம்பார்ட்டண்ட் திங்ஸ்?'' என்றார் டைரக்டர்.

''வில்லன் வரும் காட்சிக்குத் தேவைப் படும் பழங்களெல்லாம் வாங்கிக்கொண்டு வந்தாக வேண்டுமே, ஸார்! ஆப்பிள், செவ்வாழை, கிர்ணி எல்லாம் நிறைய வாங்கி வைத்து அவற்றுக்கு மேலே ஒரு கத்தியையும் சொருகி வைக்க வேண்டும். அப்பொழுது தானே வில்லன் வந்து அந்தப் பழங்களைக் குத்திக் குதறி எறிய முடியும்?''

''அதெல்லாம் அவ்வளவு அவசியமா? பழங்களும் கத்தியும் இல்லாமலே வில்லன் வரும் காட்சியைச் சிறப்பாகச் செய்ய முடியாதா? தரமான ஆங்கிலப் படங்களில் வரும் வில்லன் எத்தனை அமைதியாக நடிக்கிறான்! எந்தவிதமான ஆர்ப்பாட்டமும் இல்லாமலே பாத்திரத்தின் தனித் தன்மையை எடுத்துக் காட்டி விடுகிறானே!''

''இருக்கலாம், ஸார்! உயர்ந்த தோலில் சிறந்த முறையில் தைக்கப்பட்ட மேல் நாட்டு ஷூவாயிருந்தாலும் அது நம் காலுக்குப் பொருந்த வேண்டும் அல்லவா? நம் தமிழ் நாட்டுப் படத்தொழிலில் கலை அம்சங்களையும் புது உத்திகளையும் விடப் பழக்கமாகிவிட்ட பழைய உத்திகள்தான் பாராட்டப்படுகின்றன. நீங்கள் உங்கள் மேல்நாட்டு அநுபவத்தை வைத்துக் கொண்டு பேசுகிறீர்கள். நான் உள்நாட்டு அநுபவத்தை வைத்துக் கொண்டு பேசுகிறேன். நான் அதிகமாகப் படிக்காதவன். ஆனால் எனக்கு 'மாஸ் சைக்காலஜி'யிலும், சினிமாத் துறையிலும் நல்ல அநுபவ ஞானம் உண்டு.''

''அப்பா வெங்கு, நமக்குள் என்னத்துக்குத் தகராறு! உன் அபிப்பிராயப்படியே எல்லா ஏற்பாடுகளையும் செய்வதில் எனக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. ஆனால், நான் படத்தில் வில்லனை எப்படி 'இன்ட்ரொட்யூஸ்' பண்ண நினைக்கிறேன் என்பதை முதலில் சொல்கிறேன், அதைக் கேட்டுவிட்டு, பழம், கத்தி இதெல்லாம் அவசியம்தானா என்பதை நீயே யோசித்துச் சொல்லு'' என்றவர் சிகரெட் புகையை ஒருமுறை ரசித்துவிட்டுப் பேசலானார்:

''வில்லன் கதாநாயகியின் பங்களாவுக்குள் நுழையும்போது பேரிருள் கவிந்திருக்கிறது. கொஞ்சமாக வெளிச்சம் தெரிகிறது. அதுவும் வானத்தில் பவனி வரும் நிலா வெளிச்சம்தான். அவன் கால்கள் தெரியும். அதில் இலேசாக வெளிச்சம் தெரியும். செடிகளும், கொடிகளும் சலசலக்கும். தோட்டத்தின் வழியாகப் போய் வில்லன் கவ

ரேறிக் குதித்து மேல் மாடி ஹாலுக்குப் போவான். கடைசிவரையில் அவன் முகமே தெரியாது. கால்களும் பின்புறக் காட்சியும் தான் தெரியும். மரம், செடி, கொடிகளின் அசைவும், சருகுகளின் மேல் அவன் பூட்ஸ் கால்கள் பதியும் 'சரக் சரக்' என்னும் ஒலியும் தான் இலேசாகக் கேட்கும். இந்த ஒலி வர வரப் பெரிதாகும். மாடி ஹாலில் கதாநாயகி மேனாட்டு இசைக்கட்டு சங்கீதத்துக்குத் தகுந்தபடி இடுப்பை ஒடித்து, உடம்பைக் குலுக்கி, 'மினிஸ்கர்ட்' உடையுடன் 'ஷேக்' டான்ஸ் ஆடிக்கொண்டிருப்பாள். வில்லனின் நடை ஒலி அவளுடைய டான்ஸ் ஒலியுடன் இணைந்துவிடும். இந்தக் காட்சி 'ஒண்டர்புல்'லாக இருக்கும். இது வரையில் மெல்லிய வாத்திய இசையுடன் அமைதியாகச் சென்ற காட்சியில் திடீரென்று 'வீல்' என்று ஓர் அலறல் ஒலி, 'கீச்' சென்ற மென்குரலில் கேட்கும். இது மிகவும் 'த்ரில்லிங்'காக இருக்கும்!'' என்று கூறிய டைரக்டர் கண்களை மூடிக்கொண்டு அந்தக் காட்சியை ரசிக்கலானார்.

''...ஸார், நீங்க சொல்வது 'ஒண்டர்புல்'லாகத்தான் இருக்கிறது. ஆனால் படம் 'ஹவுஸ் புல்'லாகுமா என்று பார்க்க வேண்டும். மக்கள் அத்தனை நீளமான மௌனக் காட்சியைத் தாங்குவார்களா என்பதையும் யோசிக்க வேண்டும்.''

'' 'டயலாக்' இருக்கும். ஆனால் நிறைய இருக்காது. மயக்கம் தெளிந்து எழுந்த ஹீரோயின் மாறிய சூழ்நிலையைக் கண்டு 'நான் எங்கே இருக்கிறேன்' என்று ஈன கரத்தில், கேட்பாள். 'இருக்க வேண்டிய இடத்தில்தான் இருக்கிறாய்' என்பான் வில்லன் அழுத்தமாக. அவன் முகத்தைப் பார்த்ததும் ஹீரோயின் திடுக்கிடுவாள். பீதியும் கலவரமும் முகத்தில் பிரதிபலிக்க மௌனமாக மெல்லப் பின்னே நகருவாள்.''

''என்ன ஸார் இது? மறுபடியும் மௌனம்தானா? கதாநாயகியின் வீரத்துக்கு இடமே இல்லையா? சேச்சே, அது கூடாது. இந்த இடத்திலே 'பவர்புல்' 'டயலாக்' போடணும். 'நான் எங்கே இருக்கிறேன்?' என்று ஹீரோயின் கேட்டதும், ஹஹ் ஹஹ் ஹா!' என்று வில்லன் அட்டகாசமாகச் சிரிக்க வேண்டும். உடனே ஹீரோயின் விழிகளைச் சுழற்றி நாற்புறமும் பார்ப்பாள். அப்போது வில்லன் அடித்தொண்டையிலிருந்து கிளம்பும் கட்டைக் குரலில், 'கூண்டில் அகப்பட்ட பறவை தப்பியோட நினைக்கிறதா? அது நடக்காது' என்பான்.



'என்னை என்ன செய்து விடுவாய்?' என்று கேட்டு ஹீரோயின் கட்டிலிலிருந்து எழுந்து ஓடுவாள். அப்போது நாற்புறங்களிலிருந்தும் ஈட்டி தாங்கிய வீரர்கள் திடீரென்று தோன்றி அவள் வழியை மறிப்பார்கள். இதுதான் மக்களுக்குப் பிடிக்கும்.''

இந்தச் சமயத்தில், ''என்ன பேசிக்கிட்டு இருக்கீங்க? 'டிஸ்கஷனி'லே நானும் சேர்ந்துக்கிடறேன்'' என்று கூறியபடியே படாதிபதியும் அங்கு வந்து சேர்ந்தார்.

டைரக்டர்: இதிலே புதுமையே இல்லையே அப்பா வெங்கு! சமூகப்படத்திலே ஈட்டி தாங்கிய வீரர்கள் எப்படி வருவார்கள்?

வெங்கு: அப்படிக் கேளுங்க! வில்லனுடைய ஆட்களிடம் மட்டும்தான் ஈட்டிகள் இருக்கும். வில்லனிடம் துப்பாக்கி இருக்கும்.

படாதிபதி: இந்தத் தருணத்தில் ஹீரோ நிருபமாவைத் தேடிக் கொண்டு அங்கே வந்து விடுகிறான். கஷ்டப்பட்டு வில்லனுடைய இரும்புக் கோட்டைக்குள் புகுந்துவிடுகிறான்.

வெங்கு: வில்லன் 'உம்' என்று கட்டளையிடுகிறான். வீரர்கள் ஈட்டியுடன் ஹீரோ மீது பாய்கிறார்கள்.

படாதிபதி: ஹீரோ அத்தனை பேரையும் ஜூடோ பண்ணி உருட்டித் தள்ளிவிடுகிறான்.

வெங்கு: வில்லன் சும்மா இருப்பானா? துப்பாக்கியை எடுத்து ஷூட் பண்ணுகிறான். ஹீரோ நிராயுதபாணியாக இருக்கிறான்.

படாதிபதி: ஆனாலும் ஹீரோ ஹீரோ தானே? அவன் தூணுக்குப் பின்னாலும் பீப்பாய்க்குப் பின்னாலும் மறைந்து கொண்டு தப்புகிறான்!

வெங்கு: இந்தச் சமயத்தில் போலிஸார் வந்து விடுகின்றனர்.

படாதிபதி: உடனே வில்லன் ஹீரோயினைத் தனக்கு முன்னால் பிடித்து வைத்துக் கொண்டு 'கிட்டே நெருங்கினால்இவளைச்சுட்டு விடுவேன்' என்கிறான்.

வெங்கு: என்ன நேர்ந்தாலும் பரவாயில்லைஎன்று ஹீரோ வில்லன்மீது பாய்கிறான்!

படாதிபதி: வில்லன் துப்பாக்கியை இயக்குகிறான்! தன் கரத்தில் சிக்கியுள்ள நிருபமாவைச் சுடுகிறான்.

வெங்கு: ஆனபோதிலும் நிருபமா சாகவில்லை! ஏனெனில் அவள் கதாநாயகி. எனவே அவள் துப்பாக்கியில் வேட்டுக்கள் தீர்ந்து போய்விடுகின்றன!

டைரக்டர் இந்த மங்களகரமான முடிவுக்குக் குறுக்கே புகுந்து பேசவில்லை. அவரது கற்பனைத் துப்பாக்கியிலும் வேட்டுக்கள் தீர்ந்து நீண்ட நேரமாகி விட்டிருந்தது!

# வலியா?  ஜலதோஷமா?





## பத்து சக்திமிக்க மருந்துகள் சேர்ந்தது

# அமிர்தாஞ்சனம்

## உங்களுக்கு உடனடி நிவாரணம் அளிக்கிறது

சக்தி வாய்ந்த பத்து மருந்துகள் கொண்ட அமிர்தாஞ்சனம், வலிகளைப் போக்கி ஜலதோஷத்தை நீக்குவதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டது. எழுபது ஆண்டுகளாக லட்சக் கணக்கான குடும்பங்களில் பயன்பட்டு வரும் கை கண்ட நிவாரணி அது.

**வலிகளுக்கு:** தசை வலி, தலைவலி, சுளுக்கு, அல்லது மூட்டு வலி எதுவாக இருந்தாலும், வலியுள்ள இடத்தில் சிறிது அமிர்தாஞ்சனம் தடவுங்கள். சில நிமிடங்களில் நிவாரணம் ஏற்படுவதை உணர்வீர்கள்!

**ஜலதோஷத்துக்கும், மார்புச் சளிக்கும்:** சாதாரண ஜலதோஷமானால், மூக்கின் உட்புறத்திலும் மூக்கின் கீழும் அமிர்தாஞ்சனம் தடவுங்கள்; அல்லது சிறிதளவு அமிர்தாஞ்சனம் எடுத்து வெந்நீரில் இட்டு, ஆவியை சுவாசியுங்கள். மார்புச் சளியானால், மார்பில் அமிர்தாஞ்சனம் தடவுங்கள். மிகமிக விரைவில் நல்ல நிவாரணம் ஏற்படுவதைக் காண்பீர்கள்.

ஒவ்வொரு முறை பயன்படுத்துவதற்கும் சிறிதளவு அமிர்தாஞ்சனமே போதும்; ஆகவே ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்துக்கு மாதக் கணக்கில் வரும். அமிர்தாஞ்சனத்தை எப்பொழுதும் கையோடு வைத்திருங்கள்.

அமிர்தாஞ்சனம்
கையடக்கமான, குறைந்த விலை டின்களிலும் கிடைக்கிறது.







அமிர்தாஞ்சன் லிமிடெட்,
மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி.

am-3770



# கடைசி பஸ்!

தம் கதையைக் கேட்க வரும் மக்கள் கடைசி பஸ்ஸைப் பிடித்து வீடு போய்ச் சேர வேண்டும் என்ற கவலை, அந்த மக்களுக்கு உண்டோ இல்லையோ, கதை சொல்லும் அய்யாசாமி பாகவதருக்கு அதிகமாக உண்டு. தம் கதையைக் கேட்பதால் மக்களுக்குப் புண்ணியம் கிடைக்கிறதோ இல்லையோ, கட்டாயம் பஸ் கிடைக்க வேண்டும் என்று அவர் வெகு துடியாய் இருப்பார். கடைசி பஸ் கிடைக்காவிட்டால் மக்கள் தம்மைச் சபிப்பார்கள் என்பது பாகவதருக்குத் தெரியும். ஆனால் அந்தச் சாபத்தைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. அவர் கவலைப்பட்டதெல்லாம் கடைசி பஸ் கிடைக்காதோ என்ற கவலையில் மக்கள் தம் கதைக்கு வராமலே இருந்து விட்டால் என்ன பண்ணுகிறது என்பதுதான்.

ஆனால் அந்தக் கடைசி பஸ் கவலையினால் என்ன விபரீதம் நிகழ்ந்து விடுகிறது என்றால், முதலில் எல்லாம் வெகு விஸ்தாரமாக, மந்த கதியில் சென்று கொண்டிருக்கும் கதை கடைசியில் வெகு வேகமாகத் துரித கதியில் ஓட ஆரம்பிக்கும். கதையும் நம்மோடு கூடக் கடைசி பஸ்ஸைப் பிடிப்பதற்காக ஓடி வருவது போலத் தோன்றும்.

இதனால் என்ன ஆகிவிடுகிறது என்றால், நான் ராமாயணத்தைப் பாகம் பாகமாகப் பாகவதரிடம் எத்தனையோ தடவைகள் கேட்டிருந்தபோதிலும் ஒவ்வொரு பாகத்திலும் முதல் பகுதி விஸ்தாரமாகத் தெரியுமே ஒழியக் கடைசிப் பகுதி மேலெழுந்தவாரியாகத்தான் தெரியும்.

உதாரணமாக, ராமர் வனவாசம் என்று கதை இருந்தால் கைகேயியும், கூனியும் நடத்தும் சம்வாதம் வெகு விஸ்தாரமாகத் தெரியும். ஆனால் கடைசியில் ராமர் காட்டுக்குப் போகும் காட்சி வெகு துரிதமாக இருக்கும். சுமந்திரன் நாறு மைல் வேகத்தில் தேரை ஓட்டிக் கொண்டு போய்க் கங்கைக் கரையில் நிறுத்துவான். உடனே குகன்



கூத்தன்

ஐம்பதுமைல் வேகத்தில் படகை ஓட்டிக் கங்கையைக் கடப்பான். உடனே ராமன், லட்சுமணன், சீதை மூவரும் இருபது மைல் வேகத்தில் பரத்வாஜ ஆசிரமத்தை நோக்கி ஓடுவார்கள். பரத்வாஜர் கொடுக்கும் உபசாரங்களை ஏற்றுக் கொண்டதும், கொள்ளாததுமாக, மூவரும் சித்ரகூட பர்வதத்தை நோக்கி ஓடுவார்கள். அவர்கள் சித்ரகூட பர்வதத்தில் போய் உட்காருவதற்கும் நாம் ஓடிப்போய்க் கடைசி பஸ்ஸைப் பிடித்து உட்காருவதற்கும் சரியாக இருக்கும்.

குகனும் ராமனும் என்ன பேசிக் கொண்டார்கள், பரத்வாஜ ஆசிரமத்தில் என்ன நடந்தது முதலிய விவரங்களைக் கேட்டால் எனக்குத் தெரியாது. ஏனெனில், இந்த இடங்களை யெல்லாம் நாங்கள் (அவரும் தான்) கடைசி பஸ்ஸைப் பிடிக்க வேண்டுமே என்பதற்காக போட் மெயில் வேகத்தில்தான் அடித்துக் கொண்டு போவோம்.

அதே மாதிரி சீதாபஹரணம் கதை வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். மாரீசனும் ராவணனும் என்ன பேசிக் கொண்டார்கள் என்பதைப் பாகவதர் சாங்கோபாங்கமாக விவரிப்பார்.

ஆனால் மானைப் பின்பற்றி ராமன் ஓடவேண்டிய கட்டத்தில் பாகவதருக்குக் கடைசி பஸ் ஞாபகம் வந்துவிடும். உடனே மான் பர்ணசாலைக்கு முன்னால் நிற்க வேண்டியதுதான் தாமதம். ''மானைப் பிடித்துத் தாருங்கள்'' எனச் சீதை கேட்பதற்குக்கூட இடம் வைக்காமல் ராமன் மான் பின்னால் ஓடுவார். உடனேயே ராமன் பின்னால் லக்ஷ்மணன் ஓடுவான். உடனேயே ராவணன் எங்கிருந்தோ ஓடி வந்து சீதையைத் தூக்கிக் கொண்டு ஓடுவான்.

பட்டாபிஷேகக் காட்சியும் இந்த கதியில் தான் செல்லும். ராமன் இலங்கைக்கு அணை கட்டும் படலம் வெகு விஸ்தாரமாகச் செல்லும். ஆனால் யுத்தம் ஆரம்பித்ததும் பாகவதருக்குக் கடைசி பஸ் ஞாபகம் வந்துவிடுமாதலால் யுத்தம் வெகு வேகமாக நடந்து. ''இன்று போய் நாளை வா'' என்றுகூட ராமர் சொல்ல மாட்டார். அதற்குள் கடைசி பஸ் போய்விட்டால் என்ன செய்வது! அன்றே ராம ராவண யுத்தத்தை முடித்துவிட்டுத் தாமும் கடைசி பஸ்ஸைப் பிடித்து, அயோத்தியாபுரி சென்று, பட்டாபிஷேகம் பண்ணிக் கொள்ள வேண்டியவரைப் போல ராமர் வெகு வேகமாக யுத்தத்தை முடிப்பார். அந்த அவசரத்தில் சீதையை நெருப்பில் குதிக்கக்கூடச் சொல்ல மறந்து, புஷ்பக விமானத்தில் ஏறிவிடுவார்.

நான் முழுக்க முழுக்க ராமாயணம் கேட்டது இந்தப் பாகவதரிடம்தான். வீடு திரும்ப டாக்ஸிச் செலவு வைக்காமல் கடைசி பஸ்ஸில் அனுப்பி விடுகிறாரே என்ற சந்தோஷம் ஒரு பக்கம் இருந்தபோதிலும் இன்னொரு பக்கம் ராமாயணக் கதையை இப்படி அரைகுறையாகத் தெரிந்து கொண்டிருக்கிறோமே என்று வருத்தமாகத்தான் இருக்கும். இருந்தாலும் ஓர் ஆறுதல்.

மனுஷன் கடைசிக் காலத்தில் போய்ச் சேர வேண்டிய இடத்துக்கு நல்லபடியாகப் போய்ச் சேர, அதாவது இன்னும் ஸ்பஷ்டமாகச் சொல்ல வேண்டுமானால், நரகத்துக்குப் போகாமல் சொர்க்கத்துக்குப் போய்ச் சேர, மற்ற பஸ்களை யெல்லாம் கோட்டை விட்டு விட்டாலும் கூட எஞ்சியிருக்கிற கடைசி பஸ் பாகவதரின் கதாகாலக்ஷேபம். தமிழக அரசு போக்குவரத்தில் கடைசி பஸ் பணிமனைக்குப் போகையில் என்ன வேகமாகப் போகிறது பாருங்கள்! அதேபோல் பாகவதரின் கதையாகிய இந்தக் கடைசி பஸ்ஸும் முடிவில் வேகமாகப் போவதில் ஒரு பொருத்தம் இருக்கிறதல்லவா?

---

## இலையில் இலங்கிய கலை



— வி. எஸ். கக்டண்கர்

''என்ன காரியம் செய்து விட்டாய், அம்மா ?'' என்று அலறினாள் மகள்.

வெளிப் பார்வைக்கு அவளுடைய தாயார் அப்படிப் பதைக்க வைக்கும் செயல் எதுவும் செய்யவில்லை. காய்ந்த இலைகள் சிலவற்றை அடுப்பிலிட்டு நெருப்பு மூட்டிக்கொண்டிருந்தாள். அவ்வளவுதான்; ஆனால் அந்தப் பெண்ணோ தாய் மீது பாய்ந்து, அவள் பிடிப்பிடியாக அடுப்பில் திணித்துக் கொண்டிருந்த இலைகளில் கருகாதவற்றை யெல்லாம் வெளியே எடுத்துத் தன் மார்புற அணைத்துக் கொண்டு கண்ணீர் விட்டாள்.

அந்த இலைகளில்தான் மகாராஷ்டிரத்தின் பக்த கவி சோஹிராபா இயற்றிய கவிதைகள் எழுதப்பட்டிருந்தன.

வறுமையில் வாடிய சோஹிராபாவுக்குத் தமது கவிதைகளை எழுதக் காகிதம் வாங்கக்கூட வசதியில்லை. அவரது சகோதரி குழந்தைப் பருவத்திலேயே விதவையாகிஅவரிடம் வந்தவள். அவள்தான் அவரது கவிதைகளை இலைகளில் எழுதி வைத்தாள். விஷயமறியாத அவர்களது அன்னை அவற்றை அடுப்பெரிக்க உபயோகித்தபோது அவள் அலறியது நியாயம்தானே ?

அவள் காத்துத் தந்த இலைக் கவிதைகள் பிறகு மகாராஷ்டிரம் முழுதும் பிரபலமாயின. காந்தியடிகளின் ஆசிரம பஜனாவளியில் இடம்பெற்ற 'அந்தரிஞ்சாதிவா மாலவூம் நகோரே' என்ற பாடல் சோஹிராபாவுடையதுதான். ''சோதரா, உன்னுள் இருக்கும் ஞானம் என்கிற தீபத்தை அணைய விடாதே!'' என்பது இதன் பொருள்.

---

# ஏக்கங்கள்... நோக்குகள்

மா. இராஜாராம்

தூக்கத்தில் தன்னை லயிப்பித்துக்கொள்ள விருந்த கணத்தில் கதவை யாரோ தட்டினார்கள். உறக்கத்தின் சிவப்பேறிய விழிகளைக் கசக்கி விட்டுக் கொண்டு அவசரமாய் 'ஹாங்கரி'லிருந்து ஒரு சட்டையை உருவியணிந்த வாறே, அறைக் கதவைத் திறந்தான் தியாகராஜன். தன்னைத் தேடி யார் வரப் போகிறார்கள்? ராமமூர்த்தி, ''ட்ரெயினிங்''க்காகப் போன பின் இந்தப் பத்து நாட்களில் இந்த அறையை நாடி — அதாவது தன்னைத் தேடி — யாரும் வந்ததில்லையே!

இரண்டு மணியாகியும் வெயிலின் உக்கிரம் இன்னும் தணியத் தொடங்கவில்லையே என்ற சிந்தனையுடன் அவன் கதவைத் திறந்த போது, ''குட்மார்னிங் ஸார்!'' என்று வெட்கம் கலந்த குரலில் கூறிச் சலாம் வைத்த வாறு ஒரு சிறு பையன் நின்றிருந்தான். இவனை எங்கேயோ பார்த்தமாதிரி யிருக்கிறது; ஆனால் நிச்சயமாகத் தெரியவில்லை.

''ஜெயந்தி டீச்சர் ஒங்களக் கூட்டி வரச் சொன்னாங்க!'' என்று புன்முறுவலுடன் கூறினான் பையன்.

தியாகராஜனுக்கு ஒரு கணத்தில் எல்லாம் புரிந்து விட்டது போலிருந்தாலும் ஒரு விதமான குழப்பத்துடன், ''என்னையா கூட்டி வரச் சொன்னாங்க?..... ராமமூர்த்தின்னு சொல்லி யிருப்பாங்க.... அவர் ஊர்ல இல்லியே...'' என்று இழுத்தான்.

''இல்லெ, ஒங்களத்தான் சொன்னாங்க!''

''என்னன்னு?''

''தியாகராஜன்னு!''

சொல்லிவிட்டு, அப்படிப் பெயரைச் சொன்னது மரியாதைக் குறைவோ என்ற நினைப்பில் உதட்டைக் கடித்துக் கொண்டு முகம் சிவப்பேற நின்றிருந்தான் பையன். வெய்யிலின் உக்கிரம் அவனை வாட்டி வதக்கி யிருந்தது.

''ஒனக்கு என்னெ எப்படித் தெரியும்?''

''ராமமூர்த்தி சாரைக் கூட்டிக்கிட்டுப் போக ஒருவாட்டி வந்தபோது ஒங்களப் பாத்திருக்கேன், சார்!'' என்றான் பையன்.

பையனை உள்ளே வந்து உட்காரச் சொன்னான் தியாகராஜன். பையன் லஜ்ஜையுடன் வந்து அறையில் கிடந்த இரு நாற்காலிகளில் ஒன்றின் விளிம்பில் அமர்ந்தான்.

தியாகராஜனுக்கு இப்போது நினைவுக்கு வந்தது. ''ஒம்பேரு விசுவநாதன் இல்லே?''

அவன் தன் பெயரைத் தெரிந்து வைத்திருப்பதே தனக்குக் கௌரவம் என்று காட்டிக்கொள்கிற மாதிரி ''ஆமாம், சார்!'' என்றான் பையன்.

''எந்தக் கிளாஸ் படிக்கிறே?''

''செவன்த் ஸ்டாண்டர்டு!''

''ஜெயந்தி டீச்சர் ஒனக்குக் கிளாஸ் எடுக்கிறதுண்டா?''

''போன வருஷம் சிக்ஸ்த்ல கணக்கு எடுத்தாங்க!''

''ஒன்னெ எப்படி இன்னக்கு இங்கே அனுப்பினாங்க?''

''ஒவ்வொரு ஞாயத்துக் கிளமையும் அவங்களப் பாக்க நான் ஹாஸ்டலுக்குப் போவேன் சார்! அந்தமாதிரி இன்னக்கும் போனபோது இங்க வந்து ஒங்களக் கையோட கூட்டி வரச் சொன்னாங்க!''

தியாகராஜன் யோசனையுடன் ''அதுக்காக இந்த வெய்யிலிலா அனுப்புறது?'' என்றான் மெதுவாக.



பையன் பெருமையும் கருணையும் தொனிக்கும் குரலில், ''அவங்க என்ன சொன்னாலும் நான் செய்வேன் சார்!'' என்றான்.

தியாகராஜன் பேசாம லிருந்ததைக் கண்டதும், ''அவங்க ரொம்ப நல்லவங்க, சார்! அவங்களுக்கு ராமமூர்த்தி சாரையும் ஒங்களையும் ரொம்பப் புடிக்கும், சார்!'' என்றான் பையன்.

சிரித்தவாறே தியாகராஜன், ''ஒனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான்.

''டீச்சரே சொல்லுவாங்க சார்! அவங்களுக்கு எம்மேலே ரொம்பப் பிரியம். ஞாயத்துக் கெளமை தவறும்ப் பாக்கிறது னால எல்லா வெசயங்களையும் எங்கிட்டச் சொல்லுவாங்க! அவங்க வீட்டு வெசயங்களைக்கூடச் சொல்லுவாங்க, சார்!''

பையன் வெட்கம் கலந்து தொடர்ந்து பேசிக் கொண்டிருப்பதைக் கண்ட தியாகராஜன் தன்னை வெளியே கிளம்பத் தயார் செய்துகொள்ளத் தொடங்கினான்.

''டீச்சரைக் கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி அவங்க அப்பா அடிக்கடி லெட்டர் போட்டுத் தொந்தரவு செய்யறாராம்!'' இதைச் சொன்னபோது பையனின் குரலில் தன் டீச்சருக்குத் தான் ரொம்பவும் நெருங்கியவன் என்பதைக் காட்டிக் கொள்ளுகிற ஒரு வேகம் வெளிப்பட்டது.

தியாகராஜனும் பையனின் வாயைக் கிளறுகிற வகையில் ''அப்ப பண்ணிக்கிட்டா என்ன?'' என்றான் தலையைச் சீவிக் கொண்டு.

''அவங்களுக்குக் கல்யாணம்னாலே புடிக்கலையாம் சார்!''

''ஏனாம்?''

''அப்புறம் இஸ்கூலுக்கு வந்து எங்களோட பளக முடியாதாம்!''

தியாகராஜன் தனக்குள் சிரித்துக்கொண்டான். ஜெயந்திக்குக் கல்யாணம் என்றாலே பிடிக்காதாமே?

அவளைத் தான் முதன் முதலில் சந்தித்தது அவனுக்கு நினைவு வந்தது. தற்செயலாக—

அப்படித்தான் அவனும் ராமமூர்த்தியும் நினைத்துக் கொண்டிருப்பார்கள் இன்னும். கடற்கரையில் அவர்கள் இருவரும்



அப்புறம் இரண்டொரு நிமிடங்களுக்கு யார் என்ன பேசுவதென்று அறியாத மௌனம் நிலவியது.

தியாகராஜன் தன் மனத்தில் பட்டதைச் சொல்லிவிடுவோம் என்ற முடிவுக்கு வந்தவன் மாதிரி மென்று விழுங்கியவாறு, ''நான் போனவாட்டி ஒங்களப் பார்த்தபோது இருந்ததைவிட.....ம்.... இப்ப....ம்..... இளமையாகக் காணப்படுகிறீர்கள்'' என்றான்.

'பொட்'டென்று பூத்த ஒரு சிரிப்பில் தன் வெட்கத்தை மறைத்தவாறு மௌனம் கலைந்த துணிச்சலில் ஜெயந்தி பேசினாள்: ''ம், நீங்க ஒங்க ஃப்ரெண்டுக்கு லெட்டர் போடவேயில்லியாமே?''

தியாகராஜன் தன் தலையைக் குனிந்து கொண்டான்.

''போன பிறகு ரெண்டு லெட்டர் போட்டாராம். நீங்க பதில் போடவே இல்லியாம். ரொம்பக் கவலைப்பட்டு எழுதியிருக்கார்!''

''அடேயப்பா!'' என்று கேலியாக முணுமுணுத்த தியாகராஜன் அவளை உற்றுப் பார்த்தவாறே ஒரு புன்னகையுடன், தான் இதைச் சொல்வது அவளைச் சந்தோஷப்படுத்தும் என்கிற நம்பிக்கையில், ''லெட்டர் முழுக்க ஒங்களைப் பத்தியே எழுதியிருந்தான்... எனக்கு என்ன பதில் எழுதறதுன்னே தெரியலெ'' என்றான்.

ஜெயந்தி முகத்தை இறுக்கிக் கொண்டு ''ஒங்களுக்கு எழுதற லெட்டர்லெ ஏன் என்னைப் பத்தி எழுதணும்?'' என்றாள்.

''அதெ என்னண்டெ கேட்டா? அவனல்லெ கேட்கணும்!''

''நான் இப்ப எழுதிடுறேன் அப்ப, 'ஒங்க ஃப்ரெண்டுக்கு எழுதற லெட்டர்லெ என்னைப்பத்தி எதுவும் எழுதவேண்டாம்னு!''

''நாங்க ஃப்ரெண்ட்ஸ். என்ன வேணும்னாலும் எழுதிப்போம்!''

''இப்படியும் பேசறீங்க, அப்படியும் பேசறீங்க!''

''சும்மா தமாஷுக்கல்ல சொன்னேன்!''

''எது? இப்பச் சொன்னதா, மொதல்லே சொன்னதா?''

தியாகராஜன் சிரித்தவாறே தலையைக் குனிந்து கொண்டான். அந்தச் சிரிப்பு சண்டையில் ஆரம்பித்திருக்கிறது போலிருக்கிறது என்ற நினைப்பு உள்ளோடியது.

சிறு மௌனத்துக்குப் பின் மென்மையான முறுவலுடன், ''நான் கூப்பிட்டா நீங்க வருவீங்களோ மாட்டீங்களோன்னுதான், விசுவநாதனை அனுப்பிக் கையோடு கூட்டி வரச் சொன்னேன்'' என்றாள் ஜெயந்தி.

தியாகராஜன் 'சட்'டென்று அவளை ஏறிட்டு நோக்கினான். அவளை உற்றுப் பார்த்தவாறே, ''ஏன் அந்தச் சந்தேகம்?'' என்று கேட்டான்.

அவள் தயக்கத்துடன், ''இல்லே, தப்பா எடுத்துக்கிடுவீங்களோன்னு ...'' என்று இழுத்தாள்.




''இது ஒரு ஆம்பிளை ஒரு பொம்பிளைகிட்ட சொல்ற மாதிரி இருக்கு!'' என்று சிரித்தவாறே அவன் சொல்லவும் அவளும் அவனோடு சேர்ந்து சிரித்தாள்.

இந்தச் சிரிப்பு அவர்களிடையே ஒரு சகஜ பாவத்தைக் கொண்டுவந்ததான பிரமையை ஏற்படுத்தியது.

''ஒங்க ஃப்ரெண்டு ஒங்க மேலே உசிரையே வச்சிருக்கார்!''

இது அவள் சொல்லித்தான் தெரிய வேண்டுமாக்கும்! ஒரு கணம் இனமறியாத ஏதோவொரு கசப்பில் உழன்ற தியாகராஜன் தனக்குரிய குதர்க்கத்தோடு ''அப்புறம் உங்களுக்கு என்ன மிச்சம் வச்சிருக்கான்?'' என்றான்.

ஜெயந்தி தலையைக் குனிந்து கொண்டாள். இதற்கென்ன பதில் சொல்வது? இருவரிடையேயும் மறுபடியும் ஒரு தயக்கம் புகுந்தாற் போலிருந்தது. இதை அகற்றிவிடுகிற துடிப்பில் அவள் தன்னை அமித சகஜ பாவத்துக்கு உயர்த்திக் கொண்டு வாய் விட்டுச் சிரித்தவளாய், தன் கைக்குட்டையைச் சுழற்றி இலேசாக அவன்மேல் அடித்தாள். அவளுடைய இந்தச் செய்கை தியாகராஜனை சுகமான ஓர் ஆதரவுக்கு ஆளாக்கிய உணர்ச்சியைக் கொடுத்தது.

''எப்பவும் ஒங்க ஃப்ரெண்டுக்கு ஒங்களைப் பத்தித்தான் பேச்சு'' என்றாள் ஜெயந்தி.

தியாகராஜன் புன்முறுவலுடன் ''ஒங்களைப் பார்க்கும்போதெல்லாம் வேறு எதுவும் பேசறதே யில்லியாக்கும்?'' என்று கேட்டான்.

அவள் மறுபடியும் அளவுக்கு மீறிச் சிரித்தாள். அவனுக்கு அது என்னவோபோல் இருந்தது. இருந்தாலும் தன் முகத்தை இயன்ற மட்டும் மலர்த்திக் கொண்டான்.

ஜெயந்தி திரும்பவும் வார்த்தைகளைத் தேடி அவனை ஊன்றிப் பார்த்தவாறே, ''ஒங்களப் பத்திய எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும்!'' என்றாள்.

''எல்லாம்'னு?''

''எல்லாம்னு எல்லாம்தான்... எவ்வளவு தெரியலாமோ அவ்வளவும்னு வச்சுக்குங்களேன்!''

தியாகராஜனுக்கு முதுகோடு சிலிர்த்தது. ராமமூர்த்தி ஜெயந்தியுடன் கழிக்கிற நேரங்களில் கூட அவனுக்குத் தன்னைப் பற்றிய நினைப்பு அடிக்கடி வந்திருக்கிறது என்ற விஷயம் அவனுக்கு ஒருவிதமான தெளிவில்லாத ஆறுதலையும், மகிழ்ச்சியையும் கொடுத்தபோதிலும், ஏனோ அவனுக்கு அதை ஜெயந்தியின் வாயிலாகக் கேட்கப் பிடிக்கவில்லை.

ஜெயந்தி தொடர்ந்தாள்.: ''அவர் ஒங்களைப் பத்தி ரொம்பக் கவலைப்படறார். நீங்க இப்படி அலட்சியமாக இருப்பதைப் பார்த்துப் பயமாயிருக்கிறதாம்!''

தியாகராஜன் கரகரத்த குரலில், ''பயமென்ன பயம்?'' என்றான் மெதுவாக.

ஜெயந்தி சற்று நேரம் மௌனமாக இருந்தாள். பின்னர் மெல்லிய குரலில், ''இந்த நேரத்துல ஒங்களோடயே ஒங்

களுக்கு ஆறுதலா இருக்க முடியலியேன்னு ரொம்ப வருத்தம்'' என்றாள்.

தியாகராஜன் மௌனமாக இருந்தான்.

''ஒங்ககிட்டேயிருந்து லெட்டர் எதுவும் வராதது அவருக்கு ரொம்பக் கவலையாயிருக்காம்; அங்க எதிலேயும் மனசைச் செலுத்த முடியலியாம்!''

அவள் குரலிலிருந்து இவ்வார்த்தைகளை அவள் எந்த உணர்ச்சியோடு சொல்கிறாள் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லையாயினும், அவள் இதைக் கேலியாகச் சொல்லியிருக்க வேண்டுமென்றுதான் அவனால் நினைக்க முடிந்தது. ராமமூர்த்திக்குத் தன்மேலிருக்கும் பரிவின் நினைப்பு கொடுத்த இதம் மாறி, இந்தச் சின்ன விஷயத்தை அவன் இத்தனை பிரமாதப்படுத்தியிருக்க வேண்டாம் என்ற அர்த்தமில்லாத கோபம் உண்டாயிற்று.

''நீங்க ஒங்க ஃபிரண்டுக்கு ஒடனடியா லெட்டர் போடணும்!''

தியாகராஜனின் மனத்தில் எரிச்சல் படர்ந்தது. யார்மேல் எரிச்சல்? இவள் மேல் எரிச்சல் கொள்வதில் அர்த்தமுண்டா? திடீரென்று அவனுக்கு எல்லாவற்றிலுமே வெறுப்புப் பிறந்தது. ஆனால் அதை எப்படி வெளியே காட்டிக் கொள்வது?

அவன் சட்டென்று எழுந்து, ''இதைச் சொல்ல என்னை இவ்வளவு தூரம் கூப்பிட்டிருக்க வேண்டாமே! நான் வரேன்!'' என்றான். தன்மேலேயே அவனுக்குச் சந்தேகம் பிறந்தது. இன்னும் அவளிடம் அவன் என்ன எதிர்பார்க்கிறான்?

ஜெயந்தி அவனை ஏறிட்டு நோக்கி, ''அவருக்கு இத்தனை நெருக்கமான ஃபிரண்டு எனக்கும் ஃபிரெண்டு இல்லியா?'' என்று கூறிப் புன்முறுவல் பூத்தாள்.

தியாகராஜன் ஒன்றும் பேசாமல் அமர்ந்தான். ஃபிரண்ட்... ஃபிரண்டா? அப்படித்தான் கடைசியில் லலிதாவும் சொன்னாள்.

அவனுக்கு மனக் குமைச்சலையும் மீறிக்கொண்டு ஜயந்தியின் வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன.

''நான் என்னென்னவோ 'ப்ரோக்ராம்' லாம் 'ப்ளான்' பண்ணி வச்சிருக்கேன்; அதுக்குள்ள போறேங்கிறீங்களே!''

விருட்டென்று இலேசாகப் பூத்த மனத்தைச் சுருட்டி அடக்கிக் கொண்டு முக பாவம் காட்டாமல் அவளைத் தீர்க்கமாக நோக்கினான் அவன்.

''இப்பப் பேசாம என்னோட கிளம்புங்க!'' என்று கட்டளை இடுகிற மாதிரி சொன்னாள் ஜெயந்தி.

''எங்கே?''

''தயவு செய்து கேள்வி கேட்காதீர்கள்!''

ஒவ்வொரு கணமும் அவன் சுய உணர்வு பெற்றுத் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றாலும் அவனால் அவளுடைய பிடியிலிருந்தும் கழன்று கொள்ள முடியவில்லை. எதுவும் பேசாமல் அவளோடு விடுதியிலிருந்தும் வெளியே நடந்தான். அவன் தலையைக் குனிந்துகொண்டே நடந்தபோதிலும் தெருவில் எதிர்ப்படுபவர்களின் பார்வை தங்கள் மேல் பதிவதை அவன் உணர்ந்தான். ஒருவிதத் திருப்தியும் பெருமையும் நெருட, 'சீ' என்று தன்னை உதப்பிவிட்டுக் கொண்ட தியாகராஜனின் மனத்துள் லலிதா படர்ந்தாள்.

ஜெயந்தி நிறுத்தாமல் பேசிக்கொண்டே வந்தாள். தன் பள்ளியைப் பற்றி, தன் மாணவர்களைப் பற்றி; தன் சக ஆசிரியர்களைப் பற்றி.... எப்படி இவளால் இத்தனை கலகலப்பாகப் பேச முடிகிறது? மனத்தில் முளைத்த வார்த்தைகள் 'பட்'டென்று வெடித்து வெளியே வந்துவிட்டன.

''எப்படி என்னோட இத்தனை ஃப்ரீயாப் பேசறீங்க?'' என்று அவளை ஊன்றி நோக்கியவாறு கேட்டுவிட்டான்.

ஒருகணம் நிதானித்த ஜெயந்தி, தலையைக் குனிந்தவாறே மென்னகையுடன், ''அவர் அடிக்கடி உங்களைப் பத்திச் சொல்லிச் சொல்லி எனக்கு ஒங்களோட நேரடியாவே பழகினது போல ஒரு பிரமை'' என்றாள்.

ஏனோ அவன் மனம் விழுந்து போயிற்று. வேறு என்ன பதிலை அவன் அவளிடமிருந்து எதிர்பார்த்தான்?

''நீங்க ரொம்ப நல்லாப் பாடுவீங்களாமே, ஒங்க ஃப்ரெண்டுக்கு அதைப் பத்தி ரொம்பப் பெருமை!'' என்று தலையைக் குலுக்கியவாறே கூறினாள் அவள்.

தியாகராஜன் ஒன்றும் கூறாமல் நடந்து கொண்டிருந்தான்.

''ஒங்களைக் கல்யாணம் செய்துக்கிறவ ரொம்ப அதிர்ஷ்டசாலின்னு ஒங்க பிரண்டு அடிக்கடி சொல்லுவார்!''

அவன் எதுவும் பேச இயலாமல் தவித்தான்.

''அதுக்கு நான் என்ன சொல்லுவேன்னு கேக்கலியே, நீங்க?''

தியாகராஜன் தொண்டையைச் செருமிக் கொண்டு, உணர்ச்சியற்ற குரலில், ''அதுக்கு நீங்க என்ன சொல்லுவீங்க?'' என்றான்.

''ஆனா அவரைக் கல்யாணம் செய்துக்கிறவ சங்கீதத்தை இரசிக்கிறவளா இருக்கணும்பேன்!''

அடியுண்டவன்போல் அவளைச் 'சட்'டென்று நிமிர்ந்து நோக்கிவிட்டுச் செயலிழந்து தலையைக் குனிந்து கொண்டான் தியாகராஜன். சிட்டிபாபுவின் வீணையில் கதன குதூகலத்தைத் தான் இரசித்ததை எப்படி விளக்குவதென்று ஒரு முறை அவன் தவித்துக் கொண்டிருந்த போது, ''எந்தச் சிட்டிபாபு? பழைய மேயர், நடிகர், அவரா?'' என்று கேட்டு லலிதா அவன் உற்சாகத்தைப் போக்கியது நினைவுக்கு வந்தது.

தன்னை அந்த நினைவுகளினின்றும் விடுவித்துக் கொள்ளும் முயற்சியில் அவன் பேச ஆரம்பித்தபோது அவனையும் அறியாமல் ஒரு கேள்வி கேட்டான்: ''ஒங்களுக்குப் பிடிக்குமா, சங்கீதம்?'' என்று.

ஜெயந்தி அவனை விநோதமாய்ப் பார்த்தவாறு, ''ஒங்க ஃபிரண்டு ஒங்ககிட்ட சொன்னதேயில்லையா, நான் மொறையா சங்கீதம் கத்துக்கிட்டவள்னு?'' என்று வினவினாள்.

தியாகராஜன் ஏக்கத்தின் பிடியில் நசுங்கினான். அவனுக்கு ராமமூர்த்தி மேல்....சீ, அப்படியில்லை! ராமமூர்த்தி அதிர்ஷ்டசாலி!

ஜெயந்தி ஒரு டாக்ஸியைக் கூப்பிட்ட போது, அவன் மெதுவாக, ''எங்கே போகிறோம்?'' என்று கேட்டான்.

''நோ குவெஸ்சின் ப்ளீஸ்'' - ஒரு மென்னகை.

அவன் சலிப்புடன், ''பஸ்ஸிலே போக லாமே !'' என்றான்.

அவள் அவனை விநோதமாகப் பார்த்த வாறே, ''என்ன அப்படிச் சொல்றீங்க? ஒங்க ஃப்ரெண்டுக்குப் பஸ்ஸிலே போகவே பிடிக்காதே !'' என்றாள்.

தியாகராஜன் கடுப்புடன், ''அவன் சம்பாதிக்கிறவன்; பெரிய கம்பெனியில் நல்ல பொஸிஷன்லே இருக்கிறவன். நான் இன்னும் ஸ்டூடண்டுதானே!'' என்றான்.

''அடுத்த வருஷமே ஒரு போர்ட் மாட்டிக் கிட்டுப் பெரிய வக்கீலாயிடப் போறீங்க! அப்புறம் சீக்கிரம் சொந்தமாவே ஒரு கார் வாங்கிடுவீங்க !''

அவன் எரிச்சல் மிக்கவனாய், ''இப்ப நான் ஸ்டூடண்டுதான். அப்படியெல்லாம் செலவு பண்ண என்னாலே முடியாது!'' என்றான்.

''இன்னிக்கு முழுதும் என் செலவுதான்!'' என்றாள் அவள்.

முகத்தில் அடிபட்டவனாகப் பின்வாங்கிய தியாகராஜன், ''நான் எங்கேயும் வரலே. போறேன்!'' என்றான்.

இதற்குள் டாக்ஸி அருகில் வந்து நின்று விடவும், ஜெயந்தி பின் கதவைத் திறந்து உள்ளே ஏறி அமர்ந்தவாறே, ''கமான், டோண்ட் பீ ஸில்லி!'' என்று செல்லமாக — அப்படித்தான் அவனுக்குப்பட்டது — கடிந்து கொண்டாள். அவன் தயங்குவதைக் கண்டு அவள் தன்னருகே இருந்த இடத்தைத் தட்டி, ''கமான், டோண்ட் கிரியேட் ஸீன்ஸ்'' என்று குரலில் ஒருவித உரிமையைக் காட்டிக் கொண்டு சொன்னாள்.

அதற்கு மேலும் அவனால் எதிர்த்து நிற்க முடியவில்லை. ஒன்றும் பேசாமல் டாக்ஸியின் பின் ஸீட்டில் அவளருகே அவன் அமர்ந்ததும் அவளே அவன்புறமிருந்த கதவை எட்டிப் பிடித்துச் சாத்தினாள். அம்முயற்சியில் அவள் அவன்புறமாகச் சாய்ந்த போது, ராமமூர்த்தி அடிக்கடி வருணிக்க முயலும் அந்த மணத்தைத் தியாக ராஜன் கண்டு கொண்டான். ஏன் என்றறியாத எரிச்சலும் வெறுப்பும், சிறுமையும் அவன் நெஞ்சுள் கனமயாகி நின்ற அந்தக் கணத்திலும் அவள் எடுத்துக் கொண்ட அந்தச் சுவாதீனம் அவனுக்கு மிக்க உவப்பாகவே இருந்தது. ஆனால் அந்த உவப்பின் சாயலை அவன் இரண்டாம் பார்வையில் கண்டு கொண்டபோது தாழ்மையுணர்ச்சியும், தன் மீதே ஒரு வெறுப்பு உணர்ச்சியும் உண்டாகிவிட்டன அவனிடத்தில்.

ஹோட்டலில் டிபன் சாப்பிடும் போதும், பின்னர் கடற்கரைக்குச் சென்று ராமமூர்த்தியும் அவளும் வழக்கமாகச் சந்திக்கிற இடத்தில் போய் அமர்ந்திருந்த போதும் அவள் இதே ரீதியில் பேசிக் கொண்டிருந்தாள். தியாகராஜனின் மனம் கனத்திருந்த போதிலும் அவ்வப்போது ஒற்றை வார்த்தைப் பதில்களைச் சொல்கிற முயற்சி எடுத்துக் கொண்டான். அவள் எடுத்துக் கொண்ட உரிமைகளும், சொந்தத்தை வெளிப்படுத்துகிற அவளுடைய சிறுசிறு செயல்களும் அவனை மெல்ல மெல்லக் கட்டிப் போட்டன. இருந்தாலும் இடையிடையே ராமமூர்த்தியோடு தன்னை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டு அவனிடத்தில் தன்னை இருத்திப் பார்த்துக் கொள்ளாமலிருக்க முடியவில்லை அவனால்.



'' டெல்லியிலிருந்து வந்த மாமா நமக்காக எதுவுமே வாங்கிட்டு வரல்லேடா !''

'' சரி ! சுவரில் எழுது. மாமா ஒழிக ! மாமா டௌன், டௌன் !''

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

கடைசியில் விடைபெறும் போது ஜெயந்தி அவனிடத்தில், ''தயவுசெஞ்சு உடனே ஒங்க ஃப்ரெண்டுக்கு லெட்டர் போடுங்க!'' என்றாள்.

'இவள் யார் சொல்வதற்கு?' என்ற முறுக்கு மறுபடியும் விழித்துக் கொண்ட போதிலும் அவன் பேசாமல் இருந்தான்.

''ஒங்க ஃப்ரெண்டுக்காகத்தான் இத்தனையும் செய்யறேன். நீங்க சந்தோஷமாயிருந்தாத்தான் அவர் சந்தோஷமாயிருப்பார்'' என்று கூறிய அவள் குரலில் கனம் கூடிக் கொண்டது.

இதைக் கேட்டதும் தியாகராஜனின் மனம் ஏனோ 'பட்'டென்று பள்ளத்தில் வீழ்ந்து போயிற்று. ஃப்ரெண்டுக்காகத்தானா? வேறு என்ன..... அவள் சொன்னதற்காக மட்டும்தானா.....?

லாட்ஜுக்கு வந்து தன் அறையைத் திறந்து, கட்டிலில் விழுவதற்குள் அவன் நெஞ்சம் ஆத்திரம், ஏமாற்றம், வெறுப்பு, சிறுமை என்ற பல்வேறு உணர்ச்சிகளுக்கும் ஆட்பட்டு நைந்து போயிற்று. ராமமூர்த்தியை உதைக்க வேண்டும். காகிதத்தையும் பேனாவையும் எடுத்து வைத்துக் கொண்டு தன் ஆத்திரத்தையெல்லாம் கொட்டி மெருகேற்றிய வார்த்தைகளில், ராமமூர்த்திக்குத் தன் மேலுள்ள அளவற்ற அன்புக்கும், பரிவுக்கும் நன்றி செலுத்துகிற வகையில் தன் கசப்பைப் பாய்ச்சி ஒரு கடிதம் எழுதினான்.

எழுதி முடித்துவிட்டு, யாரையோ பழி வாங்கினாற்போன்ற பிரமையில் தனக்குக் கிடைக்க முடியாத லலிதாவைப் பற்றிய சிந்தனைகளில் தன்னை மூழ்கடித்துக் கொள்ள முயன்றான்.

- அபய கரம்
- மொழிக் குழப்பம்
- உயிர்த் துடிப்பு
- பொருளாதாரக்
- கழகப் பொன்விழா




"அரங்கமும் அம்பலமும்" என்னும் தலைப்பில் திரு ரா. கணபதி அவர்கள் எழுதியுள்ள கட்டுரையினை நானும் என் குடும்பத்தினரும் பெரு வியப்புடன் படித்து உள்ளம் மகிழ்ந்தோம். தில்லை அரங்கத்தினில், 'அஞ்சேல்' என அபய கரம் காட்டி, ஆனந்தக் கூத்திடும் எம்பிரானைத் திரு கணபதி அவர்கள் பற்பல நற்சான்றுகளோடும் திரு அரங்கத்தில் அறிதுயில் கொண்டுள்ள அரங்கநாதனுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளமையைப் படிக்கும்போதே மெய்சிலிர்க்கிறது. 'அரியும் சிவனும் ஒண்ணு' என்னும் எளிமைத் தத்துவத்தினை மிக அழகாக எடுத்துக் கூறியுள்ளார்.

சென்னை—7 அ. இராமன்

தங்கள் 21—1—68 இதழில் 'ராஷ்டிரபதியின் எச்சரிக்கை' என்ற தலைப்பில் ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதிய பயன் மிக்க தலையங்கத்தின் தமிழாக்கம் வெளியாகி இருக்கிறது. இதில் ஒரு சிறு தவறு நேர்ந்திருப்பதைத் தங்களின் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

ஹிந்தி பேசும் ராஜ்யங்களில் நிலவும் ஆங்கில எதிர்ப்புக் கிளர்ச்சி பற்றி குறிப்பிடுகையில், "ஆங்கிலத்துக்கும் ஹிந்திக்குமிடையே போராட்டம் நடப்பதாக ஒரு மகத்தான மாய எண்ணத்துக்கு ஆட்பட்டு, இந்தப் போராட்டத்தில் தேசப் பற்று நிறைந்த ராணுவ வீரர்கள் போல் ஹிந்தியை எதிர்க்க வேண்டும் என்று அந்த ராஜ்ய மக்கள் எண்ணுகின்றனர்" என்ற சொற்றொடரில் 'ஹிந்தியை' என்பதற்குப் பதில் 'ஆங்கிலத்தை' என்று இருக்க வேண்டும்.

நெய்வேலி,
20—1—68 திருவையாறு சுந்தரேசன்

தவறுக்கு மிகவும் வருந்துகிறோம் -ஆசிரியர்

'தன்னேரில்லாத் தலைவனைப் படைத்து' அர்த்தமற்ற 'ஆர்ப்பாட்டங்களை'ச் செய்யாமல், மனிதப் பண்பின் முழுமையையும், மனித மனத்தின் தன்மையினையும் வெளிப்படுத்தி, 'சொல்லை இசைத்துக் கவினுறவே நல் சுந்தரமாம் ஒரு காப்பியம்' செய்துள்ளார் 'மணக்கோலம்' ஆசிரியர்.

ஆசிரியரின் பேனா வரைந்த கதாபாத்திரங்கள் தமிழகத்தின் எங்கேயோ ஒரு மூலையில் உயிர்த் துடிப்போடு இயங்கிக்கொண்டிருப்பவைதான்!

பங்களூர்-19 என். கிருஷ்ணமூர்த்தி

தற்கால வாழ்க்கையின் பல அம்சங்களை ஆசிரியர் பி. வி. ஆர். நாவலாக்கிக் கவைகுன்றாமல் படைத்து விட்டார். நேர்மைக்கோர் சந்தானம்; பெண்களைப் பெற்று வளர்க்கும் பெரும் பொறுப்புடன் தாய்மைக்கே எடுத்துக் காட்டாகப் பாகீரதி அம்மாள்; "நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே" என்பதுபோல் தன் மகனேயானாலும் குற்றம் செய்தவன் சிறை செல்ல வேண்டும் எனும் தாயாக லட்சுமி அம்மாள்; பழமைக்கும் பண்புக்கும் உழைப்புக்கும், அடக்கத்துக்கும் ஒரு சீதா; இக்கால நாகரிகத்துக்கும் துணிவுக்கும் எடுத்துக்காட்டாகக் காதலன் கள்வனேயானாலும் இருத்தலாம் என எண்ணும் ஜானு, என்று இப்படிப் பல உயிர்த் துடிப்புள்ள பாத்திரங்களுடன் மணக்கோலம் தந்த திரு பி. வி. ஆர். அவர்களை எத்தனை போற்றினும் தகும்.

கே. பார்த்தசாரதி
சென்னை—32 ஆர். சத்தியநாராயணன்
என். நந்தகுமார்

சென்னையில் அண்மையில் பெய்த கலாசார மழையிலும், தமிழ் முழக்கத்திலும் சென்று நடைபெற்ற இந்தியப் பொருளாதாரக் கழகத்தின் பொன் விழா மாநாட்டு நடவடிக்கைகள் மிகுதியான கவனத்தை ஈர்க்காது போயின.

பாரதத்தின் உப - ராஷ்டிரபதி, ரிஸர்வ் பாங்க் கவர்னர் திரு எல். கே. ஜா, மற்றும் இந்நாட்டின் தலைசிறந்த பொருளாதார நிபுணர் பலரும் பங்கு பெற்ற இம்மாநாட்டில் திட்டமிடுதல், பண வீக்கம், விநியோக முறைகள் பற்றிய பல்வேறு கருத்துக்கள் இடம் பெற்றன.

"மேனாடுகளில் கடைப்பிடிக்கப்பட்ட பல முறைகளை இங்கும் பின்பற்றியதால் பொருளாதாரத் துறையில் மாபெரும் தவறுகள் பல நிகழ்ந்து விட்டன" என்றார் திரு ஜா.

திருவாளர்கள் மாதுர், வி. என். வக்கீல், ஜி. எஸ். மேதா, டாக்டர் லக்டாவாலா, பி. எஸ். லோகநாதன், ஷெனாய் ஆகியோரின் உயர்ந்த கருத்துக்களும் மகாநாட்டில் இடம் பெற்றன. இவற்றில் குறிப்பிடத்தக்க பல நல்ல அம்சங்களை ஏற்கனவே நாடாளு மன்றத்திலும் ஏனைய மாநாடுகளிலும் சுதந்திரக் கட்சியும், பிற தொழிலதிபர்களும் எத்தனையோ முறை எடுத்துக் கூறிவிட்டனர். இத்தனை காலமாக எதிர்க் கட்சியினர் சொன்னபோதுதான் எடுபடவில்லை. இப்போது அறிஞர்கள் சொல்கிறார்கள். ஆற்றல் படைத்த பொருளாதாரவாதிகளும் ஆக்க வல்ல ரிசர்வ் பாங்க் கவர்னரும் சொல்கிறார்கள். இனியாவது அரசினரும், திட்டமிடுபவர்களும் பிரச்னையைத் தீர ஆராய்ந்து, நாட்டின் நலனைக் கட்சிக் கோட்பாடுகளுக்கு மேலாகக் கருதிச் செயல்படுவார்கள் என்று எதிர்பார்க்கலாமா?

சென்னை—10 மீனாட்சி கிருஷ்ணா


Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

# தலைவலியா?



# அவேதன்



## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால்செலவு தனி

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது




ஸன்லைட் சோப்பினால் சலவைசெய்து பார்த்தீர்களானால் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை! சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி! சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின்**
**சலவைக்குரியது ஸன்லைட்**

லின்டாஸ் - S. 62-140 TH (R)

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு